கழக வெளியீடு : ௫௮௫

# நல்லொழுக்கப் பாடம்








ஆசிரியர் :
திரு சேலை சகதேவ முதலியார்





திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிட்.,
திருநெல்வேலி–6. சென்னை–1.
1967

# முன்னுரை

அடியேனுக்கு இப்போது அகவை எழுபத்தேழு ஆகின்றது. ஐம்பது ஆண்டுகட்குமுன் யான் உவெஸ்லி கலாசாலையில் கல்வி பயின்று வந்தபோது உடன் மாணாக்கர் ஒருவர் 'நன்னெறி வகுப்புப் புத்தகம்' என்னும் ஒரு நூலினை எனக்குக் காண்பித்தனர். அதனை யான் ஒருமுறை படித்துப் பார்த்து அதனிற்கண்ட கருத்துக்களுக்கிணங்க, 'இங்கு நம்முடைய கடமைகள்' என்னும் தலைப்பெயர் கொண்ட ஒரு சொற்பொழிவு எழுதி அக்கலாசாலையின் கல்விக் கழகத்திற் படித்தேன். அஃது அம்மாணவர்களின் மனமுவந்த மதிப்புக்குரியதாயிற்று. அது முதல் அந்நூற் பொருள்களை நந்தம் தமிழ்மொழியில் எழுதி வெளிப்படுத்த வேண்டுமென்கிற ஓரவா எனது மனத்தின்கண் குடிகொண்டிருந்ததேயொழிய, அவ்வெண்ணம் இதுவரை நிறைவேறாமலே இருந்துவிட்டது.

சென்ற ஆண்டு அடியேன் கெழுதகை நண்பர், கழகத் தலைவர் திருவாளர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள் அப் பழைய நூற்படி யொன்றை என் கையில் கொடுத்தனர். அதனைக் கண்ணுற்றபோதே அடியேனுக்குண்டான அகமகிழ்ச்சிக் கோரளவில்லை. உடனே யான் அவருக்கு எனது பழைமையான மனக்கருத்தினை வெளியிட்டேன். அப்போது அவர் பழம் நழுவிப் பாலில் விழுந்தது போன்று அதற்கு உடனே இணங்கி விட்டனர்.

மக்களுலகின்கண் இந் நாட்களில் ஒழுக்கநிலை யென்பது பெரும்பான்மையாக இழுக்கமடைந்திருப்பது யாவராலும் எதிர்மறுக்கப்படமாட்டாததொன்று. 'நெஞ்சத்து நல்லம்யா மென்னு நடுவுநிலைமையாற் கல்வியழகே யழகு' என நமது நாலடியார் நாட்டுகின்றது. ஆகையின் செம்

மைக் கல்வியே ஒருவனுடைய ஒழுக்கம் நல்லதென்றும் தீயதென்றும் தனது மனத்துக்கே தெரிவிக்கும். உலகத்திற் கல்வியோ நிறைந்திருக்கின்றது; அக் கல்வி நிறைய நிறைய ஒழுக்கமோ குறைபாடடைந்து வருகின்றது. கல்வியறிவின் பயன் ஒழுக்கத்தில் விழுப்பமடைவதே என்று இம்முதல் நூலாசிரியராகிய ஆங்கிலேயரே குறிப்பிட்டிருக்கின்றார்.

உலகின்கண் மக்கள் பற்பல துறைகளிற் புகுந்து பாடுபட்டுழைத்து வருகின்றனர். அத்துறைகளிலெல்லாம் பொதுவாக மக்கள் உடலுக்கும் உயிருக்கும் உயர்வு தருவது நல்லொழுக்க நிலையே என்பது திண்ணம். இந்நூலிற் கண்ட ஒழுக்கப் பாடங்களை ஒருமுறை கருத்துடன் காண்பவர்கள் அப் பல்வேறுபட்ட துறைகளிற் கைக்கொள்ள வேண்டிய ஒழுக்கமுறைகளைச் செவ்வனே அறிவர் என்பது மிகையாகாது. கண்ணொளியும் உடல் வலியும் சுருங்கி எண்பது நெருங்கும் இவ்வகவையில் இந்நூலை எழுதிமுடிக்க எனக்கு வேண்டிய உதவிகளெல்லாம் புரிந்து, இத் தமிழ் நாட்டு மக்களுக்குப் பேருதவியாகச் செய்ய அடியேனை இப்பணியில் ஊக்கி வைத்த சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத் தலைவருக்கு அடியேனுடைய நன்றி வழி வழி உரித்தாகும்.

இந்நூலைத் தமது மக்களைப் படிக்கச்செய்து நல்வழியில் நடக்கவைக்கும் பெற்றோருக்கும், அவ்வாறே தமது மாணுக்கர்களை உயர்வடையச் செய்யும் ஆசிரியப் பெருமக்களுக்கும் எனது நன்றி என்றும் உரியதாகும். மேலும் பொதுவாக நந்தம் தமிழுலகு ஒவ்வொருவரையும் இந்நூலைப் படித்துப் பயனடையச் செய்வதே அடியேனுக்குத் தரும் சிறந்த ஊதியமாகும்.

சேலை
24—4—'51

சகதேவன்.

# பதிப்புரை

உலகமும் உயிர்களும் மக்களும் இணக்கத்துடன், நலம்பெற்று இன்பமாக வாழவேண்டும். இது, தடையின்றி எல்லாராலும் எக்காலத்தும் ஏற்றுக்கொள்ளக் கூடிய ஒன்று. ஆனல், இதற்கு அடிப்படையாக வேண்டத்தக்கது 'உயிரினும் சிறந்த ஒழுக்கமே'யாம். அவ்வொழுக்கம் குடும்பவாழ்வில், கல்லூரிகளில், பணித் துறையில், பொதுவாழ்வில், ஆட்சிமுறையில் தலை சிறந்து கைக்கொள்ளப்படல் வேண்டும்.

அப்பொழுதுதான் நாடும், மொழியும், நன்னெறியும் கேடின்றி நலம்பெற்று வாழும். பிறரும் நன்குமதிப்பர். அத்தகைய நல்லொழுக்கத்தை மாணவர்கட்கு இளமையி லேயே எளிதாக இனிதாகப் போதித்தல் வேண்டும். அப்போதனை அவர்கள் வாழ்நாளெல்லாம் துணைநின்று அவர்களை மேன்மேலுயர்த்தி வாழச்செய்யும்.

அந்தமுறையில் இந் 'நல்லொழுக்கப் பாடம்' முப்பது பெருந்தலைப்புக்களும், நூற்றுக்கு மேற்பட்ட உள்தலைப்புக்களும் கொண்டு மிளிர்கின்றது. ஒவ்வொரு உள்தலைப்புக்கும் தக்க மெய்வரலாறுகள் காணப்படு கின்றன. அவ்வரலாறுகள் உலகத்தின் எல்லாப்பாகங் களிலும் உள்ளவை. தக்க அகச்சான்றுகள் பொருந் தியவை. ஒவ்வொரு தலைப்பின் கீழும் பலநாட்டுப் பெரியார்களின் அறிவுறவுரைகள் தரப்பட்டுள்ளன.

எங்கள் விருப்பத்திற்கு இணங்கச் செம்மையாகவும எளிமை இனிமை ஒழுகிசைகள் பெரிதும் பொதுளவும் ஆக்கியமைத்துத் தந்த இதன் ஆசிரியர் திரு. சகதேவ முதலியாரவர்களுக்குக் கழகத்தார் நன்றி உரித்தாகுக. மாணவர்களும் ஆசிரியர்களும் பிறரும் இந்நூலை வாங்கி யும் வாங்குவித்தும் நலன் எய்துவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

# நல்லொழுக்கப் பாடம்

---

## க. சிற்றுயிர்கள்பால் அன்பு

மக்களாகிய நமக்கு வேண்டுமென்றே யாதோர் ஊறுபாடு தராதனவாகிய சிற்றுயிர்கள் பற்பல உண்டு. ஈ, எறும்பு, நண்டு, நத்தை, வண்டு, தும்பி முதலியவை அவைகளிற் சில. இவைகளைச் சிலர்—பெரும்பாலாய்ச் சிறுவர்கள், கண்டபோதெல்லாம் துன்புறுத்திக் கொன்று விடுகின்றனர். ஈக்களைத் தட்டித்தடவிப் பிடித்து நசுக்கி விடுகின்றனர். எறும்புகளைக் கும்பல் கும்பலாகக் காலால் தேய்த்து அழித்துவிடுகின்றனர். சிறுவர்கள் சிலர், பொன் வண்டைப் பிடித்துக் கழுத்தில் நூல்கட்டிச் சுழற்றுகின்றார்கள்; தும்பியை வாலைப்பற்றிப் பிடித்துக்கொண்டு அது பறந்து தப்பித்துக்கொண்டு போவதற்குச் சிறகாட்டும் ஒலி கேட்டு மகிழ்கின்றனர். இச்செயல்களை அச் சிறுவர்கள் விளையாட்டாகவும் வேடிக்கையாகவும் மதிக்கின்றனர். இவ்வாறு செய்வது மிகத் தவறு; எவ்வுயிரையும் தக்க காரணமின்றித் துன்புறுத்தக் கூடாது. சிற்றுயிர்களை இவ்வாறு வருந்தச்செய்யும் பழக்கமானது, நாளடைவில் அச்சிறுவர்கள் பெரியவர்களாகும்போது, உடனுகிய மக்களுக்கே அவ்வாறு செய்யும் துணிசெயலுக்குக் கொண்டு போய்விடும். இதுவே, பிற்காலத்தில் அவர்களை மக்கட்குப் பெருங்கேடு இழைப்பதற்குப் பின்வாங்காதிருக்கவும் செய்யும். ஆகையால், நாம் சிற்றுயிர்களை வருத்தத் துணியும்போது பெருவிலங்குகள் நம்மை எதிர்த்துத் துன்புறுத்தினல் நம் மனம் எவ்வாறு அஞ்சித் துடிதுடிக்கும் என்பதை எண்ணிப் பார்க்கவேண்டும்.

நம் வேலைக்காக நாம் மாடு குதிரைகளை வைத்துக் கொண்டிருக்கின்றோம். அவைகளை நாம் நன்ருகப் பாது

காக்க வேண்டுமல்லவா? அவைகட்கு நாம் வயிறு தளராத உணவுகொடுத்து, அவைகள் தங்கியிருக்கத் தூய்மையான கொட்டகைகளும் கட்டிவைக்கவேண்டுவது நம் கடமை. மேலும், அவைகளின் வலிமைக்கு ஏற்ற வேலை வாங்கவேண்டும். அவைகளைக் கண்டபடி அடித்துத் துரத்தக்கூடாது. முக்கியமாக அவைகள் களைத்துப்போயிருக்கும்போதும், கிழவய தடைந்திருக்கும்போதும் அவைகளிடம் வேலை வாங்குவது மக்களாகிய நமக்கு மானக்கேடான செயலாகும்.

## 1. சிறுவரும் தவளைகளும்

ஒரு பெருங்குளத்தில் கணக்கற்ற தவளைகள் வாழ்ந்திருந்தன. அக் குளக்கரையின்மேல் சில பிள்ளைகள் விளையாடிக்கொண்டிருந்தனர். அப்போது அவர்கள் அத் தவளைகளைக் கண்டு தண்ணீரின்மேல் ஒவ்வொருவரும் கற்களை எடுத்தெடுத்துத் தாறுமாருகக் கண்டபடி எறியத் தொடங்கினர்.

இவ் விடுக்கணைக் கண்ட தவளைகளெல்லாம் நோய்பொறுக்க மாட்டாமல் என்ன செய்வோமென்று பெருங் கலக்கமடைந்தன. அப்போது அவைகளில் மனவலி கொண்ட ஒரு பெரிய தவளை தண்ணீரின்மேல் தலையெடுத்து நீட்டிக்கொண்டு அச்சிறுவர்களை நோக்கி, "ஐயா! பிள்ளைகளே! இவ்வளவு சிறுவயதிலேயே நீங்கள் என் இவ்வளவு கொடுங் குணமுள்ளவர்களாயிருக்கக் கற்றுக்கொண்டீர்கள்! உங்களுக்கு விளையாட்டாக இருக்கின்ற இஃது, எங்களுக்குச் சாக்காடாக முடிகின்றதே என்பதை எண்ணிப்பாரீரோ!" என்றது.

## 2. இராமனும் கண்ணனும்

இராமன் கண்ணன் என்னும் பிள்ளைகள் உடன் பிறந்தவர்கள். இராமனுக்கு எழு வயது முடிந்தது; கண்ணனுக்கு ஐந்து வயது நடக்கிறது. இராமன் நல்ல அறிவுள்ளவன்; நேர்த்தியான குணமுடையவன்; கண்ணனும் தன் முன்னோனைப்போல் நல்லவனே; ஆனால் அவன் இளமைத் தன்மையினால் அறியாமை உடையவனாக இருந்தான். ஆகையால், அவன் அடிக்கடி தவறுகளும் செய்வதுண்டு.

ஒருநாள் இச்சிறுவர்கள் இருவரும் வயற்பக்கம் உலாவப் போனார்கள். அவர்கள் உலாவிக்கொண்டே செல்லும்போது, வழிப் பக்கமிருந்த ஒரு வேலிப்புதரில் ஒரு பறவைக்கூடு கண்ணன்

கண்ணிற்பட்டது. பிள்ளைகள் வரும் சந்தடி கேட்டதும் தாய்ப் பறவை வெருண்டு பறந்துபோய்விட்டது. இருவரும் சென்று கூட்டின் உள்ளிடத்தைப் பார்த்தனர். உள்ளே மூன்று குஞ்சுகள் தாயூட்டின இரையைத் தின்றுகொண்டிருந்தன. கண்ணன் அண்ணனைப் பார்த்து, "இக்குஞ்சுகளை வெளிப்படுத்தி வீட்டுக்குக் கொண்டுபோய் விடலாமா?" என்றான். உடனே, இராமன் அவ்வாறு செய்யக்கூடாது என்று தடுத்து அவனை நோக்கி, "தம்பி! பறவைக் கூட்டைத் திருடுவது மிக்க தவறென்று, நம்முடைய தந்தையார் எனக்கு முன்பே சொல்லியிருக்கின்றார்; நம்முடைய பெற்றோர்கள் நம்மிடம் எவ்வளவு அன்பாய் இருக்கின்றார்களோ, அவ்வளவு அன்பாய்த் தாய்ப்பறவைகள் தங்கள் குஞ்சுகளிடம் இருக்கின்றன. ஒரு கொடியோன் நமது வீட்டுக்குள் நுழைந்து, நம்மையும் நம்முடன் பிறந்த குழந்தைகளையும் தெரியாமல் எடுத்துக்கொண்டு போய்விட்டால், நம் தாய் தந்தையர் எவ்வளவோ மனம்புழுங்கி வருந்துவார்கள் அல்லவா? தாய்ப் பறவையும் தன் குஞ்சுகளை அவ்வாறே இழந்து விட்டால் எவ்வளவு துன்பமுற்றுக் கலங்கி வருந்தும் என்பதைச் சிறிது எண்ணிப்பார்! மேலும் பறவைக்குஞ்சுகள் தாயின் பாதுகாப்பு இன்றேல் உயிர் பிழைத்திருக்கமாட்டா. விளையாட்டுச் சிறு பிள்ளைகள் அவைகளைத் திருடிக்கொண்டுபோய்விட்டால், அவை படாத பாடுபட்டுச் செத்தேபோய்விடுகின்றன. ஆகையால், குஞ்சுகள் சிறகு வளரப்பெற்றுப் பறந்து தங்கள் இரையைத் தாங்களே தேடிக்கொள்ள வலிமை பெறுங்காலம்வரையில், அவைகளைக் கூட்டிலேயே விட்டுவிட்டிருப்பது மிகவும் நல்லது," என்றான். இச் செய்தியைச் சிறுவனாகிய கண்ணன், முன்பே அறிந்திருந்தானில்லை. சிறு பறவைகளையும் துன்புறுத்துவது நேர்மையற்றதும் கேடானதும் என்று கண்ணன் இப்போதுதான் தெரிந்துகொண்டான். மேலும், அவன் தன் அண்ணன் அறிவூட்டிய புத்திமதியைக் கடைப்பிடித்தொழுகவேண்டுமென்று தனக்குள்ளே உறுதிசெய்துகொண்டான்.

வேலியின் மற்றொரு பக்கத்தில் இவ்விரு பிள்ளைகளின் தந்தையார் தற்செயலாய் வந்துசேர்ந்து இவர்கள் பேச்சைக் கேட்டுக்கொண்டிருந்தார். அவர் வேலியைத் தாண்டிவந்து அவர்களைப் பார்த்துச் சொன்னதாவது: "என் அருமை மைந்தர்களே! நீங்கள் மிக நல்ல பிள்ளைகள்; இதுவரை உங்கள்மேல் அன்பு செலுத்தியிருந்ததற்கு மேலாக இப்போது உங்களிடம் மிகச்சிறந்த அன்புகாட்டுபவனாக ஆய்விட்டேன் சிறு பறவைகளின் துயரம் எண்ணிப்பார்க்கும்போது மிகச்சிறுமையுடையதே. ஆனாலும் குற்றமற்ற பறவைக் குஞ்சுகளை வேண்டுமென்றே திருடிக்கொண்டுபோவது பெருங்கேடான செய்கையே, சிறு குற்றம் அன்று. அவ்வாறு செய்யும் பிள்ளைகள் தாங்கள் கொடு-

மனதுடையவர்களென்று காட்டிக்கொள்கிறார்கள். மேலும், அவர்கள் பிற்காலத்தில் இன்னும் கொடியவர்களாகி விடுவார்கள். பறவைக் கூடுகளைத் திருடுவது அடாத செய்கையென்று உணர்ந்திருக்கும் இரண்டு பிள்ளைகள் எனக்கு இருக்கின்றார்கள் என்பதை நினைக்க நான் மிக மகிழ்கின்றேன்,'' என்பதாம்

## 3. சிறுவனும் உருப்பெருக்கிக் கண்ணாடியும்

ஒரு பையன் ஈக்களைப் பிடித்துச் சித்திரவதை செய்வதையே விளையாட்டுவேலையாக வைத்துக்கொண்டிருந்தான். அவன் ஓர் ஈயைப் பிடிப்பான்; அதன் சிறகுகளையும் கால்களையும் பிடுங்கிப் போட்டுவிடுவான்; அது பறந்துபோய்விட முடியாமற் பதை பதைப்பதை மகிழ்ச்சியாய்ப் பார்த்துக்கொண்டிருப்பான். சில வேளைகளில் அவன் ஈக்களைப் பிடித்துச்சேர்த்து, ஒரே கும்பலாக வைத்து நசுக்கிப்போட்டுத் தான் ஒரு செயற்கரிய செயல் செய்து விட்டதாகப் பெருமையடித்துக்கொள்வான். இக் கொடுஞ்செயல் கூடாதென்று அவனுடைய பள்ளி ஆசிரியர் எவ்வளவோ அறிவுரை சொல்லியும் அவன் அப்பழக்கத்தை விட்டானில்லை. "நம்மைப்போல் ஈக்களும் நோயை உணர்ந்து வருந்துந்தன்மை யுடையன. உன்னைப்போலவே அவைகளுக்கும் உயிரோடிருக்க உரிமையுண்டு; அவைகட்குத் தன்னிசையாய் மகிழ்ச்சியோடு வாழவும் உரிமையுண்டு; அவைகளின் உறுப்புக்களை நீ துன் புறுத்தும்போது அவைகள் துன்பப்பட்டுப் புரளுகின்றன'' என்று பலதடவை சொல்லிப்பார்த்தார். எனினும், அதனை அவன் கண்டறியவேயில்லை. ஆசிரியர் சொன்னதைக் கவனித்துக் கேட்டறியவுமில்லை.

ஆசிரியர் உருப்பெருக்கிக் கண்ணாடி ஒன்று வைத்துக்கொண் டிருந்தார். அதனில் ஓர் ஈயை வைத்து மூடிவிட்டுப் பையனைக் கூப்பிட்டு அதற்குள் பார்க்கும்படி செய்து, சொல்லுகிறார்: "பையா, கவனி! அது தலைமுதல் வால்வரையில் கருப்பும் வெளுப்பும் கலந்து நிறைந்துள்ளது பார். அதன் உடம்பெல்லாம் விந்தையான மயிர் மூடிக்கொண்டிருப்பதைப் பார்! அதன் தலையில் கூர்மையான இரண்டு கண்கள் இருக்கின்றன பார். அக்கண்களைச் சுற்றியிருக்கும் வெள்ளிபோலும் பளபளப்புள்ள மயிர்களைப் பார்! ஒன்றிலொன்று புகுந்துகொண்டிருப்பதுபோற் காணப்படும் அதன் இருபங்கான முண்டத்தை (உடம்பை)ப் பார்! அதன் இறகுகள் பளபளப்புக் காட்டிக்கொண்டு அதன் உடம்பையெல்லாம் புனைவு செய்துகொண்டிருப்பதைப் பார்! அஃது ஓர் அரசமகளின் உறுப்பைத் தோற்கடித்துக்கொண்டி ருப்பதைப் பார்!'' என்றார். அப்பையன் இவ்வாறு அக் கண்ணாடிக்குள் கண்டதைப்பற்றி மிக வியந்து மகிழ்ச்சி

யடைந்ததுமல்லாமல் அத்தகைய உயிர்ப்பொருளின் பெய ரையும், தன்மைகளையும் தெரிந்துகொள்ள மிகவிரும்பினான். ஆசி ரியர் அதனைக் கண்ணாடியினின்றும் எடுத்துப் பையன் கண்ணின் முன்காட்டினார். அது வேறொன்றுமில்லை; பையன் துன்புறுத்திக் கொண்டிருந்த ஈக்களைப் போன்ற ஓர் ஈயே. இனிமேலும் அவன் அத்தகைய கொடுமை செய்ய மனங்கொள்வானோ?

## 4. கைதியும் எலிகளும்

பாரீஸ் நகரில் தோடன் என்னும் ஒருவன் சிறைச்சாலை ஒன் றில் ஒரு சிறுஅறையில் தனியாகப் பலஆண்டுகள் அடைத்துவைக் கப்பட்டிருந்தான். நாள்தோறும் அவனுக்கு உணவு கொண்டுவரும் வேலையாள் தவிர அவனுடன் எவரும் இல்லை. ஒரு சிறைச்சாலைச் சிற்றறையில் பேச்சுத் துணையின்றித் தனியாக உயிர்வாழ்ந் திருப் பதைவிட ஒருவனுக்குக்கொடுந் துயர்விளைவிப்பதுவேறொன்றில்லை யல்லவா? தோடன் அறையில் வெளிச்சம் ்ன்பதே இல்லை. அவ் வறையின் அகலச்சுவரில் சிறிது நீண்ட வெடிப்புச் சந்து ஒன்று இருந்தது. அச்சந்துஒன்றுதான் அவ்வறைக்கு வெளிச்சம் தருவது தோடன் அச்சந்தின் மூலமாகவெளியிடத்தைப் பார்த்துக்கொண் டிருக்கும்போது, அச்சந்தின் கோடியண்டை ஓர் எலிவரக் கண் டான். பொதுவாக மக்கள் எலிகளைக்கண்டால் வெறுப்படைகின் றார்கள் அல்லவா? தனியனாகிய ஒருவனிடம் எந்த உயிர்ப்பொரு ளாவது வரக்கண்டால் மகிழ்கூர்வானல்லவா? அம்முறையில் அவ்வெலிவெருண்டுபோய்விடாதபடி, தோடன் சந்தடிசெய்யாமல் ஒரு சிறு அப்பத் துண்டை அதனிடம் போட்டான். அது முன் னுக்குவந்து அத்துண்டையெடுத்துத் தின்றுவிட்டு, தனக்கு இன் னும் வேண்டுமென்றுதெரிவிப்பதுபோல் அவ்விடம்விட்டுப் போய் விடாமல் அங்கேயே இருந்தது. தோடன் சிறிது குறைந்த தொலை வில் இன்னொரு துண்டைப்போட்டான். அவ்வெலிவந்து அதனை யும் தின்றுவிட்டது. பிறகு இன்னுங் குறைந்த தொலைவில் அவன் இன்னொரு துண்டைப் போட்டான். அஃது ஆசைப்பட்டு அவன் அருகிலேயே வந்து அதனையும் எடுத்துத் தின்றுவிட்டது. இவ் வாறு அக்கைதி அவ்வெலி தன்னிடம் நம்பிக்கை வைக்கும்படி செய்துவிட்டான். அவன் அப்பத் துண்டுகளைப் போடப்போட அஃது அவன் கிட்டவே வந்திருந்து அவைகளை எடுத்துத் தின்று கொண்டிருந்தது. அவ்வெலி அவ்வாறு வயிறு நிறையத் தின்று வெறுத்துப் போய்த் தன்னால் தின்ன முடியாத துண்டுகளை எடுத்துக்கொண்டு தன் வளைக்குத் திரும்பிப் போய்விட்டது.

மறுநாள் அவ்வெலி அவ்வறைக்கு வந்தது. தோடன் அத னிடம் ஒருதுண்டு அப்பத்தையும், ஒருசிறிய இறைச்சித் துண்டை யும் போட்டான். அவைகளை அது மிகச் சுவைபடத் தின்றது.

மூன்றும் நாள் அது வந்து தோடன் கையில் இருந்ததைத் தானே எடுத்துத் தின்றது. அஃது அதற்குள்ளாக அவனிடம் அவ்வளவு பழகிப்போயிற்று. ஐந்தாம் நாள் அவ்வெலி தன் இருப்பிடத்தை விட்டு, அச்சுவர்ச்சந்தின் பக்கத்திலேயே ஒருசிறு வளைதோண்டிக் குடிகொண்டுவிட்டது. இதனால் அது தன் உதவியாளன் கிட்டவே யிருக்க எண்ணியதுபோலும். அது மறுநாள் விடிந்தவுடனேவந்து அவனிடம் காலையுணவு உண்டுவிட்டுப்போய் அன்றெல்லாம் அவனிடம் வரவே இல்லை. மறுநாட் காலை அஃது ஒருபெண்ணெலித் துணையோடு அவ்வறைக்கு வந்தது. அப்பெண்ணெலி தோடனைக் கண்டு அஞ்சி அவ்வளைக்குள்ளிருந்து எட்டியெட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது.

தோடன் அதனை ஆசைகாட்டித் தன்னிடம் வரச்செய்ய அப்பத்துண்டையும் இறைச்சித் துண்டையும் அதற்கெதிரே போட்டான். ஆனால், அஃது அவற்றினிடம்வர நிரம்ப நேரம் துணியவே இல்லை. கடைசியாக ஆணெலி ஆசையோடும் ஆவலோடும் அத்துண்டுகளை எடுத்துத் தின்பதைக் கண்டு பொறாமல் அப்பெண்ணெலி திடீரென்று ஒரு பாய்ச்சல் பாய்ந்துவந்து ஒரு துண்டைப் பற்றியெடுத்துக்கொண்டு உடனே திரும்பி ஓடோடிப் போய்விட்டது. இவ்வாறிருக்கச் சில நாட்களிலேயே அப்பெண்ணெலி மனவுறுதியுற்று அவ் ஆணெலியோடு துண்டுகளுக்காக மாறுபட்டு வழக்காடத் தொடங்கிற்று. ஒவ்வொருவேளையில் அப்பெண்ணெலியே வெற்றிபெற்றுத் துண்டுகளைப் பிடுங்கிக்கொண்டு போய்விட்டாலும் போய்விடும். அப்போது ஆணெலி முறையிட்டுத் தன்னைத்தேற்றுதல் வேண்டுவதுபோல் தோடனிடம் வரும். அப்போது தோடன் இழப்புக்கு ஈடுசெய்வதற்காக அப்பத் துண்டோ இறைச்சித் துண்டோ ஏதோவொன்று அதற்குக் கொடுப்பான். அப்போது அஃது அவன்பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு பெருமிதத்தோடு அத்துண்டைத் தின்னும். பிறகு அஃது அவன் தொடையின்மேல் குந்தி அத்துண்டைக் குரங்கைப்போல் காலில் தூக்கி வைத்துக்கொண்டு பெண்ணெலியைப் பார்த்து, "பெண்ணே! இதோ இத்துண்டை என்னைக்கிட்டிப் பிடுங்கிக் கொண்டுபோய்விடு பார்ப்போம்," என்று சொல்லுவது போல் ஆரவாரம் செய்யும். தன்னைக் காப்பாற்றக்கூடிய தோடன் தொடைமேல் அஃது இருக்கின்றதல்லவா?

தோடன் கிட்டவே இருந்து ஆணெலி எப்போதும் தீனியெடுத்துத் தின்றுகொண்டிருக்க, பெண்ணெலி சில நாட்கள் அவ்வாறு செய்யக் கூச்சப்பட்டுக்கொண்டிருந்தது. தன் உடனுளி யாதொரு குறைவுமின்றி நலமோநாள் தள்ளிக்கொண்டிருக்க, தான் பட்டினி கிடப்பது பெண்ணெலிக்குப் பொறுக்க முடியாத துயரமாயிற்று. ஒரு நாள், தோடன் முதல் துண்டை ஆணெலியிடம்

போட்டதும், பெண்ணெலி ஒரேபாய்ச்சல் பாய்ந்து அத்துண்டை ஆணெலியின் வாயினின்றும் தன் பற்களால் பிடித்திழுத்தது. ஆணெலியோ பிடித்தபிடி விடவில்லை. பெண்ணெலி முரட்டுத் தனமாய்த் துண்டைப் பிடித்திழுத்தது; இவ்வாறு இரண்டுக்கும் ஒன்றினின்றும் ஒன்று அத்துண்டை இழுக்கப்பெரிய போராட்டம் நடந்தது. இப்படியேஇரண்டும் ஒன்றேடொன்று புரண்டுபுரண்டு ஓடக் கடைசியில் பெண்ணெலி ஆணெலியை இழுத்துக்கொண்டு தங்கள் வளைக்குள் நுழைந்துவிட்டது. இவ்வியத்தகு நிகழ்ச்சியைக் கண்ட தோடன் தன்னையும் மறந்து தன் தீவினைப் பயனுல் வந்த சிறை வாழ்க்கையையும் சிலவிநாடிகள் மறந்தேஇருந்துவிட்டான்.

வரவரப் பெண்ணெலியும் பழக்கப்பட்டுப்போய்த் தோடன் கையிலிருந்தே நாள்தோறும் தீனி எடுத்துத் தின்றுகொண்டிருந் தது. சின்னுட்களில் அவைகளுடன் மூன்ரும் எலி ஒன்று வரத் தொடங்கிற்று. இஃது அவைகளைப்போன்று முதன்முதல் அவ்வ ளவுகூச்சப்படவில்லை மூன்ருவதெலிஇரண்டொருநாட்களுக்குள் ளாகவே மற்றிரண்டுடன் பழகிப்போய்விட இவைகள் மூன்றும் ஒரே குடும்பம் என்று எண்ணும்படி ஒன்றுகூடி வாழ்ந்தன. இன் னும் சின்னுட்களில் அவைகளுடன் ஒவ்வொன்ருகப்பத்து எலிகள் வந்து சேர்ந்து தோடனைச் சுற்றிக்கொண்டன. தோடன் அவை கள் ஒவ்வொன்றுக்கும் பெயர் கொடுத்தான். பழக்கத்தின் மூலம் ஒவ்வொன்றும் தன்தன் பெயரைத் தெரிந்து கொண்டிருந்தன. தோடன் பெயரிட்டழைத்தால் அப்பெயருக்குரியதே அவனிடம் வரும் சில நாட்கள் அவ்வெலிகளைத் தன் தட்டிலேயே உண வெடுக்க விட்டிருந்தான்; ஆனல், அது வரவர அவனுக்கு அரு வருப்பாயிருந்தது. ஆகையால், பிறகு அவன் அவைகளுக்கென்று வேருெரு தட்டுவைத்து அவைகள் அதில் தனியாக உண்ணும்படி செய்துவிட்டான். சில வேளைகளில் அப்பத் துண்டுகளையும் இறைச்சித் துண்டுகளையும் அவன் இப்படியும் அப்படியும் எறிந்து போட்டு அவைகளைக் குதித்துக் குதித்து வந்து எடுக்கும்படி செய்வான். அவைகள் உணவுகொண்ட பின்பு அவைகளை நடனம் ஆடும்படி செய்வான். சுருங்கச் சொல்லின் அவ்வெலிகளெல்லாம் அவனுக்கு விளையாட்டுப் பிள்ளைகளாய் விட்டன. இவ்வாறு தோடன் அவைகளால் பேரின்பம் கொண்டிருந்தான்.

அப்போது அவன் விடுதலையைப்பற்றி எண்ணவே யில்லை! எனெனில், உலகில் கொடுமையும் தொல்லையுந்தானே கண்டான்! ஆனல், சிறைச்சாலையிலோ இப்போது அன்பும் அமைதியுமே நுகர்கின்ருன். எலிகளுடன் அவன் அடைந்திருந்த மகிழ்ச்சி நீண்ட நாள் நிற்கவில்லை. இரண்டாவதாண்டின்முடிவில் அச்சிறை யிலேயே தொலைவில் மற்ருேர் அறையில் கொண்டுபோய் வைக்கப்

பட்டான். ஐயோ பாவம்! அவ்வெலிகள் அங்கே அவனிடம் போக முடியாமல் போயிற்று. தனக்குரிய எலி நண்பர்களிட மிருந்து அவன் பிரிக்கப்பட்டுவிட்டபோது அவன் கோவென்று அழுதுவிட்டான். சிலகாலம் அச்சிறைச்சாலைத் துன்பத்தை முன் னிருந்ததற்கு மேல் மிகுதியாக உணர்ந்து வருந்தினன் என்றும், தனித்திருத்தல் எவ்வளவு துன்பந்தருவதென்றும், இவ்வாருன தனிவாழ்க்கையைக் காட்டிலும் ஒரு மகன் எத்தகைய இழிவான உயிர்ப்பொருளோடும் கூடியிருக்க விழைவான் என்பதும்இதனுல் தெரிகின்றதல்லவா? சில போது நாம் அருவருக்கின்றனவும் இகழ்வனவுமான சிற்றுயிர்கள் நமக்குச் சிறந்த துணைபுரிகின்றன என்பதையும் இக்கதை தெரிவிக்கின்றதல்லவா?

ஒரு நன்னெறியாளன் விலங்கின் உயிரை மதிக் கின்றுன். ஆனுல் தீயோன் மென்மைகாட்டும் கருணைச் செயல்கள் கொடியவைகள்.

—சாலமோன் பழமொழிகள்

---

## உ. உறவினரிடம் அன்பு

உறவின் முறையாரிடமும் நாம் அன்பாய் நடந்து கொள்ளவேண்டும். முதன்மையாக நம்முடைய தாய் தந்தை, உடன்பிறந்தவர்கள் ஆகியோர்களிடம் தனி யன்பு கொண்டு நடக்கவேண்டும். நம்மை நாமே காப்பாற் றிக்கொள்ள முடியாத நமது குழந்தைப்பருவத்தில் நம் தாய் தந்தையர் நமக்கு உணவூட்டி உடையுடுத்தி நம்மைக் கவலையுடன் வளர்த்து வந்தார்கள். அவர்கள் நம்மை அன் போடும் கவலையோடும் பாதுகாத்திராவிட்டால், நாம் பற் பல குறைபாடுகளடைந்து உயிரிழந்து போயிருப்போம். ஆகையினாலே, நாம் அவர்களிடம் நன்றியறிவுள்ளவர்க ளாய் அன்பு காட்டியிருக்கவேண்டும். மேலும் நம்மால் ஆகும் வழிகளிலெல்லாம் அவர்களுக்கு வேண்டிய நலங் களைச் செய்ய நாம் உளங்கொண்டிருக்கவேண்டும். மேலும் அவர்களுடைய முறைமையான எல்லா வேண்டுகோளுக் கும் கட்டளைகளுக்கும் கீழ்ப்படிந்து நடந்துகொள்ள மனங் கொண்டிருக்கவேண்டும்.

உடன் பிறந்த ஆண் பெண்பிள்ளைகள் ஒன்றுசேர்ந்து ஒரு வீட்டிலேயே வளர்க்கப்பட்டவர்கள். அவர்கள் ஒன்று கூடி உண்டவர்; ஒன்று சேர்ந்து விளையாடியவர்; ஒரு தாய்தகப்பன்மாரால் ஒருபடித்தாக அன்புகாட்டப் பெற்று ஒற்றுமையுடன் வாழ்ந்துவந்தவர்கள்; இத்தகைய ரான இவர்கள் எப்போதும் ஒருவர்க்கொருவர், உண்மை நட்புக்கொண்டு வாழ்ந்திருக்கவேண்டுமென்று இந்நல்லுல கம் எதிர்பார்க்கும் அல்லவா! அவர்கள் அவ்வாறே செய்யின், அவர்கள் நல்லுணர்ச்சி கொண்டவர்கள் என் றும், பிறரால் அன்பு செய்யப்படுவதற்குத் தகுதிபெற்றவர் களென்றும், அவர்களே உலகத்துக்குத் தெரிவித்துக் கொள்வார்கள் அல்லவா? ஆனால், அவர்கள் ஒருவரோ டொருவர் மாறுபட்டு வாதாடிக்கொண்டிருப்பார்களா யின், அவர்கள் நடவடிக்கை இயற்கைக்கு மாறுபட்ட தென்றும், அவர்கள் கெடுமதி கொண்டவர்களென்றும்

காணப்படுவார்களல்லவா? மேலும் நல்லோரெல்லாம் அவர்களைப் புறக்கணிப்பார்களே; ஒருவருக்கொருவர் அன்பு பூண்டு வாழும் ஆணும் பெண்ணுமாகிய ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள், தாங்கள் பெரியவர்கள் ஆகும்போது தங்கள் குடும்பநலத்தை வளரச்செய்பவர்களாவார்கள். ஆகையால், உடன்பிறந்தவர்கள் சிறுவயதிலேயே கூடுமான வழிகளிலெல்லாம் ஒருவருக்கொருவர் அன்புகாட்டி நடந்துகொள்வதில் கவலையுடன் பழகிவரவேண்டும்.

## 1. எலியும் அதன் சுமையும்

வீடுகளிலன்றிக் கப்பல்களிலுங்கூட எலிகள் கும்பல் கும்பலாக வந்து சேர்ந்து மக்கட்குத் தொந்தரவு கொடுத்துப் பொருட்கேடுஞ் செய்துவிடுகின்றன அப்போது நாம் அவைகளைப் பொறி வைத்துப் பிடித்தோ, நஞ்சிட்டுக் கொன்றோ, அல்லது வேறு யாதொரு வழியினாலோ ஒழித்துவிடுவது வழக்கமாக இருக்கின்றது.

ஒரு காலத்தில் அமெரிக்காவிலிருந்து இலிஸ்பன் நகருக்குப் போய்க்கொண்டிருந்த ஒரு கப்பலில் எலிகள் நாளுக்குநாள் விரைவாகப் பல்கிப் பெருகி மிகத் தொந்தரவு விளைத்தன. அவைகள் பண்டங்களைத் தின்றுவிடுவதுமல்லாமல் நல்லநல்ல பொருள்களுக்கும் கேடு செய்துவிட்டன. அதன்மேல் கப்பற்காரர்கள் சினமூண்டு அவைகளை முதலில் அழித்துவிட்டே மறுவேலை பார்க்க வேண்டும் என்று தீர்மானித்துக்கொண்டனர். கப்பல் இலிஸ்பன் துறையை அடைந்தவுடன், கப்பலின் கீழ்த்தட்டில் கந்தகம்போட்டுக் கொளுத்திவிட வேண்டும் என்று மீகாமன் உத்திரவு செய்துவிட்டான். எலிகள் கந்தகப்புகை நாற்றத்தைப் பொறுக்கமாட்டாமல் வளைகளினின்றும் வெளிப்பட்டு ஆங்குமங்கும் ஓடத்தலைப்பட்டன. அப்போது கப்பலாட்கள் அவைகளைக் கும்பல் கும்பலாக அடித்துக்கொன்று கொண்டு வந்தனர். கடைசியில் கப்பலின் மேல்தட்டில் ஓர் எலி மற்றொரு குருட்டுக் கிழ எலியைச் சுமந்து கொண்டு ஓடிவர அதனைச் சிலர் வியப்புடன் கண்டனர். 'ஓகோ! ஒரு பிள்ளை எலி தன் கிழத் தந்தையாகிய ஒரு குருட்டு எலியைச் சுமந்துகொண்டு தப்பித்துக்கொண்டோடப் பார்க்கின்றது, பாருங்கள்!" என்றான் ஓர் ஆள். அக்காட்சி அவ்வாட்களின் மனத்தையெல்லாம் உருகச் செய்துவிட்டது. தன் பெற்றோரிடம் அன்புகொண்ட பிள்ளையாகிய அச்சிற்றுயிரைக் கொன்றுபோட அவர்கள் மனந்துணியுமா? 'இத்தந்தையும் பிள்ளையும் வேறோரிடம் சென்று பிழைத்துப்போகட்டும்,' என்று சொல்லி அவற்றை உயிரோடுபோக விட்டுவிட்டார்கள்.

## 2. அனபாயனும் அம்பினுமனும்

சிசிலித் தீவிலுள்ள எதினு என்னும் எரிமலை ஒரு காலத்தில் என்றும் இல்லாத முறையில் மிகக் கடுமைகொண்டு வெடித்து எரியத்தொடங்கிற்று. அதில் உண்டான தீப்பொறிகளும் சிட்டங்களும் அம்மலையினுல் நாலாபக்கங்களிலும் மிக்க தொலைவிற்கு வீசி எறியப்பட்டன. அக்கம் பக்கங்களில் குடியிருந்த மக்கள் தங்கள் கையிற் கிடைத்த விலையுயர்ந்த பொருள்களை மாத்திரம் உடன் எடுத்துக்கொண்டு அங்கங்கே சிதறியோடினர். இவ்வாறு ஓடினவர்களில் அனபாயன், அம்பினுமன் என்னும் இரண்டு மைந்தர்கள், தாம் எவ்விலையுயர்ந்த பொருள்களைக் கொண்டுபோனுர்கள்? அவர்கள் தங்கள் முதுகுகளின்மேல் வைத்துத் தூக்கிக் கொண்டுபோன அருமைப் பொருள்கள் அவர்களின் பெற்றோர்களே! இத்தகைய இடுக்கணில் பெற்றோர்களைக் காப்பாற்ற வேண்டும் என்னும் மனமுடைய மைந்தர்கள் அதனை வேறு எவ்வாறு செய்யமுடியும்?

இவ்விரு சிறுவர்களின் பொறுப்பேற்ற நன்னடக்கை ஆங்கிருந்த மக்களால் மிகவும் மெச்சிக் கொண்டாடப்பட்டது. நல்ல வேளையாய் அவர்கள் சென்றவழி அம்மலையின் தீப்பொருள்கள் வந்துவிழாத இடமாக இருந்தது. அப்பக்கங்களில் அவ்வழியொன்றே பிறகு பச்சைப்பசேலென்று காணப்பட்டது. மற்றவை வறண்டுபோய்ப் பாழடைந்தன. அதைக்கண்ட மக்களெல்லோரும் அச்சிறுவர்களின் அன்புகொண்ட நன்னடக்கையினுலேயே அவ்வழி புதுமையாகக் காப்பாற்றப்பட்டது என்று நம்பிக்கைகொண்டனர். அதுமுதல் அந்நிலம் அறவோர்நிலம் எனப்பெயர்பெற்றது.

## 3. அலெக்ஸாண்டரும் அவன் தாயும்

பெற்றோர் மூடராயும் முறைகேடுடையவர்களாயு மிருந்த போதிலும், பிள்ளைகள் அவர்களிடம் பணிவுடையவர்களாய் விட்டுக்கொடுத்து நடந்துகொள்ளவேண்டும். அலெக்ஸாண்டரின் உண்மை வரலாற்றுச் செய்தியொன்று இங்கே எடுத்துக்காட்டாக அமையத்தக்கது. அஃதாவது. அலெக்ஸாண்டரின் தாயார் ஒலிம்பியாள் என்பவர், அவன் வெற்றிகொண்டு ஆளும் நாடுகளின் தலைமைத்தன்மை தமக்கே வேண்டுமென்னும் தன்மையுடையவர். இதனுல், அவர் தம் மைந்தனுக்கு அடிக்கடி தொந்தரவு கொடுத்துக்கொண்டு வருவார். அவன் ஆசியாவின்மீது படையெடுத்து நாடுநாடாகக் கைப்பற்றி வந்துகொண்டிருக்கும் போது, தன் தாயின்மேல் தனக்கிருக்கும் அன்புக்கு அடையாளமாக தான் அங்கங்கே பெற்ற வெற்றிப் பொருள்களிற் சிறந்தவற்றை அவருக்கு அனுப்பிவைத்துக்கொண்டிருந்தான். அவன்

அவ்வப்போது தன் தாயாருக்கு எழுதுங் கடிதங்களில், "அம்மா, அரச காரியங்களில் நீர் தலையிட்டுக்கொள்ளாதீர், என்னுடைய ஆணையாளன் அந்திபாதன் நாடுகளை அமைதியோடு ஆள விட்டு விடுங்கள்; இதனை யான் தங்களிடம் பணிவாகக் கேட்டுக்கொள் கின்றேன்," என்று அடியிற் சேர்த்து எழுதிவைப்பான். அதற்கு அவர் தம் தனையனுக்குச் சினக்குறிப்புடன் எழுதியும் அனுப்பு வார். அதனை அலெக்ஸாண்டர் பொறுத்துக்கொண்டு தனது மறுமொழிக்கடிதத்தில் இன்னும் பணிவு காட்டியே எழுதுவான். ஒரு பொழுது ஒலிம்பியார் அந்திபாதருக்குப் பொறுக்கமுடியாத தொந்தரவு கொடுக்க, அவன் அச்செய்தியை அலெக்ஸாண்டருக்கு எழுதி முறையிட்டுக்கொண்டான். அதற்கு அலெக்ஸாண்டர் என்ன மறுமொழி கொடுத்தானென்றால்: "அந்திபாதரே, என் அன்னையின் ஒரே கண்ணீர்த்துளி உபமுடைய அறுநூறு கடிதங் களையும் அடியோடு அழித்துப்போட்டுவிடும் என்பதை நீர் அறியீர் போலும்!" என்பதாம்.

## 4. பிரடரீகனும் அவன் கையாளும்

பிரடரீகன் என்பவன் பிரஷியாவின் பேரரசனாக இருந்தான்; அவன் ஒருநாள் எச்சரிக்கை மணியொலி செய்தான். அதனைக் கேட்டு எந்தப் பணியாளும் அவன் முன் காணப்படவில்லை. உடனே அவன் தன் கையாள் இருக்கும அறைக்குப் போய்க் கத வைத திறந்து பார்க்க, அவன் தனது சார்நாற்காலியில் தூங்கிக் கொண்டிருந்தான். அரசன் அவனை எழுப்ப எண்ணியபோது அவன் தன் சட்டைப்பையில் ஒரு கடிதம் வெளிக்காட்டிக்கொண் டிருக்கக் கண்டான். அக் கடிதத்தின் செய்தியை அறிய ஆவ லுடையவனாய், அதனை மெல்லவெடுத்துப் படித்தான் அரசன். அதில், "பையா, நீ உன் சம்பளத்தினின்றும் எனது செலவுக் காக அனுப்பிய தொகைக்கு நான் உனக்கு வாழ்த்துக் கூறுகின் றேன; கடவுள் உனக்கு அருள் செய்வாராக," என்று கண்டிருந் தது. அரசன் உடனே தன் இருக்கை யறைக்குச்சென்று ஒரு பணச்சுருளையை எடுத்துக் கொண்டுவந்து கையாளின் சட்டைப் பையில் நழுவவிட்டுவிட்டுத் திரும்பிப்போய் உடனே எச்சரிக்கை மணியை உரக்க அடித்தான். மணியொலி கேட்டதும் கையாள் வாரிக்கட்டிக்கொண்டு ஓடிவந்து அரசன் முன்னே நடுநடுங்கி நின்றான். "நீ நல்லதூக்கம் தூங்கினாயோ!" என்றான் அரசன். கையாள் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு வணங்கினான். வணங்கி நிற்கும்போது கையாள் தன் சட்டைப்பையில் கைவைக்க, அதில் ஒரு பணச்சுருளையைக் கண்டு இன்னும் மனங் கலங்கிப்போய்ப் பேச்சற்றுத் தடுமாறிப்போனான். "இஃது என்ன! உனக்கு என்ன நோய்?" என்றான் அரசன். "ஆ! ஆண்டவனே! எவனோ என்னைக் கெடுக்க உளங்கொண்டான்! இந்தப் பணம்

என் சட்டைப்பையில் எப்படி வந்தது என்று எனக்குத் தெரியவில்லையே!'' என்று வாய்குளறிச் சொல்லி அரசன் காலில் வீழ்ந்தான். அரசன் அவனைப் பார்த்து, "நண்பனே! நம் தூக்கத்திலும் கடவுள் நமக்கு நற்பொருள் அனுப்புகின்றார்; இத்தொகையை உன் தாயாருக்கு அனுப்பிவை; என் பேரினால் அவருக்கு வணக்கம் சொல்லு; அவரையும் உன்னையும் நான் பாதுகாப்பேன் என்று அவருக்கு நம்பிக்கை வரப்பண்ணு," என்று தேற்றரவு செய்தான்.

## 5. உடன்பிறந்தார் இருவர்

மூந்நூறாண்டுகளுக்கு முன்பு, இஸ்பனிலிருந்து கோவாவுக்கு ஒரு கப்பல் புறப்பட்டு வந்தது. அதனில் இருநூறு மக்கள் புறப்பட்டு வந்தனர். தொடக்கத்தில் அப்பயணம் நலங்காட்டியே நடந்தது. அக்கப்பல் ஆப்பிரிக்காவைச் சுற்றிக்கொண்டு வடகிழக்குமுகமாய் இந்தியாவை நோக்கி வந்துகொண்டிருக்கும்போது அஃது ஒரு பெரும் பாறைமேல் தாக்குண்டு உடைந்து போக, கடல்நீர் உட்செல்லத் தொடங்கிவிட்டது. கப்பல் முழுகிப்போகவேண்டியதுதான் என்னும் நிலைமை உறுதியாய்எற்பட்டுவிட்டது. கப்பலில் உள்ளோர்க்கெல்லாம் கலக்கமும் குழப்பமும் உண்டாகிவிட்டது. அப்பொழுது மீகாமன் உணவுப்பொருள் மூட்டை ஒன்றிரண்டைத் தூக்கி ஒரு காப்புப்படகில் போட்டுக்கொண்டு நல்வினையுள்ள நாலாறு மக்களுடன் நாவாய் விட்டகன்று கடல் மேல் வந்துவிட்டான். அக்கப்பல் உடனே முழுகியே போய்விட்டது. அப்படகுக்காரர் திசைகாட்டுங் கருவி இல்லாமலும் குடிதண்ணீர் இல்லாமலும் தெய்வமே துணையென்று நீர்மேற் போய்விட்டனர். அப்படகு இடுக்கண்பட்டுக்கொண்டே நாலு நாட்கள் பயணஞ் செய்துகொண்டு போகையில் மீகாமன் நோய்வாய்ப்பட்டிறந்தான். இஃது 'எரியுங்கொள்ளியை எறத்தள்ளினறபோ'லாயிற்று. படகில் இருந்தவர்களில் ஒவ்வொருவரும் தலைமை ஏற்க மன்றாடினர். சடைசியாக அவர்களெல்லோரும் ஒருவழிப்பட்டுத் தங்களில் ஒருவனைத் தலைவனாக ஏற்படுத்திக்கொண்டனர். படகில் உணவுப்பொருள் குறைவாக இருப்பதைககண்டு அத்தலைவன், மக்கள் கூட்டத்தைக்குறைக்கவேண்டும்என்று தீர்மானித்துக்கொண்டான். அவன் சீட்டு எழுதிப்போட்டு அதில் நான்கு என்னும் எண்ணுள்ள ஒவ்வொருவனும் நீரில் தள்ளப்படவேண்டும் என்றான். அதற்கு எல்லோரும் ஒத்துக்கொண்டனர். ஆனாலும், அக்கூட்டத்தில் இருந்த ஒரு துறவியையும், ஒரு தச்சனையும் அவ்விதிக்கு விலக்காக்கினர். ஏனெனில் துறவி துன்பத்தில் தேற்றுபவன். தச்சன் படகைப்பழுதுபார்ப்பவன். இனனும் அவர்கள் தலைவனையும்விலக்க எண்ணினர் அதற்கு அவனும் அரைமனதாகஒத்துக்கொண்டான். படகிலிருந்த இருபத்தொரு பேர்களில் நான்கென்னும் எண்ணுக்

குரியர் யாவரும் நீரில் வீழ்த்தப்படவேண்டும். அவர்களின் அக்கணக்குப்படி ஐந்துபேர்கள் ஆகின்றார்களல்லவா? அவர்களில் முதல் நால்வர் தாமாகவே நீரில் வீழ்ந்துவிட்டனர். ஐந்தாமவன் நீரில்விழ முயலும்போது படகில் இருந்த அவன் தம்பி ஓடிவந்து அவனைக் கெட்டியாகத் தழுவிக் கட்டிக்கொண்டு ஏனையோரைப் பார்த்துப் "பெரியீர்! என் அண்ணனாகிய இவர் குடும்பி; இவருக்கு மனைவி மக்களுண்டு: நானோ தனிப்பட்டவன், அவர்தம் அறத்தொழிலையான் செய்கின்றேன்; அவருக்காக யானே நீரில் மூழ்கிவிட மனங்கொண்டு துணிந்திருக்கின்றேன். தயவுசெய்து அவரை உயிரோடிருக்கச் செய்யுங்கள்," என்றான் மூத்தவனோ தம்பியின் பெருங்குணத்தைக் கண்டு வியந்து மனமுருகி மற்றவர்களைப் பார்த்து, 'பெருமக்களே! என் முறைக்காகஇன்னொருவன் உயிர் விடுவது எப்படிப் பொருந்தும்; மேலும் இவன் என முழு அன்புக்குரிய தம்பியாவான்; எனக்காக அவன் உயிர்விடுவது என் மனத்துக்கு ஒவ்வாத தொன்றாகும்," என்றான். தம்பியோ அண்ணன் கால்களைக்கெட்டியாகச் சேர்த்துப் பிடித்துக்கொண்டு அவனை நகரவொட்டாமற் செய்துவிட்டான். ஏனையோர் அவனைப் பிடித்த பிடியைத் தளர்த்த எவ்வளவோ முயன்று பார்த்தும் அவர்களால் முடியவில்லை. பிறகு அண்ணன் அவனைப்பார்த்து, "தம்பி! நீ உயிரோடிருநது என் பெண்டுகளைக் காப்பாற்று. நீயே என் குடும்பத்துக்குத் தந்தைபோல் இரு; எனக்காக நீ உயிர்விட நான் பார்த்துக் கொண்டிருக்கமாட்டேன்," என்று பலதடவை சொல்லிப் பார்த்தும் பயன்படவில்லை; தம்பி தன் பிடியை விட்டானில்லை. படகிலிருந்தோர் வேறுவழி காணாது அவன் மனப்போக்குக்கு இடங்கொடுத்து விட்டனர். அண்ணனுக்காகத் தம்பி நீரில் மூழ்கி உயிர்விட்டான்.

க. தந்தை தாய்ப்பேண்.

—ஆத்திசூடி.

உ. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.

—கொன்றைவேந்தன்

ங. அன்னை தந்தையரை மேன்மைப்படுத்து; ஆண்டவன் நீண்ட ஆயுள் அளிப்பார்.

—மோசே கட்டளை.

ச. அன்பற்ற சோறு, துப்பற்றசோறு.

—பழமொழி.

ரு. மாறுபட்ட அரசும் மாறுபட்ட அகமும், நீறுபட்டொழியும்.

—இயேசு

## ௬. எல்லாரிடத்தும் ஒழுகும் முறை

மக்களின் தொழில், திறமை, கல்வி முதலியவற்றால் அவர்களுக்கு உயர்வு தாழ்வு நிலைமைகள் ஏற்படுகின்றன. சிலர் வழக்கறிஞர்களாகவும் சிலர் மருத்துவர்களாகவும் இருக்கிறார்கள் இவர்கட்குப் பேரறிவும் பெருங்கல்வியும் இருக்கவேண்டும். சிலர் வணிகர்களாய் இருக்கின்றார்கள். இவர்கட்கு அவ்வளவு பேரறிவும் பெருங்கல்வியும் வேண்டியதில்லை. வணிகர்களுக்குத் தாழ்ந்தவர்கள் உழைப்பாளிகள்; இவர்கட்கு உடல்வன்மை இருந்தாற்போதும். வாணிபர்களிலும், தொழிற்சாலை வைத்து நடத்துவோர்களிலும், மிக்குச் செல்வம் படைத்தவர்கள் இருக்கிறார்கள். இன்னும் நிலச்செல்வம் படைத்தவர்கள் இருக்கின்றார்கள். மேலும் குருமார்கள், முறைமன்றத் தலைவர்கள், அரசியலாளர்களும் இருக்கின்றார்கள். இவ்வாறு மக்கள் நிலைமைகளில் வரிசைப்படிகள் ஏற்பட்டிருக்கின்றன.

திறமை, குணம், அலுவல் இவைகளினால் மேற்பட்ட மக்களுக்குத் தாழ்நிலையுடையார் மரியாதை கொடுத்தே தீரவேண்டும்; வீண்புகழ்ச்சி செய்வதும் அடிமைத்தன்மை காட்டுவதும் இதன் பொருள் அன்று. தன் உரிமை யென்பது ஒவ்வொருவருக்கும் உண்டு; தன் உரிமை யென்பது எக்காரணத்திலும் இச்சகம் பேசுவதும் கெஞ்சுவதும் ஆகாது.

உயர்நிலையுடையார், தாழ்நிலையுடையவர்களிடம் நேர்மையான வேலை வாங்கி அன்புகாட்டவேண்டும். தாழ்நிலை உடையார், உடன்பிறந்த மக்கள் போன்றவரே; அவ்வவர் நிலைக்குத் தக்க பெருமை ஒவ்வொருவருக்கும் உண்டு. ஆகவே, இவ்விருவகையாரும் ஒருவருக்கொருவர் காட்டவேண்டிய உயர்வுப் படிமுறைகள் இருக்கவே செய்கின்றன. தான் உயர்நிலையாளன் என்று எண்ணுகின்ற ஒருவன் தாழ்நிலையான் என்று தான் எண்ணுகின்ற ஒருவனுக்கு இழிவு செய்வானாயின் அவன் தானே அவ்வுயர்நிலைக்குத் தகாதவனாகின்றான்.

ஒரு தலைவனிடம் கூலிக்காக வேலை செய்ய ஒப்புக் கொள்கின்றவன், அவ்வேலையை அவன் செம்மையாகச் செய்யவேண்டியதுமல்லாமல், அத்தலைவனிடம் தாழ்மையாகவும் நடந்துகொள்ளவேண்டும். மேலும் வேலை வாங்குகின்ற தலைவனும் வேலையாளிடம் நல்லெண்ணமாகவும், அன்பாகவும் இருக்கவேண்டும். வேலைக்காரன் இவ்வாறு நடத்தப்பட்டால், அவன் அவ்வேலையைக் கருத்துவைத்து நன்றாய்ச் செய்து முடிப்பான். தலைவன் அன்பற்றவனானால் வேலையாள், எந்த வேலையையும் அரைகுறையாகவே முடித்துக்காட்டுவான். உண்மையான வேலையாள் கூலிப் பணத்தை விரும்புவதுபோலவே, வேலையையும் தலைவனையும் விரும்புவான். முதலாளிக்காக உயிரையும் விடத் துணியும் வேலையாட்களும் உண்டு.

ஊழியர்களை அடிமைகளைப்போல் நடத்துதல், நேர்மையாகாது. அடிமைகளைக்கூட ஆதிகாலத்தில் சில ஆன்றோர்கள் அன்போடும் ஆசையோடும் நடத்திக்கொண்டு வந்திருக்கின்றார்கள். அடிமைகளில் ஆண்டானிடம் அன்பு கொண்டு தந்நலம் பாராட்டாமல் உழைத்து அவனுக்காக உயிர் விட்டவர்களும் உண்டு.

## 1. ஆல்பான்சோ

ஆல்பான்சோ சிசிலித் தீவின் அரசன்; குடிகளிடம் அன்பு காட்டி அருள்செய்பவன். அவன் சிசிலியில் பகைவரோடு போர் புரிந்துகொண்டிருக்கையில், தன் சேனையோடு ஓர் ஆற்றைத் தாண்டவேண்டியதாக இருந்தது. ஆனால், அவன் பகைவரோ அவ்வாறு செய்யவொட்டாமல் தடுத்துக்கொண்டிருந்தனர் ஆகையால் அவன் ஒருநாளெல்லாம் அக்கரையிலேயே தங்கியிருக்கவேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிட்டது. கையில் உணவுப் பொருள்கள் ஒன்றுமில்லை. விளக்கு வைக்கும் நேரத்தில் ஒரு போர்வீரன் ஓர் அப்பத்துண்டையும் சிறிது வெண்ணெயையும் கொண்டுவந்து அவனுக்கு உண்ணக்கொடுத்தான். ஆனால், அரசனோ அதனை ஏற்றுக் கொள்ளாமல் அவ்வீரனை நோக்கித் "தம்பி, நீ கொண்டுவந்தது நல்லதே. என்னைப்போலும் போர்வீரர்களெல்லாம் பட்டினிகிடக்கும்போது நான்மாத்திரம் பசியாறலாமோ!" என்றான்.

இன்னொரு பொழுது ஆல்பான்சோ ஒரு மைதானத்தில் தனியாகப் போய்க்கொண்டிருந்தான். வழியில் சிறிது தொலைவில் ஒரு கோவேறு கழுதையானது தன் கால் சேற்றில் புதைந்து போய் நகரக்கூடாமல் இருக்க, அதை ஓட்டுவோன் தன்னாற் கூடிய வரையில் முயன்றும் அக்காலைப்பிடுங்க அவனால் முடியாமல் தவித்துத் தள்ளாடிக்கொண்டிருந்தான். அவன் போவார் வருவாரைத் தனக்கு உதவிசெய்யக் கேட்டும் பயன்படவில்லை. அப்படியே ஆல்பான்சோவையும் அவன் இன்னானென்றறியாமலே உதவிக்குவேண்டினான். அரசனே குதிரையைவிட்டு இறங்கிவந்து, அப்பாகனுக்கு உதவிசெய்யத் தொடங்கி, அக்கோவேறு கழுதையின் காலைச் சேற்றினின்றும் பிடுங்கித் தூக்கி அதனைச் சேறில்லாத இடத்துக்குக் கொண்டுபோய்விட்டான். பாகன் எவ்வாறோ உதவியாளன் அரசனென்றறிந்துகொண்டு முழங்காற்படியிட்டு மன்னனை மன்னிப்புக் கேட்டுக்கொண்டான். அரசன், "உன்மேல் ஒரு குற்றமுமில்லையே!" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டான். ஆல்பான்சோவின் இந்நற்குணம் அவன் பகைவரையெல்லாம் நண்பர்களாக்கியது.

## 2. ஆன்சனும் அவன் வேலையாளும்

ஆன்சன் என்பவர் சிறந்த நாடு காணும் ஒரு பயணக்காரர். அவர் பல நாடுகள் திரிந்து காணவேண்டியவையெல்லாம் கண்டு வீட்டுக்குத் திரும்பினார். அப்பயணங்களில் வேலைக்காரன் ஒருவனை உடன்கொண்டுபோயிருந்தனர். அவர் வீடுவந்து சேர்ந்தவுடன் அவ் வேலைக்காரன் அவரிடம் வந்து, "ஐயா! எனக்கு விடுதலை வேண்டும்," என்றான். அவர் காரணம் கேட்டதற்கு அவன் "ஐயா எனக்கு ஒரு குறைபாடுமில்லை; தங்கள் பயணத்தில் எல்லாம் யான் உழைப்பிலும் இடுக்கணிலும் உடனிருந்து வருந்தி வந்தேன்; அப்போது செருக்கோடு எனக்குக் கட்டளைகள் கொடுத்துக்கொண்டு வந்தீரேதவிர, ஒரு நேரத்திலாவது அன்புடன் வாய்திறந்து என்னோடு பேசவில்லையே!" என்றான்.

## 3. உண்மை வேலைக்காரி

உவேல்ஸ் மாகாணத்தில் உயர்நிலைப் பெண்கள் இருவர் வாழ்ந்துவந்தனர். அவர்கள் அயர்லாந்துதேசத்திற் பிறந்தவர்கள். அப் பெண்மணிகள் தங்கள் நாட்டைவிட்டு உவேல்ஸுக்கு வந்தபோது மேரி என்னும் வேலைக்காரப் பெண் ஒருத்தியை உடன் கொண்டுவந்திருந்தனர். அப்பெண் உண்மையுள்ளவளாயிருந்தாள்; அதுவுமன்றி, நம்பிக்கையுடையவளாகவும் அன்புள்ளவளாகவும் இருந்தாள். அவள் இளமை முதல் இப்பெண்மணிகளிடமே

தொழில் புரிந்துவந்தாள். பின் மூவரும் மூத்துக் கிழவிகளாய் விட்டனர். இம் மூவர்க்கும் வயது முதிரமுதிர ஒவ்வொருவருக்கும் அன்பும் முதிர்ந்துவந்தது. அவ்விரு பெண்மணிகளும் உவேல்வில் தாங்கள் இருந்த இடத்தில் இடுகாட்டில் முக்கோணமான ஒரு கல்லறைமுன்னமேயேகட்டிவைத்துச்சொண்டனர். முதலில்வேலைக்காரி இறந்தாள். அவளை ஒரு பக்கத்தில் புதைத்து அப்பக்கத்துக் கல்லறையின்மேல்-மேரி, உண்மையன்புள்ள வேலைக்காரி-என்று எழுதிவைத்தனர். பிறகு சில நாட்களில் ஒருவர்பின் ஒருவராக அவ்விரு பெண்களும் இறந்துபோயினர். அவ்விருவரையும் அக் கல்லறையின் மற்றிரண்டு பக்கங்களில் புதைத்தனர். தக்க நினைவுக்குரிய மொழிகளும் அவரவர்கள் கல்லறைப்பக்கங்களில்எழுதப்பட்டன. இம் மூவரும் நிலைமையில் வேறுபட்டவர்கள். ஒருவருக்கொருவர் அன்பிலும் மரியாதையிலும் ஒன்றுபட்டவர்கள். இம் மூவரும் ஒருநிலைப் பெண்களாகவே மதிக்கப்பட்டு, ஒருவர் பக்கத்தில் ஒருவராக, வேறுபாடு ஒன்றும் காட்டப்படாமல் அடக்கஞ் செய்யப்பட்டனர்.

## 4. ஜியார்ஜின் வேலைக்காரி

இங்கிலாந்து நாட்டில் மூன்றாவது ஜியார்ஜ் என்னும் அரசனிடம் ஒரு வேலைக்காரி இருந்தாள். அவ்வரசன் குடும்பத்திலேயே அவள் தன் வாழ்நாளைக் கழித்துவந்தாள். அந்நாட்களிலெல்லாம் அரசகுடும்பத்தில் அவள் தவறாத நம்பிக்கையும், அன்பும்கொண்டவளாக ஊழியம் செய்துவந்தாள். அவள் இறந்தபோது அவ்வரசன் அரச குடும்பத்து இடுகாட்டிலேயே அவளைப் புதைத்துக் கல்லறையின்மேல் புகழ்மொழிகள் பொறித்துவைத்தான்.

## 5. ஆண்டானும் அடிமைகளும்

உரோமாபுரியில் ஆக்டேவியஸ் ஆட்சிபுரியப் பெற்றபோது, அவனுக்கு முன்னிருந்த பிளான்கஸ் என்பவன் உயிர்தப்ப வேறிடம் ஓடிவிடவேண்டியதாயிற்று. அவனுடைய அடிமைகளை எவ்வளவோ கொடுமையாக வருத்தி ஆக்டேவியஸ் பிளான்கஸ் இருப்பிடத்தைத் தெரிவிக்கக் கேட்டான். பிளான்கஸ் அடிமைகள் அவனுக்கு அதனை வெளியிட்டார்களில்லை. ஆனாலும் ஆக்டேவியஸ் அவ்வடிமைகளை இன்னுங் கொடுமையாக நடத்திக் கொண்டே வந்தான். தன்னுடைய அடிமைகளின் துன்பத்தைக் காதால் கேட்டுப் பொறுக்கமாட்டாமல் பிளான்கஸ் வெளிப்பட்டுப் பகைவர் வாளுக்கிரையாகத்துணிந்து அவர்கள் முன்வந்து நின்றான். அவன்மேலிருந்த அடிமைகளின் அன்புக்கு மெச்சி ஆக்டேவியஸ் பிளான்கசை மன்னித்து உயிரோடு விட்டுவிட்டான்.

ஆண்டானுக்குத் தக்க அடிமைகளையும் அடிமைகளுக்குத் தக்க ஆண்டானையும் கண்டு கொண்டீர்களா?

## 6. தன்னலம் பாரா வேலைக்காரன்

இத்தாலிநாட்டில்போதசாகி என்னும் செல்வனொருவன் தன், மனைவியோடு குதிரை வண்டியிலேறி மலைப்பக்கமாகப் போய்க் கொண்டிருந்தான். அவர்கள் வேலைக்காரனும் குதிரைமேல் சவாரி செய்துகொண்டு வந்தான். அவ்விருவர்களும் முன்னும் பின்னுமாகப் போய்க்கொண்டிருந்தனர். அங்கு ஓநாய்கள் கூட்டங்கூட்டமாக வாழ்ந்திருந்தன. அவர்கள் போய்சசேரவேண்டிய சத்தார் என்னும் ஊர் மூன்றுகல் தொலைவில் இருந்தது. நடுவழியில் ஓநாய்கள் கடித்துக்கொல்லப் பின்தொடர்ந்து ஓடி வந்துகொண்டிருந்தன. இவ்விடுக்கணில் கணவன் மனைவியருக்கு இன்னது செய்வதென்று தோன்றவில்லை. அப்போது சவாரிசெய்து கொண்டுவந்த வேலையாள் இதனைக் கண்டறிந்து தலைவனிடம் வந்து, "ஐயா! எனது குதிரையை இங்கேயே கட்டிப்போட்டுவிட்டு நான் வண்டியின் பின்னால் நின்றுகொள்கிறேன். நீங்கள் விரைவாய் வண்டியைச் செலுத்திக்கொண்டுபோனால், அவ்ஓநாய்கள் குதிரையைப்பிடித்துக்கொன்று பசியாற்றிக்கொண்டிருக்கும். அதற்குள்ளாக நாம் சத்தார் போய்ச் சேர்ந்துவிடலாம்," என்று சொல்லிக் குதிரையை அங்கேயே விட்டுவிட்டு வண்டியின்பின் ஏறிக்கொண்டான். வண்டியோ விரைவாய்ப் பறந்துகொண்டு போயிற்று. ஓநாய்கள் அக்குதிரையைக் கொன்று தின்றுவிட்டுக் குருதி வெறிகொண்டு பின்னும் வண்டியை விரைந்து தொடரலாயின. அப்போது சத்தார் ஒருகல் தொலைவிலேயே இருந்தது. ஆனாலும், ஓநாய்கள் வண்டியைக் கிட்டி வந்துவிட்டன. பார்த்தான் வேலையாள்; வேறு வழிகாணாமல் செல்வர்களிடம் வந்து, "ஐயா அம்மா! இப்போது முன்னும் பின்னும் விழிப்பதிற் பயனில்லை, யான் கீழே குதித்து நின்றுவிடுகின்றேன்; என்னை ஓநாய்கள் வந்து கிட்டிக் கொன்று தின்னுமளவில் நீங்கள் ஊர் போய்ச் சேர்ந்து விடலாம்; என் பெண்டு பிள்ளைகளை மாத்திரம் நீங்கள் பாதுகாத்துக்கொள்ளுங்கள்," என்றான். மனைவியும் கணவனும் அந்நேரத்தில் வேறொன்றுஞ் சொல்வதற்கில்லாமல் "அப்படியே அப்படியே," என்றார்கள். வேலையாள் தன் தலைவர்கள்மீது முழுநம்பிக்கை வைத்துக்கொண்டு வண்டியை விட்டிறங்கி அங்கேயே நின்று கொண்டான். ஓநாய்கள் ஓடிவந்து அவன்மேல் விழுந்து அவனைக்கொன்று தின்னத்தொடங்கின. அது முடியுமுன் செல்வர் சத்தார்போய்ச்சேர்ந்துவிட்டனர். அவ்வேலையாள் துணிவுகொண்டு அவ்வாறு செய்திராவிட்டால் எல்லோரும் ஓநாய்களுக்கு இரையாக வேண்டியதுதானே!

செல்வர்கள் நலமாக வீடுபோய்ச்சேர்ந்து வாழ்ந்து வந்தனர். தம் உயிருள்ளவரையில் வேலைக்காரன் மனைவி மக்களைப் பாது காத்துக் கொண்டுவந்ததும் தவிர, அக்குடும்பத்துக்கு எதிர்கால வாழ்க்கைக்கும் வேண்டியவைகளைச் செய்துவைத்துவிட்டனர்.

க. பணக்காரர்களைப் படைத்தவரும் ஏழைகளைப் படைத்தவரும் கடவுளே; அவர் முன்னிலையில் இருதிறத் தோரும் ஒரு திறத்தவரே. ஏழைகளை வருத்துகிறவன் கடவுளை நிந்திக்கின்றான்;

உ. ஆனால், அவர்களுக்கும் பெருமை கொடுப்ப வனே அவர்களிடம் தயையுடையவன் ஆகின்றான்;

—பழமொழிகள்.

ந. தலைவர்களுக்கு மாறுபட்டுப் பேசாமல் பணிவு காட்டி எல்லா வழிகளிலும் அவர்களை மகிழ்கூரச் செய்ய வேலைக்காரர்களுக்கு அறிவுறுத்துங்கள்; அது கடவுள் கட்டளையை நிறைவேற்றுவதாகும்.

ச. தலைவர்களே! நீங்களும் வேலைக்காரர்களை எச் சரிக்கைசெய்து வைத்துக்கொண்டு அவர்கள் குற்றங்களைப் பொறுத்துக்கொள்ளுங்கள்; நம் கடவுள்மேல் உலகத்தில் இருக்கின்றார்; அங்கே அவருக்கு உயர்ந்தோர் தாழ்ந் தோர் என்பது கிடையாது.

ரு. ஏழைகளாகிய கூலிக்காரர் நம்மவரிடமாவது அயலாரிடமாவது இருந்தாலும் அவர்களை வருத்தி வேலை வாங்காதே. அவர்கட்கு அன்றாடக் கூலியை அன்றாடம் கொடுத்துவிடு; இன்றேல் அவன் முறைப்பாடு கடவுளுக்கு எட்டும் அஃது உனக்குத் தீமையே தரும்.

—பவுல்.

---

## ௧௦. கைத்தொழில்

நாம் உயிரோடிருந்து நலமுடன் வாழ்வதற்கு வேண்டிய பொருள்கள் மண்ணிலிருந்தே உண்டாகும்படி கடவுள் உலகத்தைப் படைத்திருக்கின்றார். ஆனாலும், அப்பொருள்களை நாம் உழைத்துப் பண்படுத்திக்கொள்ளாமல் பயன்படுத்த முடிகிறதில்லை; மேலும் அவை போதுமான அளவு காணப்படுவதுமில்லை. நெல்லை முளைக்கப்போட்டு வளர்த்துக் கதிர்களை அறுத்துக்கொள்ளவேண்டும். கனிப்பொருள்களைத் தோண்டியெடுத்து வேலை செய்து கட்டு முட்டுகளாகச் செய்துகொள்ளவேண்டும். நாரும், மயிரும், பஞ்சும் ஆகிய இவைகளை நூற்றெடுத்துத் துணிகளாக நெய்துகொள்ளவேண்டும். இவ்வாறு உழைத்து வேலை செய்தால்தான் மக்களுக்கும், நாட்டுக்கும் செல்வம் உண்டாகும். மக்களால் வேண்டப்படும் ஊண், உடை ஏனைய உதவிப் பொருள்கள் எல்லாம் அவர்களின் உழைப்பினாலேயே அடையப்படவேண்டும். உழைப்பில்லாத மக்களின் வாழ்க்கை கேடுகெட்டதாகும்; அவர்கள் நல்ல ஊண் உடையில்லாமல் வறுமைக்கு ஆளாவர். மேலும் அவர்கள் எதிர்காலத்துக்கென்று ஒன்றும் சேர்த்துவைக்க முடியாமல் பட்டினி கிடந்து வருந்தி உயிரிழப்பர்.

உழைப்பாளிகளே உயர்வாழ்வடைவர்; உழைப்பாளிகள் பயிர் செய்வர்; ஆடுமாடுகள் வைத்துக் காப்பர்; குடியிருக்கத் தங்கள் வீடுகளைத் தாங்களே கட்டிக்கொள்வர்; அயல்நாட்டுப் பொருள்களைக் கப்பலில் கொண்டுவந்து பயன்படுத்துவர்; தம் நாட்டின்கண் பொருள்களை உண்டு பண்ணி அயல் நாட்டுக்கனுப்புவித்துப் பெருவாணிபர் ஆவர். உழைப்புடை மக்கள் வாழும் நாட்டில மக்கள் நிறைந்து பொருள் பெருகி மகிழ்வுடன் வாழ்வர். மனத்தினாலாவது உடம்பினாலாவது உழைத்து வேலை செய்யாதவன் உடல்நலமடைந்திரான்; மனமகிழ்வு கொண்டிரான். உடல் நலத்துக்கும் மனத்திடத்துக்கும் தக்கபடி அளவாக உழைக்கவேண்டும். அளவுக்கு மிஞ்சினால் மக்கள் உடலாலும், மனத்தாலும் நோயடைவர். அது சோம்பேறித்

தனத்தின் நினைவைக் காட்டிலும் மிக்க கேட்டைத் தரும். பகலிரவு (அறுபது நாழிகையில்) மூன்றிலொரு பங்கு வேலைமேலிருந்தாற் போதும். மிகுந்த நேரம் ஓய்வு நேரமே.

## 1. நிலக்கிழவனும் அவன் மைந்தரும்

ஒருவனிடம் நல்ல வயல்நிலம் ஒன்று இருந்தது. அவன் நாட்களெல்லாம் தன் வயலிலேயே பயிர்த்தொழில் செய்துவந்தான். அவனுக்குக் கிழப்பருவம் வந்தது; அவன் சாகுந் தறுவாயிலிருந்தான். தன் பிள்ளைகளும் பயிர்த்தொழிலையே செய்து வாழ வேண்டுமென்னும் எண்ணம் அவனுக்குண்டு. அத்தொழிலில் அவர்களை ஊக்குவிக்க வேண்டி ஒரு தந்திரஞ்செய்தான்; அவன் அவர்களைத் தன் படுக்கையறைக்குக் கூப்பிட்டு வைத்துக்கொண்டு அவர்களை நோக்கி, "எனக்கிருக்கும் சொத்தெல்லாம் என் வயலே; அதனை உங்கட்கெல்லாம் பொதுச் சொத்தாக வைத்திருக்கிறேன். அஃது உங்கள் கையை விட்டுப் போகக்கூடாது. இவ்வயலில் ஓரிடத்தில் யான் ஒரு புதையல் வைத்திருக்கின்றேன். அஃது அங்கு தரைக்குக் கீழ் ஓரடி யாழத்தில் எங்கேயோ இருக்கின்றது; நினைவில்லை," என்று சொன்னான்; பிறகு, சிலநாட்களில் விண்ணுலகு சென்றான்.

பிள்ளைகள் யாவரும் தந்தை உயிர்விட்டவுடனே புதையலைக் கண்டுபிடிக்கத் தொடங்கிவிட்டனர். வயலில் அப்புதையலையடைய நிலங்களையெல்லாம் ஓரடியாழம் வெட்டித் தோண்டிப் பார்த்தனர். புதையலைக் கண்டாரில்லை. ஆயினும் அவ்வாண்டில் அவ்வயலை உழுது பயிர் செய்தனர். பயிர் செழித்து வளர்ந்து பருத்து நீண்ட கதிர்கள் விட்டன. அவை பின் விளைந்தன. அவற்றை அறுவடை செய்து அடித்துத் தூற்றினர். நெல்லில் பதர்கள் என்பதே காணவில்லை. கண்டுமுதல் நெல்லோ அம்பாரம் அம்பாரமாகக் குவிந்துவிட்டன! அதுவே உண்மையான நீடித்த புதையலாயிற்று.

## 2. பெருநிலக் கிழவன்

இத்தாலி நாட்டில் பெருநிலக் கிழவன் ஒருவன் இருந்தான். அவனுடைய வயல் அளவுக்கு மிஞ்சின செழிப்புக்கொண்டு கண்கவரத்தக்க நேர்த்தியும் அழகும் படைத்திருந்தது. இது மற்றமுதலாளிகளுக்கு மட்டற்ற பொறாமையை உண்டுபண்ணிவிட்டது. இதனால் அவர்கள் உழவனை ஒரு மந்திரக்காரன் என்று நினைத்து நீதிமன்றத்துக்கு இழுத்துவிட்டார்கள். அவன் தன் உடலுரமுள்ள பெண்ணையும், தன்னுடைய ஆடுமாடுகளையும், பயிர்த்

தொழில் கருவிகளையும் உடன்கொண்டு நீதிமன்றம் சென்றான். நீதித்தலைவர் உழவனைக் கூப்பிட்டு வழக்கின் செய்திகளைக் கேட்க அவன், "ஆண்டவரே, இதோ பாருங்கள் என்னுடைய பெண்; இவள் அவ்வப்போது வயலில் முளைக்கிற களைப் புற்களையெல்லாம் ஒன்றுவிடாமல் பிடுங்கிப் போட்டுவிடுகிறாள்; இதுவே நாள் முழுவதும் அவளுக்குண்டான வேலை; அவ்வப்போது நிலங்களுக்குத் தக்க உரங்களை ஆராய்ந்தறிந்து சேர்த்து நிலங்களிற் பெய்து வைக்கின்றேன். இதோ நீங்கள் காணும் என்னுடைய கருவிகளையெல்லாம் அவ்வப்போது பழுது பார்த்துச் சிறந்த நிலைமையில் வைத்துக்கொண்டிருக்கிறேன். இதோ பாருங்கள் என்னுடைய ஆடுமாடுகள். இவைகளை அன்றாடம் குளிப்பாட்டி நல்ல இரை கொடுத்துப் பருத்துக் கொழுத்திருக்கச் செய்கின்றேன்; மேலும் மாடுகளிடம் அளவாக வேலை வாங்கிக்கொள்கின்றேன் இவை தாம் என்னுடைய வயலில் யான் செய்யும் மந்திர தந்திரங்கள். எங்களைப்போலவே இப்போது வழக்குக் கொண்டுவந்திருக்கும் முதலாளிகள் செய்துகொள்வது கூடாத காரியமன்று, எளிதேயாகும். இவ்வாறே அவர்கள் என்னைப்போல் வியப்புக்கொடுக்கும் வயற்பலன்களையெல்லாம் அடையலாமே!" என்றான்.

நீதித் தலைவர் உழவனின் கைத்தொழில் திறமையை மெய்ச்சி வழக்கைத் தள்ளுபடி செய்துவிட்டார்.

## 5. முயற்சியுடைய கிளாரிகன்

இராணி நாட்டில் கிளாரிகன் என்னும் ஒரு தச்சுவேலைக்காரன் இருந்தான். அவன் ஒருநாள் நீதிமன்றத்துக்கென்று ஒரு விசிப்பலகை செய்தான். அவன் அஃது இருக்கும் இடத்தைமட்டப் படுத்தி மிருதுவாக்கப் படாதபாடுபட்டுழைப்பதைப் பார்த்து எல்லோரும் நகை செய்தனர். அவர்களைப் பார்த்து அத் தச்சுவேலைக்காரன், "ஐயன்மீர், இதனை யான் எனக்காகவே செய்கின்றேன்; இதன்மேல் உட்காரும் உரிமையை அடையாமல் யான் சாகமாட்டேன்," என்றான். அவன் மனம்போலவே அது முடிந்தது; எவ்வாறெனில் அவன் விடாமுயற்சி கொண்டவன்; மேலும் உண்மையும் மரியாதையும் அன்புமனமும் உடையவன். இத்தகைய முயற்சிகளின் மூலம் அவன் படிப்படியாகப் பிறரிடம் சார்ந்திருக்கும் நிலைமையை நீக்கிக்கொண்டு நேர்மையான அரைகுறையற்ற தற்சார்பு நிலைமை பெற்றுக்கொண்டான் அவனுக்குச் செல்வப் பெருக்கோடு குணத்தூய்மையும் செம்மை நிலைமையில் அமைந்துவிட்டது பிறகு சில நாட்களுக்கெல்லாம் அவன் நீதிமன்றத் தலைவனாய்த் தான் பண்படுத்திய அந்த விசிப்பலகையின் மேலே வீற்றிருக்கத்தக்க சிறப்பு நிலைமை அடைந்த பின்னரே உலக வாழ்க்கையை நீத்தான்.

## 4. பென்ஜமின் பிராங்க்ளின்

வட அமெரிக்காவில் பாஸ்டன் நகரில் மெழுகுவர்த்திசெய்து வாழ்ந்துவந்த ஒருவனுக்கு மகனாகப் பிறந்தான் பென்ஜமின் பிராங்க்ளின். குடும்பமோ ஏழைக் குடும்பம் அவனைத் தந்தையார் அச்சக வேலைசெய்ய விட்டிருந்தார். நூல்களைப் படிப்பதில் அவனுக்குப் பேரவா அவன் வருவாயில் மிச்சப்படுத்திச்சேர்த்த பணத்தையெல்லாம் புத்தகங்கள் வாங்குவதிலேயே செலவு செய்தான். ஆனாலும், அவன் ஒருபோதும் அச்சகவேலையைப் புறக்கணிக்கவில்லை. அவன் வீண்காலப் போக்குச் செய்யாமல் சிக்கனமாக வாழ்ந்து வந்தான்.

பிறகு அவன் பிலடெல்பியாவுக்குச் சென்று கீமர் என்னும் அச்சகக்காரனிடம் சிலகாலம் வேலைசெய்திருந்தான். அவன் கருத்தும் திறமையுங்கொண்டு சிறந்த மொழிநடை எழுதப் பழக்கங்கொண்டுவிட்டான். அவன் எழுதியிருந்த ஒரு கடிதத்தைக்கண்டு அம்மாகாணத் தலைவரே அவனை மெச்சிக்கொண்டார்.

அதன் பிறகு பிராங்க்ளின் இலண்டன் நகர் சென்று அங்குச் சில நாட்கள் பற்பல அச்சகக்காரரிடம் வேலைசெய்து வந்தார். அங்கும் அவர் சிக்கன வாழ்க்கையை மேற்கொண்டு மிகுபணம் சேர்த்துக்கொண்டார். அவர் தம் இருபதாம் அகவையிலேயே செய்தொழிலில் வல்லவராகவும் செல்வத்தில் மிக்கவராகவும் மதிக்கப்பட்டு வந்தார். அவர் மறுபடியும் பிலடெல்பியாவுக்கே திரும்பிவந்து பழைய தலைவராகிய கீமருடனேயே கூட்டாக ஓர் அச்சகம் ஏற்படுத்திக்கொண்டார். அச்சகத்து வேலைகளைப் பார்த்துக்கொண்டே ஒவ்வொரு நாளும் ஒரு பக்கத்துக்குக் குறையாமல் அச்செழுத்துக்கள் பொறுக்கி அடுக்கிக் கொடுத்துக்கொண்டு வந்தார் பிராங்க்ளின் விடா முயற்சியையும், உண்மைத் தன்மையையும், தவறுபடாத நடக்கையையும் கண்ட அக்கம் பக்கத்தார் அளவுபடாத அச்சு வேலைகளை அவரிடமே கொடுத்துக்கொண்டு வந்தனர். இப்படியிருக்க அவருக்குச் செல்வக் குறைவுண்டோ!

இவ்வாறானாலும் அவர் எளிய உடையே உடுப்பார்; சிக்கன வாழ்க்கையே செய்வார் அவர் சில வேளைகளில் தம் அலுவலகத்துக்கென்று வாங்கிய தாள்கட்டுக்களைத்தாமே வண்டியில்வைத்து இழுத்துக்கொண்டு போவார் இவைகளால் அவர் தம் செல்வத்தினால் ஆரவார வாழ்க்கையை மேற்கொண்டாரில்லை என்பது அறியக்கிடக்கின்றதல்லவா?

அவர் பிறகு ஒரு செய்தித்தாள் ஒன்று வெளிப்படுத்தலானார் முற்சூழ்ச்சியுடனும் திறமையுடனும் அத்தாளை நடத்திவர,

ஆயிரக்கணக்கான மக்கள் அத்தாளை வாங்கிப் படித்து அதற்குப் பெருந்துணை புரிந்துவந்தனர்.

அதன் பிறகு பிராங்க்ளின் கடையொன்றுவைத்து அதனில் காகிதத்தாள், எழுதுகோல், சிறு கத்திகள் முதலியவைகளை வைத்து வாணிபம் செய்துவந்தார். அதனுடன் கையொப்ப நூல் நிலையம் ஒன்று நிறுவி அதன்மூலம் (Poor Richerd Almanac) என்ற ஆண்டுத்தாள் ஒன்றை வெளிப்படுத்தி வந்தார். அத்தாளில் முற்சூழ்ச்சி கற்பிப்பதும், அறிவகலச் செய்வது மாகிய பொருள்களைப் பற்றி எழுதி வந்தார். மேலும் பற்பல சிறந்த பொருள்கொண்ட முதுமொழிகளையும் அதனில் தந்து வந்தார்.

பற்பல அலுவல்களால் பென்ஜமின் உடலுழைப்பிலும் மனக் கவலையிலும் ஈடுபட்டிருந்தபோதிலும் அறிவு வளர்ச்சிகு அவருக்கு நேரங்காணுமற் போகவில்லை. அவர் முப்பதாமகவை எய்து முன்னரே நாட்டாரெல்லாராலும் நன்கு மதிக்கப்பட்டார். சின்னுட்களில் பென்ஜமின் மாகாண சபையில் ஓர் உயர்நிலை யடைந்து, அடுத்த ஆண்டிலேயே அஞ்சல் நிலையத் தலைவராயினர். அரசாங்கத்தில் உயர்நிலை பெற்றிருந்தபோதிலும தம் வல்லமை யையும் திறமையையும் தம்முடன் மக்களை உயர்த்துவதிற் பயன் படுத்தவேண்டுமென்பதை அவர் மறந்தாரில்லை. மக்களின் அறிவு வளர்ச்சிக்கென்று கலையறிவுக் கழகங்களையும், கல்லூரிகளையும் நிலைநாட்டி வைத்தனர். அவர் இதுவேயன்றி இடரால் தீயினுல் நேரும் கேடுகளுக் ஈடுபடுத்தக் கேட்டீடு கூட்டச்சாலைகளையும் மக்களின் நன்மைக்கென்று நிறுவி நடக்கச் செய்தனர். சுருங்கச் சொல்லின் மாகாணத்தின் பொது நன்மைக்கான அலுவல்களை யெல்லாம் இவரே முதனின்று நடத்துவித்தார்.

இதன் பிறகு இவர் கலையறிவு ஆராய்ச்சியில் ஈடுபட்டார். உராய்தலால் உண்டாகும் சூடும், மின்னற்சூடும் ஒன்றேயென்று முதன்முதல் கண்டுபிடித்து அறிவித்தவர் பிராங்க்ளினே. அது முதல்தான் அவ்வாற்றல் மின்சாரம் என்று பெயர் பெற்றது. கலை யாராய்ச்சியிற் கண்ட இப்பயனுல் இவர் பெயர் ஐரோப்பாவெல் லாம் ஓங்கி உலகெங்கும் பரவிற்று. அமெரிக்காவின் தன்னுரி மைப் போராட்டத்தில் இவர் பெரும் பங்கெடுத்துக் கொண்டார். இதன் பிறகு இவர் இங்கிலாந்தின் அரசப்பெருந் தூதராக பிராஞ்சு அரசர் அவையில் வீற்றிருந்தார். 'வேலையில் விடா முயற்சியுள்ளவன் அரசர் முன்னே நிற்பான்' என்னும் பழ மொழிக்கு இவர் தக்க எடுத்துக்காட்டாயினர். பென்ஜமின் பிராங்க்ளின் ஓர் ஏழைக் குடும்பத்தில் பிறந்து எளிய வேலையில் அமர்ந்து தமது விடாமுயற்சியால் பெரிய வேலைகளைச் செய்து

அறிவையும் வளர்த்துக்கொண்டு அரசராலும் மதிக்கப்பெற்றுச் செல்வத்திலும் செல்வாக்கிலும் மிகுந்து சீரும் சிறப்பும் பெற்றது எல்லா மக்களாலும் இயலுவதொன்ருகுமோ! இத்தகைய தனிப் பெருமை இவர்க்கே உரியது. பெஞ்ஜமின் பிராங்க்ளின் எவ்வாறு உலகில் முதன்மைப்படி யேறினர் என்பதை அவர் தாமே தம் இலக்கியங்களில் தெரிவித்திருக்கின்ருர். அஃதாவது, "செல்வம் சேர்ந்தார்க்கு வழி, கடைக்குப் போவதேபோல் யாவருமறிந்ததே. அஃது இரண்டே மொழிகளில் அடங்கியிருக்கின்றது. விடா முயற்சி; சிக்கனம் என்பவையே. இதன் பொருள் என்ன? காலத்தை வீண் போககாதே! பணத்தைப் பாழாக்காதே! இவ்விரண்டையும் சிறந்த வழிகளிற் பயன்படுத்திக்கொள். இவ்விரண்டுமின்றி ஒன்றுமாகாது; இவைகள் உண்டேல் எல்லாமாகும். இவ்விரண்டுசகும் இரண்டாவது எச்செயலிலும் நேர்ந்த வறுமை, நேர்மை மறவாமை ஆகிய இவையேயன்றி வேறென்றில்லை. விடாமுயற்சிக்கே கடவுள் எல்லாம் அளிக்கின்ருர். இன்றுள வேலையை இன்றே செய்துமுடி. ஏனெனில் நாளைக்கு நேரும் தடைகளை யாமறியோம். நீ ஒரு வேலைக்காரனுக இருந்தால் நீ சோம்பியிருக்கத் தலைவர் கண்டால் அஃது உனக்கு மானக்கேடல்லவா! உனக்குத் தலைவன் நீயே என்று அறிந்தால் அஃது உனக்கு மானக்கேடென்று நீ அறிவாய்,

## 5. வேலையின் இன்றியமையாமை

யாருக்கும் வேலையென்பதொன்று கட்டாயம் இருந்தே தீர வேண்டும். இன்றேல் அவர்களுக்கு அறிவும் ஐம்பொறிகளும் பயனற்றுப்போய்விடும். ஒரு காலத்தில் பிரான்சில் ஒருவன் பாஸ்டில் சிறைச்சாலையில் ஏழு ஆண்டுகள் அடைபட்டுக்கிடந்தான். அங்கு அவனுக்கு வேலை செய்வதற்கு ஒன்றும் இல்லை. அவன் அறையில் ஒருநாள் பல குண்டூசிகள் அவனுக்குக் கிடைத்தன. அவன் அவைகளை எடுத்து அறையில் சிதறிப்போட்டு மறுபடியும் அவைகளைப் பொறுக்கிச் சேர்ப்பான். இப்படிச் சில நாட்கள் செய்து வந்தான். நாட்களாகவாக அவனுக்கு அவ்வொரே நிலைமையான வேலையில் வெறுப்புத் தோன்றியது. பிறகு சிதறிச் சேகரித்த குண்டூசிகளைக் கொண்டு பற்பல உருவங்களாக அடுக்கிப் பார்த்துக்கொண்டிருந்தான். இப்படியே அவன் சிறைச்சாலை வாழ்க்கையைக் கழித்துக் கொண்டான். அவன் வெளிப்பட்டுத் தன்னூர்க்கு வந்திருந்தபோது அவன் தன் நண்பர்களிடம், "யான் அவ்வாறு ஒரு வேலை கண்டு செய்திராமற்போனல் எனது ஐம்புல அறிவை முற்றும் இழந்தேயிருப்பேன்," என்று சொல்லிக் கொள்வான்.

## ஸ்பினேஸாவும், வியரும்

க. ஸ்பினேலா :—வியரே! உம் தமையனார் எதனால் இறந்து போனார்?

வியர் :—அவர் வேலையில்லாமையினால் இறந்துபோனார்.

ஸ்பினேலா :—எந்த வீரனையுங் கொல்ல அஃதொன்று போதுமே!

உ. சோம்பேறியே! எறும்பினிடத்துக்குப்போ! அறிவுள்ளவனாகு! எறும்புக்கு வழிகாட்டியில்லை; மேற்பார்வைக்காரன் இல்லை; ஆள்வோனில்லை. ஆயினும் அது வேனிற்காலத்தில் இறைச்சி உணவு தேடி வைத்துக் கொள்ளுகிறது; அறுவடை காலத்தில் நெல் உணவைச் சேகரித்துக்கொள்கிறது.

௩. விடா முயற்சியுடைய ஒருவனை நீ கண்டிருக்கிறாயா? அவன் அரசன் முன்னிலையிலே நிற்பான்; அற்பர் முன்னிலையில் நிற்கமாட்டான்.

—பழமொழிகள்

௪. நாம் ஒன்றுங்கொடுக்காமல் ஒருவன் சோற்றைத் தின்கிறதில்லை. பாடுபட்டு உழைத்துவந்த உணவையே உட்கொள்வோம், ஒருவனுக்கும் கடமைப்பட்டிருக்கமாட்டோம். எவன் வேலை செய்யவில்லையோ அவன் உணவை விரும்பக்கூடாது.

—பவுல்

௫. சுறுசுறுப்புள்ள தேனீக்கள் நாளெல்லாம் பறந்து பறந்து ஓடி, பூப்பூவாக நாடி, தேனைத்தேடிக் கொண்டுவந்து தம் கூட்டில் சேர்த்து வைக்கின்றன பார்!

௬. உழைப்பிலும் திறமையிலும் யான் அத்தேனீக்கள் போலவே இருக்க விரும்புகின்றேன்.

௭. சோம்பேறியினிடத்தில் சாத்தான் இருந்து கொண்டு குறும்புகள் செய்கிறான். புத்தகத்திலும், வேலையிலும், விளையாட்டிலும் என் காலத்தை நல்லதாகவே

கழிப்பேன். யான் கடைசிக் காலத்தில் நாட்கணக்குக் கொடுக்கவேண்டுமல்லவா ?

—வாட்ஸ்

உலகின்கண் பேர்பெற்ற மக்களெல்லாம் தத்தம் உழைப்பினாலேயே பேரெடுத்திருக்கிறார்கள். அவர்கள் அறிவிலும் நடக்கையிலும் வெவ்வேறு வகைப்பட்டவர்களா யிருந்தபோதிலும், அவர்களுக்கெல்லாம் உழைப்பே அடிப் படையாய் நின்றிருக்கின்றது. அவர்களில் எத்தனைபேர் எத்தனை நாள் பட்டினிகிடந்து வருந்தியிருக்கின்றார்கள் ! அவர்கள் எத்தனைபேர் உறக்கமின்றி ஊறுபட்டிருக்கின் றனர்! எத்தனைபேர் போர்க்களங்களில் எவ்வளவு நாட்கள் கழித்திருக்கின்றனர் ! எத்தனைபேர் மந்திரிகளாக இருந்து கவலையுடன் நாட்டுக்கு நன்மை தேடியிருக்கின்றனர் ! எத்தனைபேர் நீதி மன்றத்திலிருந்து இரவும் பகலும் மனத் தால் உழைத்து நாட்டில் நன்னடக்கையை நிலைநாட்டி இருக்கின்றனா ! அவர்கள் தங்களுக்கு உதவியாளர்களாக எத்தனை பேர்களை வைத்துக்கொண்டிருந்தனர்—சுருங்கச் சொல்லின் அவர்களெல்லாம விடா முயற்சியுடன உழைத்த வர்களே. வரலாற்று நூல்களில் இவைகளுக்கெல்லாம் எடுத்துக்காட்டுக்கள் எத்தனையோ காணப்படும்.

—ஆன்வெல்.

---

## ரு. தன்னூழியமும் தற்சார்பும்

உலகில் ஒவ்வொரு மகனும் தன் பிழைப்பிற்கும் உயர்வுக்கும் பிறர் சார்பின்றித் தற்சார்புகொண்டு தானே மூலகாரணமாகின்றானென்பது படைப்புக் கடவுளின் நோக்கமெனத் தெரியவருகின்றது. ஒருவன் தனக்கு வேண்டிய ஊண் உடைகளுக்கும் ஏனையவற்றிற்கும் பிறர் உதவி கொண்டிருக்கவேண்டுமென்பது அவர் நோக்கமன்று. ஒருவன் அவைகளைத் தனக்குத்தானே ஆக்கிக் கொள்ளவேண்டுமென்பதே அவர்தம் கட்டளையாகும். இவ்வகை தவிர வேறெவ்வகையும் ஒருவனுக்கு உறுதியான துணையும் நலனும் ஆகவே ஆகாது.

ஆகையினாலே, இளைஞர்கள் தங்கள் தேவைகளுக்காகப் பிறரை எதிர்பாராதிருக்க முயலவேண்டியது முதன்மையானது. அவரவர்கள் தங்கள் உடைகளைத் தாமே உழைத்துப்பெற்று, அவைகளைத் தாமே துப்புரவு செய்துகொள்ளவும் வேண்டும்! உணவு கொள்வதிலும் பெரும்பாலான வேலைகளைத் தாமே ஏற்றுக்கொள்ளவேண்டும். அவர்கள் இளமையிலேயே எழுதப்படிக்கக் கற்றுக்கொண்டு தம் கணக்கைத் தாமே பார்த்துக்கொள்ளவும் திறமைகொள்ள வேண்டும். விரைவில் உலக வாழ்க்கையில் நுழைந்து எல்லாவகையிலும் தற்சார்புகொண்டே அதனை நடத்துதற்கேற்ற அறிவும் ஆற்றலும் இளமையிலேயே பெற்றுக் கொள்ளவேண்டும்.

மக்கள் உலக வாழ்க்கையைச் செவ்வனே நடத்துவதற்குப் பற்றுக்கோடாக, அவர்கள் இளமையிலேயே கைத்தொழில் வேலையோ, வாணிபம் நடத்தவோ வேறு அலுவல்கள் பார்க்கவோ கற்றுப் பழக்கம் கொண்டிருக்க வேண்டும். எவனொருவன் தனக்கு ஊழியம் தானே செய்துகொண்டு தற்சார்பு கொண்டே உழைத்துப் பிழைத்து வருகின்றானோ, அவன் பிறர் விருப்பத்துக்கும் நன்மதிப்புக்கும் தகுதியுள்ளவனாகின்றான்.

சிந்திப்பதற்கு மனமும் தொழில் செய்வதற்குக் கை கால்களும் கொண்ட ஒருவன், உழைத்து ஈட்டின பிற னொருவன் பொருளால் நன்மைபெற விரும்புதல் மானக் கேடன்றோ? இச்சோம்பேறி அந்நலங்களைத் தானே உழைத்து அடைவானுபின், அஃது அவனுக்கு மன நிறைவு கொடுப்பதுந் தவிர அவ்வகை மானக்கேட்டுக்கும் ஆளாக மாட்டானல்லவா?

நாம் நேரில் செய்யவேண்டிய ஒரு வேலைக்குப் பிறரை ஏவிச் செய்தல் அறுதுறைப்பாடேயாகும். மேலும் அது கெட்டுப்போனாலும் போகும். நாம் செய்யக்கூடிய வேலை களைப் பிறரிடம் விடவே கூடாது.

## 1. வல்லாளதேவனும் வண்டிக்காரனும்

நாட்டுப்புறத்தான் ஒருவன் ஒரு பாட்டைவழியே ஒரு சுமை வண்டியை ஓட்டிக்கொண்டு போனன். பாட்டையிலிருந்த ஓர் உளையில் வணடிச் சக்கரம் ஒன்று சேற்றில் நன்றாகப் புதைந்து போயிற்று. அவன் எவ்வளவு அதட்டி அடித்து மாடுகளை ஓட்டியும் அச்சக்கரம் மேலும்மேலும் புதைந்துபோயினதே தவிர மேலெ ழும்பவில்லை. வண்டிக்காரன் அலுத்துப்போய் மனம் மிகவருந்தி "வல்லாளதேவா! வந்துதவிசெயவாயே," என்று மன்றாடித் துதித்துக் கேட்டுக்கொண்டான். வல்லாளதேவர் அவனுக் கெதிரில் வந்து நின்றுகொண்டு, "முட்டாளே! வீணுக்கேன் மாட்டைக் கொல்லுகிறாய்? நீயே உன் உடையை இழுத்து இடுப்பிற் கட்டிக்கொண்டு அச்சக்கரத்தைத் தோள்கொடுத்துத் தூக்கு, அச்சக்கரம் மேலெழும்ப மாடுகள் வண்டியை எளிதில் இழுத்துக்கொண்டு போய்விடும்; இதுவே யான் உனக்குச் செய்யும் உதவி," என்று சொல்லி மறைந்தார்.

## 2. வயலும் வானம்பாடியும்

கதிர் முற்றிய ஒரு வயலில் ஒரு வானம்பாடி குஞ்சு பொரித் துப் பாதுகாத்துக்கொண்டிருந்தது. அது வெளியே இரைதேடப் போகும்போதெல்லாம் வயலண்டை நடக்கும் செய்திகளைப் பற்றித் தனக்குத் தெரிவிக்கும்படி தன் குஞ்சுகளுக்குக் கட்டளை யிட்டுப் போகும். ஒருநாள் அக்குஞ்சுகள் தாயைப் பார்த்து, 'அம்மா! வயற்காரனும் அவன் மகனும் இங்கே வந்து வயலை விரைவில் அறுத்து விடவேண்டுமென்றும் அதற்காகத் தம்

அக்கம்பக்கத்தாரை உதவிக்கு அழைத்துக்கொள்ள வேண்டு மென்றும் பேசிக்கொண்டு போனார்கள்,' என்றன. அதற்குத் தாய்ப்பறவை, "அப்படியானால் நமக்கு அச்சமில்லை, நாம் இரண் டொருநாள் இங்கேயே தங்கியிருக்கலாம்," என்று சொல்லி மறு நாளும் அதுபோலவே குஞ்சுகளுக்குக் கட்டளையிட்டுவிட்டு வெளியேறியது.

மறுநாள் மாலையிலும் தாய் வந்தபோது அவைகள், "தாயே, நேற்று வந்த வயற்காரர்கள் இன்றும் வந்தார்கள். அக்கம் பக்கத் தார் வரவில்லையே என்றும், தங்கள் நண்பர்களை உதவிக்குக் கேட்கலாமென்றும் பேசிக்கொண்டு போய்விட்டார்கள்," என்றன. தாய்ப்பறவை அவைகளைப் பார்த்துக் "கண்மணிகளே! இப்போதும் நமக்கு அச்சமில்லை, நாம் இன்னும் இரண்டொரு நாள் இங்கேயே இருக்கலாம்," என்று சொல்லிற்று. அதற்கு மறு நாளும் அது முன்போலவே கட்டளையிட்டு வெளியேறிப்போய் மாலையில் வந்து சேர்ந்தது. அப்போது அக்குஞ்சுகள் தாயை நோக்கி, "அன்னையே! வயற்காரர் இன்றும் வந்து பேசிக் கொண்டிருக்கும்போது அவர்கள் எவரையும் உதவிக்கு நம்புதற் கில்லையென்றும், நாளையன்று தாமே வந்து அறுவடை செய்து விடவேண்டும் என்றும் சொல்லிப் போய்விட்டார்கள்," என்றன. அப்போது தாய்ப்பறவை, 'குழந்தைகளே! நாம் பொழுது விடியு முன் இவ்வயலைவிட்டு வேறிடம் போய்விடவேண்டும், வயற்காரர் கள் தம் வேலையைத் தாங்களே செய்யத் தீர்மானித்து விட்டார் களல்லவா,' என்றது.

## 3. பொருளற்ற பெருமகன் பொருள் பெற்றது

ஒரு சீமான் வயிற்றிற் பெருமகன் ஒருவன் பிறந்தான். சீமா னுடைய சொத்துக்களெல்லாம் போய் இப்பெருமகன் உதவி யற்றவனாக நின்றான். பிழைப்புக்கு வழியில்லை; என்ன செய்வான்? ஏதேனும் ஒரு தொழில் செய்யவும், அலுவல் ஒன்றைப் பார்க்கவும் அவன் கற்றுக்கொள்ளவில்லை. சீமான் வயிற்றுக் கோமான் அல் லவா இவன்? ஆனாலும், அவனிடம் ஒரு சிறந்த குணம் இருந்தது; 'போனகம் என்பது தானுழந்துண்டல்' என்னும் முதுமொழியைக் கடைப்பிடிக்கும் தன்மை. ஆதற்காகவென்று இவன் பல தொழில் துறைகளையும் எண்ணிப்பார்த்தான். வேறொன்றும் தோன்றாமல் பட்டாளத்திற் சேர்ந்துவிடத் துணிந்து அதிற்சேர்ந்தான்.

முதன்முதல் இவன் பட்டாளக் காவற்காரனாக வைக்கப்பட் டான்; இவனைத் தெரிந்த ஒரு பெரிய மனிதர் இவனிடம் வந்து தான் சேனைத்தலைவரைப் பார்க்கவேண்டுமென்றார். பிறகு அவர் இவனிடமே சிலநேரம் பேசிக்கொண்டிருந்து விட்டுச் சேனைத்தலை

வரைக் கண்டார். அவர் தலைவரைக்கண்டு பேசிக்கொண்டிருக்கும் போது அவரிடம், "இனிஸ் என்னும் சீமானின் பிள்ளை உம்மிடம் காவற்காரனாக அமைந்திருக்க நீர் பெற்றபேறு என்னவோ!" என்று சொல்லிப் போய்விட்டார். தலைவர் பெருவியப்புக்கொண்டு உடனே காவல் வேலைக்கு வேறொரு சேவகனை அனுப்பிவைத்து விட்டு இனிஸ் மகனாகிய காவலாளியைத் தம்மிடம் வரவழைத்து அவனைப் பார்த்து, "ஐயா! நீர் இனிஸ் கோமானின் மைந்தரோ?" என்ன, அதற்கு அவன் "ஆம்," என்றான். பிறகு தலைவர், "அப்படியானால் நீர் பட்டாளத்திற் சேர்ந்துகொள்ள வேண்டியது என்?" என்று கேட்டார். அதற்கு அவன், "ஐயா! யான் பட்டம் ஒன்றையே பரம்பரைப் பொருளாகப் பெற்றேனே ஒழிய அதற்குண்டான சொத்துக்கள் ஒன்றும் பெற்றேனில்லை. எவருக்கும் சுமையாக இருக்க எனக்கு மனமில்லை; எனக்குரிய உணவையும் உடையையும் யானே உழைத்துப் பெறவேண்டுமென்பது எனது கோட்பாடு. எந்தத் தொழிலும் எனக்குப் பழக்கம் இல்லை. ஆகையினாலே என் மனப்போக்கின் வழியே யான் இவ்வேலைக்கு வந்தேன்," என்று சொன்னான். அவனுடைய இச்சொற்களைக் கேட்டு முன் மிகு வியப்படைந்தவர் அப்போது பெருமகிழ்ச்சி கொண்டார்.

பிறகு சேனைத்தலைவர் இனிஸ் மகனைத் தம் வீட்டுக்கு வரவழைத்து விருந்திட்டுப் பெருமைப்படுத்தினர். உடனே பட்டாளத்தில் அத்தலைவர் இனிஸ் பெருமகனை ஓர் உயர்ந்த அலுவலில் வைத்து, அவனுக்கு ஊதியத்தையும் வரவர உயர்த்திச் சேனைக்குள் அவனைத் தலைவனாக்கினர். சில நாட்களில் சேனைத்தலைவரின் பெண்ணுக்கும் இனிஸ் மகனுக்கும் அன்பு பெருகிக் காதலும் உண்டாக உடனே இருவருக்கும் எல்லாச் சிறப்புடனும் மணம் நிகழ்ந்தது. இப்போது இனிஸ் பிரபு தன் மனைவியுடன் இல்லறத்தை நல்லறமாக நடத்திவந்தனர். தன்னூதியத்துடன் மனைவியின் உரிமைச் சொத்தும் சேர, இல்வாழ்க்கை யாதொரு குறைபாடும் இல்லாமல் நடந்தேறிவந்தது. தன்னுழைப்பு, தன்னூதியம், தற்சார்பு ஆகிய இந்நலங்களின் நற்பயனைக் கண்டு களியுங்கள்.

## 4. 'போ' என்பதற்கும் 'வா' என்பதற்கும் வேறுபாடு

ஒரு காலத்தில் ஆங்கில நாட்டில் ஒரு பெரியமனிதர் ஆண்டொன்றுக்கு ஏறக்குறையப் பன்னீராயிரம் ரூபாய் வருமானம் கொடுக்கத்தக்க நிலங்களையுடையவராக இருந்தார். அவைகளையெல்லாம் ஆட்களை வைத்துத் தாமே பயிர் செய்துவந்தார். ஆனால், சிலகாலத்தில் அவருக்குக் கடன்தொல்லை மேலிட்டுவிட்டது. அவர் அக்கடனைத் தீர்ப்பதற்காகப் பேர்பாதி நிலங்களை விற்றுவிட்டார்

மிருந்த நிலங்களை ஒரு குடியானவனிடம் இருபதாண்டுத் தவணைக் குக் குத்தகையாக விட்டுவிட்டார். அத்தவணை முடியுமுன்னரே அவன் அவ்வாண்டுக் குத்தகைத் தொகையை எடுத்துக்கொண்டு போய் அவரிடம் கொடுத்துவிட்டு அவரைப் பார்த்து, "ஐயா! உம்முடைய நிலங்களை விலைக்குக் கொடுப்பீரா?" என்று கேட் டான். பெரிய மனிதர் வியப்படைந்து, "அப்படியா! உம்மால் அவைகளை விலை கொடுத்து வாங்கிக்கொள்ள முடியுமா?" என்றார்.

"ஐயா, அஃது உங்களுக்குஉடன்பாடானால், யான் அவ்வாறே செய்கின்றேன்," என்றான். அப்போது பெரியமனிதர் குடியான வனைப்பார்த்து, "அப்பா!யான்உன்னிடத்திலிருக்கும்நிலங்களுக்கு இரண்டத்தனை வைத்துக்கொண்டு பயிரிட்டேன்; உன்னைப்போல் குத்தகைக்குக்கொடுக்கவேண்டியவேலைஎனக்கில்லை. அப்படியிருந் தாலும் யான் அதனை வைத்துப் பயிரிட்டுக்கொண்டுவந்தும் கட னாளியாய்விட்டேனே! நீ அதற்குக் குத்தகையுங் கொடுத்து, உன் குடும்பத்தையும் நடத்திக்கொண்டு என்னிடத்திலிருக்கும் பாதி நிலங்களையெல்லாம்விலைகொடுத்துவாங்கவல்லவனானது எவ்வாறு? எனக்கு ஒன்றும் புரியவில்லையே!" என்றார். அதனைக் கேட்ட குடி யானவன்புன்சிரிப்போடுபெரியமனிதரைப்பார்த்து, "ஐயா, உமக் கும் எனக்கும் வேறுபாடு இரண்டே மொழிகளில் அடங்கியிருக் கின்றன; நீர் 'போ' என்று சொன்னீர், யான் 'வா' என்று சொன் னேன்; வேறுபாடு இவ்வளவேதான்," என்றான். உடனே அவர் குடியானவனைப் பார்த்து, "ஐயா, நீ சொல்வது எனக்கு ஒன்றும் புரியவில்லையே," என்றார். அப்போது குடியானவன் சொன்னதா வது, "நீர் விடியற்காலையில் படுக்கையிலிருந்துகொண்டே உம்மு டைய வேலையாட்களை வயலுக்குப்போய் வேலைசெய்யும்படி ஏவி விட்டு, நீர் வீட்டில் இருந்துகொண்டு வேடிக்கையாகக் காலங்கழித் துக்கொண்டுவந்தீர்; யானோ பொழுது விடியுமுன் படுக்கையை விட்டு எழுந்து வயலில் செய்யவேண்டிய வேலைகள் இன்னவை யென்று முன்னமேயேஎண்ணிவைத்துக்கொண்டு, வேலையாட்கள் வந்தவுடனே அவர்களுடன் யானும் வயலுக்குச்சென்று செய்ய வேண்டிய வேலைகளை உடனிருந்து செய்துமுடித்து அவர்களை வீட்டுக்குப் போகும்படி அனுப்பிவிட்டு, யான் வயலில் பார்க்க வேண்டியவைகளைப் பார்த்துவிட்டுத்தான் மாலையில் எந்நேர மானாலும் வீடுவந்து சேர்வேன்," என்பதாம்.

மனிதன் தனக்கு நண்பன் தானே என்கிற முறை யிலேயே படைக்கப்பட்டிருக்கின்றான்; அவன் தன் வல்லமைக்குத் தக்கபடி மேன்மேலுயர விருப்பங்கொண் டிருக்கவேண்டும். இத்தகையான் இன்ன பேறும் மேன்மை யும் அடையக்கூடுமென்று கடவுள் மனத்தில் வைத்துக்

கொண்டிருக்கின்றார். இவைகளை அவன் நேர்மையான சிறந்தவழியிற் பெற்றுக்கொள்ள முயலவேண்டும்.

—மாசிஞ்சர்.

உனக்கு நீயே உதவி செய்துகொள், கடவுள் உனக்கு உதவி செய்வார்.

தலைவனின் பார்வையே எவ்வளவோ செய்யும்.

—பழமொழிகள்.

---

## ௬. இடுக்கணில் மனமழியாமை

இடுக்கணில் வேணுமென்றே இழியக்கூடாது; அப்படிச் செய்வது மதியீனம். ஆனாலும் இடுக்கண் நேரிட்டு விடுமானால் மனவுறுதியைக் கைவிடாமல், அமைதியோடு நடந்துகொள்ளவேண்டும். நாம் எவ்வளவு உன்னிப்பாக இருந்தபோதிலும் ஒவ்வோர் வேளையிலாயினும் இடுக்கண் படாமல் உயிர்வாழ முடியாது. நமது உடைகளிலாவது நெருப்புப் படலாம், வீடாவது நெருப்புப்பிடித்து எரியலாம், நாம் ஆழநீரில் தவறி விழுந்துவிடலாம், அல்லது நாம் ஒரு வண்டியில் ஏறிச்செல்லும்போது குதிரை மிரண்டு வண்டியோடு நம்மையும் இழுத்துக்கொண்டு கண்டபடியோடலாம். இப்படிப்பட்ட நேரங்களில் நமது உடல் புண்பட்டு வருந்தும்; அல்லது அதற்குச் சாக்காடே நேரினும் நேரும். ஆனாலும் நம்மால் கூடியவரையில் அமைதியோடும் சூழ்ச்சியோடும் நடந்துகொண்டால் நம்மைநாமே காப்பாற்றிகொள்ளலாம்; ஊறுபாடுகள் உண்டானாலும் அவை மிக எளிதாகப்போய்விடும்.

இடுக்கணிற் சிலர் திகிற்பட்டு மனந்தடுமாறித் தாம் அதனினின்றுந் தப்பித் தம்மைக் காப்பாற்றிக்கொள்ள யாதொரு சூழ்ச்சியுஞ் செய்துகொள்வதற்கு வகைவழியறியாமற் பாழ்படுகின்றார்கள். அதனால் இடுக்கண் மிகுதிப்பட்டுத் துன்பத்திலாழ்ந்து அவர்கள் உயிர்விடவும் நேருகின்றது. ஆகையால், இடுக்கண் வந்துழி ஏக்கத்துக்கு இடங்கொடுக்கக்கூடாது; ஆனால் நாம் அமைதியும் உன்னிப்புங்கொண்டு நேரிடவிருக்கும் துன்பத்தை நீக்கிக் கொள்ள நம்மாலான மாற்றுச் செயல்களையெல்லாம் எண்ணி நிறைவேற்றிக்கொள்ளவேணடும். அஃதே இடுக்கணில் மனம் உடையாதிருப்பதாகும். அத்தன்மையே மிக மெச்சத்தக்கதொன்றாகும்.

உடையில் நெருப்புப் பிடித்துக்கொண்டால் வெருண்டு இங்குமங்கும் ஓடக்கூடாது. அப்போது அப்

படியே நின்றுகொண்டிருந்தாலும் ஓடினாலும் தீ விரைந்து பற்றி எரிந்து உடலைக் கரியாக்கிவிடும். எவரும் பக்கத்தில் இல்லாவிட்டால் அந்நேரத்தில் உடனே கீழே விழுந்து புரளவேண்டும் அப்படிச் செய்தால் தீப்பற்றுதல் அடங்கி அவியத்தொடங்கிவிடும். பக்கத்திலிருப்பவர்கள் கம்பளியையாவது துப்பட்டியையாவது உடம்பைச்சுற்றி நெருங்க மூடிவிட்டால் தீ அவிந்தே போய்விடும்.

ஒரு வீடு பற்றிக்கொண்டு உள்ளே புகை நிறைந்திருந்தால், ஒருவன் உள்ளே நிமிர்ந்து போகக்கூடாது. அப்படிச் செய்தால் உடல் திக்குமுக்குப்பட்டு மூச்சடைத்துக்கொள்ளும். புகை மேல்நோக்கிச் செல்லுமே தவிர கீழ்நோக்கி வராது; ஆகையால் உள்ளே போகவேண்டியவன் தரையோடு தரையாய் மார்பால் நகர்ந்து போகவேண்டும்.

நீந்தத் தெரியாதவன் ஆழமுள்ள நீர்நிலையில் விழுந்துவிட்டால் அவன் திகிற்பட்டுக் கைகால்களைத் தண்ணீரில் அடித்துக்கொண்டு போராடக்கூடாது; அப்படிச் செய்தால் அவன் விரைவில் உள்ளே முழுகிப்போய்விடுவான். அந்நேரத்தில் என்ன செய்யவேண்டுமென்றால், மூச்சுப் பிடித்துக்கொண்டு அசையாமல் அமைதியோடிருந்து, வாயை மாத்திரம் நீருக்குமேலே வைத்துக்கொள்ளவேண்டும். நமது உடல் நீரில் மிதக்கும் இயல்புடையது; அச்சங்கொண்டு கைகால்களை நீரில் அடித்துக்கொள்ளாமல் அமைதியாக இருந்துவிட்டால் உடல் ஒருகாலும் நீரிற்குள் முழுகிப்போகாது. வாய் ஏன் நீரின்மேலேயே இருக்க வேண்டுமென்றால், நீர் உடலுக்குள் சென்றுவிட்டால் உடல் எடை மிகுதிப்பட்டு மூழ்கிவிட நேரும்.

வண்டிக் குதிரை மிரண்டு வண்டியை இழுத்துக்கொண்டோடினால் நாம் உடனே வண்டியைவிட்டுக் கீழே குதித்துவிடக்கூடாது; அமைதியாயிருந்து என்ன செய்ய வேண்டுமென்று எண்ணவேண்டும்; அதற்குள்ளாகக் குதிரை மிரட்சியடங்கி நின்றுவிடக் கூடும். வண்டியை விட்டு நீங்கவேண்டுவது இன்றியமையாததாயின் வண்டிக்

குப் பின்வாக்காகக் குதிக்கவேண்டும். வண்டி ஒரு திக்கு நோக்கிப் போகும்போது நமது உடல் முன்னுக்குத் தாக்குதலடைந்திருக்கின்றது; ஆகையால் திடீரென்று அப்பக்கமே குதித்தால் நாம் மல்லாக்காக விழுந்து மார்பு அடிபடநேரும். வண்டி போகும் திக்குக்கு எதிர்த்திக்கில் குதித்தால் அவ்வாறு நேரிடாது.

## 1. இடுக்கணழிந்த மகள்

ஓர் இரவு ஒரு மெத்தைவீட்டின் கீழ்த்தட்டு நெருப்புப் பிடித்து எரியத்தலைப்பட்டது. மேல்மாடியில் ஓர் அறையில் பிள்ளைகள் படுத்துறங்கிக் கொண்டிருந்தன. கீழிருந்த தாய் மேலே சென்று குழந்தைகளைக் காப்பாற்ற எண்ணியவள் மெய்ம் மறந்துபோய்த் தீயிலும் புகையிலும் நுழைந்து தெருவுக்கு வந்து விட்டாள். இதற்குள்ளாகப் படிக்கட்டுக்களும் தீப்பிடித்துக் கொண்டன. என்செய்வாள் பாவம்! வீடும் எரிந்துபோயிற்று, பிள்ளைகள் உயிரும் பிரிந்து போயிற்று!

## 2. இடுக்கணழியா மகள்

இரவில் தீப்பிடித்துக்கொண்ட இன்னொருவீட்டின் மெத்தையின்மேல் ஒன்றுக்குள் ஒன்றாகக் கட்டப்பட்ட அறைகள் இருந்தன. முன்னறையில் வீட்டுக்காரி படுத்துக்கொண்டிருந்தாள்; பின்னறையில் நான்கு பிள்ளைகளோடு வேலைக்காரி படுத்துறங்கிக் கொண்டிருந்தாள். கீழ மாடியில் திடீரென்று தீப்பிடித்துக் கொண்டதை உடனே அறிந்துகொண்ட தாய் உள்ளறைக்கு விரைந்து சென்று ஒரு கம்பளியால் வேலைக்காரியின் உடம்பை மூடிக்கட்டி அவளை ஒரு கயிற்றினால் பலகணியின்மூலம் இறக்கிக் கீழே விட்டு விட்டாள். பிறகு அவள் குழந்தைகளையும் அவ்வாறே கட்டி இறக்கிவிட்டுத் தானும் அக்கயிற்றின் உதவியினாலேயே கீழே இறங்கிவிட்டாள். அவள் மன அமைதியுடையவளாய்ச் சூழ்ச்சி செய்து தானுந் தப்பித்துக்கொண்டு தன் மக்களையும் வேலைக்காரியையும் தீயால் இறப்பதினின்றும் காப்பாற்றிக்கொண்டாள்.

## 3. கதிர் அறுப்பவன்

ஒருவன் வயலில் நெற்கதிர் அறுத்துக்கொண்டிருந்தான். அவன் கைமேல் அரிவாள் பட்டு நரம்பு அறுந்துபோய்விட்டது;

அதனால் செந்நீர் வெள்ளம்போல் வெளிவரத் தொடங்கியது; இருந்தவிடமும் செந்நீர்க்காடாய்ப் போய்விட்டது. பக்கத்தில் இருந்தவர்கள் பார்க்கக் கண்கூசிப்போய் வெருண்டு நாலாபக்கங் களிலும் சிதறியோடிவிட்டனர். எதிர்பாராமல் அவ்வழியே வந்த ஒரு பெண் இக்கொடுமையைக்கண்டு மனமழியாது அமைதி கொண்டு, தன் அங்கியினின்றும் ஒரு துண்டுத் துணியைக் கிழித் தெடுத்து நாடியின் மேற்பக்கத்தைக் கெட்டியாகக் கட்டிவிட் டாள். செந்நீர்ப் போக்கு அந்நிமிடமே நின்றுவிட்டது. அப்பெண் அப்படிச் செய்திராவிட்டால், அவ்வறுப்பாளியின் உடற் செந்நீ ரெல்லாம் கழிந்துபோய் இறந்துபோயிருப்பான்.

## 4. பலபொருள் வணிகன்

ஒரு நகரில் பல்பொருள் வணிகன் ஒருவன் இருந்தான். அவன் பல பொருள்களுடன் வெடிமருந்தும் வைத்து விற்பனை செய்துவந்தான். அவன் தன் வாணிபப்பொருள் மூட்டைகளை ஒரு கீழறையில் வைத்திருந்தான்.

அவன் ஒருநாள் வேலைக்காரியைக் கூப்பிட்டு ஏதோ ஒரு பொருளைக் கீழறையிலிருந்து கொண்டுவர அனுப்பினான். அஃது இருட்டாயிருக்குமாதலால், அவள் ஒரு சிறு மெழுகுதிரியைக் கொளுத்திக் கொண்டுபோனாள். அவள் அவ்வறைக்குச்சென்று ஓர் உழுந்துமூட்டையென்று நினைத்த ஒரு மூட்டையின்மேல் மெழுகுதிரியைச் செருகி வைத்துவிட்டு, வேண்டிய பொருளை இரண்டு கைகளாலுந் தூக்கியெடுத்துக்கொண்டு திரும்பிவிட் டாள்.

கடைக்காரன் "விளக்கு எங்கே?" என்று கேட்டதற்கு அவள் அதனைப் பக்கத்திலிருந்த ஓர் உழுந்துமூட்டைமேல் செருகி வைத்திருப்பதாகப் பராமுகமாய்ச் சொல்லியபோது அவன் பேரச்சங்கொண்டு மனங்கலங்கிப்போய் விட்டான்! ஏனெனில் அம்மூட்டை வெடிமருந்துப்பொடிகள் கொண்டது; அதனில் நெருப்புப் பட்டுவிட்டால் பொருட்கேடும் உயிர்க்கேடும் உண்டாகிவிடுமல்லவா? இவன் உட்செல்லுவதற்குள் அம்மூட்டை யில் நெருப்புப் பட்டுவிடக்கூடுமே! உட்செல்லலாமா, வெளியேறி விடலாமா என்று இருதலைக்கொள்ளி எறும்புபோல் ஒன்றுந் தோன்றாமல் நின்று கடைசியாக மனத்தை உறுதிசெய்து கொண்டு கீழறைக்குள் நுழையத் துணிவுகொண்டுவிட்டான்!

துணிந்தவன் கீழறைக்குச் சென்றான்; வெடிமருந்து மூட்டை யின்மேல் மெழுகுதிரி பளபளப்புடன் எரிந்துகொண்டிருப்ப தைக் கண்டான்; அடிமேலடி வைத்து மூட்டையின் கிட்டப்

போனான்; பரபரப்பாகச்சென்றால் காற்றுப்பட்டுத் தீப்பொறிகள் காணுமல்லவா? தீப்பொறி கீழ்நோக்கி விழுந்தால் என்ன வாகும்?

அவன் நீளநினைந்து, உள்ளங்கையைக் கிண்ணம்போல் குவித்து மெதுவாக அம்மெழுகுதிரியை இருவிரல் நீக்கி இடுக்கி யெடுத்துக்கொண்டான். அப்போது தீப்பொறி அவன் உள்ளங் கையில்தானே விழவேண்டும்? அவ்வூறுபாட்டுக்கு அவன் அஞ்ச வில்லை. அஃதும் படாமலே அவன் அத்திரியோடு மெதுவாக வெளியேறிவிட்டான்.

வணிகனின் இடுக்கணழியாமைத்தன்மையே அவன் தன் பொருட்களையும் ஆங்குள்ள மக்களையும் நீறுபட்டுப்போய்விடாமற் காப்பாற்றினதன்றோ?

---

# எ. தெரிந்து தெளிதல்

நம்மைச் சூழ்ந்திருக்கும் பொருள்களின் தன்மையையும், மக்களின் நடவடிக்கைகளையும் உற்றுநோக்கியறிவது நம் உயர்நிலைமைக்கு அடிப்படையான பற்றுக்கோடாகும். பள்ளிக்கூடக் கல்வியினாலும் புத்தகக் கல்வியினாலும் எல்லாமறிந்துகொள்ள முடியாது. மக்களின் குணங்கள், உலக ஒப்புரவு, ஓரிடத்திற்குரிய பொருள்களின் தனிப்பட்ட தன்மைகள் ஆகிய இவைகளைத் தெரிந்தறிந்துகொள்வது ஒவ்வொருவருக்கும் வேண்டப்படுவதான ஒன்றாம். நம் கண்ணுக்குப்படுகிற எதனையும் உற்றுநோக்கி ஓர்ந்து அறிதலால் இது கைகூடும்.

மக்கள் எந்தெந்த நேரங்களில் எவ்வெத்தன்மையான உணர்ச்சியடைகின்றார்கள் என்பதைச் சிலர் உற்றுநோக்கியறிந்துகொண்டிருக்கின்றார்கள் இத்தகையோர் தங்களைச் சூழ்ந்திருக்கும் பக்கத்து மக்கள், நண்பர்கள் மனத்தில் உண்டாகும் எண்ணத்தை முன்னறிந்து தங்கள் பேச்சையும் செய்கையையும் தக்கபடி சரிப்படுத்திக் கொள்கின்றனர். இவர் இச்செவ்வியில் இவ்வித உணர்ச்சிகொள்வர் என்று அறிந்துகொள்ளும் வல்லமையையே திறமை என்பர். ஒருவரோடொருவர் பேசிக்கொள்ளும்போது இக்குணம் மிக வேண்டற்பாலது. இக்குணமின்றி எவரும் சிறந்த மரியாதைபெறுவது அருமை செயற்கரிய செயல்களில் இத்திறமை என்பது மிக மேற்பட்டதாகும்.

துன்பம் வந்தபோது உற்றுநோக்குதல் மிக்க உதவி செய்யும். படகோட்டிகள் பாறைகளின் இருப்பைப் பற்றியும், கடலின் பற்பலவகையான தோற்றங்களைப் பற்றியும் முன்னமேயே உற்றுநோக்கி அறிந்திருப்பார்களானால் புயலடிக்குங் காலத்தில் அதன் கொடுமையினின்றும் எளிதில் தப்பித்துக்கொள்வார்கள் அல்லவா? அதுபோலவே, மக்களும் சிறுசிறு செய்திகளின் வெவ்வேறுபட்ட தன்மைகளை ஊற்றங்கொண்டு உற்றுநோக்கித் தெரிந்துகொண்டிருப்பார்களாயின் எவ்வகை இடுக்கணிலும் ஊறொன்றும் படாமல் உய்யக்கூடுமல்லவா?

சிலர் இடுக்கண் இடையூறுகள் நேர்ந்துவிடின் மன வமைதியும் இடுக்கணழியாமையுங் கொண்டிருப்பதுடன் அந்நேரத்தில் இன்னது செய்யவேண்டுமென்பதறகேற்ற வழிவகைகளையும் கண்டுபிடித்துக்கொள்கின்றனர். மேலும் அவர்கள் ஒரு வழி தவறினல் உடனே வேறொரு வழியைத் தெரிந்தெடுத்துக்கொள்கின்றனர். இதனைத்தான் தெரிந்து தெளிதல் என்பர். இது சிலர்க்கு இயற்கையாகவே உண்டு. ஆனாலும் ஏனையோரும் பல்பொருள்களையும் பல்வகைத் திறமைவாய்ந்த மக்களையும் உற்றுநோக்கிப் பார்த்துப் பார்த்துப் பயிற்சிபெற்றுப் பயனடையலாம்.

## 1. பேதுரு காசண்டன்

பிரான்சு நாட்டில் பேதுரு காசண்டன் என்கிற கல்விப்பயிற்சி பெற்ற அறிவாளியொருவனிருந்தான். அவன் ஏழு வயதிலேயே இரவில் எழுந்தெழுந்து வானத்தை அண்ணார்ந்து பார்த்துக் கொண்டு வான்மீன்களின் தன்மையைக் கருத்துடன் உற்று நோக்கிக் கொண்டிருப்பான். ஒருநாள் அவன் தன்னையொத்த சிறுவர்களுடன் கூடிக்கொண்டு நிலவொளியில் உலாவப்போனன். அப்போது வானிற் சந்திரனுக்கு நேரே மேகங்கள் ஓடிக்கொண்டிருந்தன. பேதுருவினுடன் வந்த பிள்ளைகள் 'மேகமோ மதியோ ஓடுவது' என்று மாறுபட்டு வாதிட்டனர். அவர்கள் கடைசியாக மதியே ஓடுகின்றது என்கிற முடிவுக்கு வந்துவிட்டனர். 'மேகந் தான் ஓடும், மதி ஓடாது' என்று காசண்டன் எவ்வளவோ சொல்லியும் அவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை.

பிறகு காசண்டன் அவர்களை ஒருபெருமரத்தடியிற் கொண்டு போய் நிறுத்திக் கிளைகளின் மூலம் சந்திரனைப் பார்க்கும்படி சொல்லினன். அப்போது அவர்கள் சந்திரன் இருந்தவிடத்திலேயே இருக்கிறதென்றும் மேகங்களே மரத்தைத் தாண்டியோடு கின்றன என்றுந் தெள்ளத்தெளியத் தெரிந்துகொண்டு, 'பேதுரு சொன்னதே சரி, யாமே தவறாக உணர்ந்தோம்,' என்று அவனை மெய்ச்சிக் கொண்டனர்.

## 2. வேடனும் மான் தொடையும்

ஒரு காட்டில் ஒரு வேடன் தான் முன்னாள் கொன்ற ஒரு மானின் தொடையைத் தன் குடிசைக் கூரையில் ஆறத் தொங்க வைத்துவிட்டு வெளியே போய்வந்தான். அதற்குள் அது காணமற் போயிற்று; அவன் அது திருடுபோயிற்று என எண்ணினன்.

அவ்விடத்தைச் செவ்வையாக ஆராய்ந்து பார்த்தான்; பின் ஆள் காலடிச்சுவடு கண்டு, அது போனவழியை உற்றுநோக்கி அத்திருடனைப் பிடிக்க அவ்வழியே சென்றான்.

எதிர்நோக்கி வந்த சில வழிப்போக்கர்களைப் பார்த்து அவன், "ஒரு சிறு துப்பாக்கியேந்தி ஒரு கூழைவால் நாயுடன் போன குள்ளக் கிழ வெள்ளைக்காரன் ஒருவனை நீங்கள் கண்டீர்களா?" என்று கேட்டான். அவர்கள் "ஆம்" என்றனர். வேடன், "சரி, சரி அவன்தான் அந்த ஆள். இறைச்சியைக் கொண்டுபோய்விட்ட திருடன் அவனே," என்றான். அவர்கள் வேடனை நோக்கி, "என்றைக்கும் பார்த்திராத ஒருவனைப்பற்றி இவ்வளவு நுட்பமாகவும் விளக்கமாகவும் அறிந்து பேசுகின்றனையே, அஃது எப்படி?" என்று கேட்டனர். அதற்கு அவன் :

க. இறைச்சியைத் தொங்கவிட்டிருந்த இடத்தில் அவன் கற்களைக் கொண்டுவந்து போட்டு மேடாக்கி அதன்மேல் நின்று கொண்டு அவ்விறைச்சியைக் கொண்டுபோயிருக்கின்றானாகையால் அவன் குள்ளன் என்று அறிந்தேன்.

உ. சருகிலைகளின்மேல் அவன் சிறுதாண்டுபோட்டு நடந்து போயிருக்கிற அடையாளங் கண்டு அவன் கிழவன் என்று அறிந்தேன்.

ங. அவன் பெருவிரல்களைத் திருகித்திருகி வைத்து நடந்து போயிருக்கிற அடையாளங் கண்டு அவன் வெள்ளைக்காரன் என்று அறிந்தேன்.

ச. அவன் உள்ளே நுழைந்தபோது வெளியே தன் துப்பாக்கியை ஒரு மரத்தின் பக்கம் சாரவைத்திருந்திருக்கின்றான்; அதன் முனை மரத்தின்மேல் பட்டிருந்த அடையாளம் தரைக்குச் சிறிது உயரத்திலேயே இருந்தபடியால், அத்துப்பாக்கி சிறியது என்று அறிந்தேன்.

ரு அவனுடைய நாய் சிறியதென்று அதன் காலடிச்சுவட்டினால் அறிந்தேன்.

சு. திருடன் உள்ளே இருந்தபோது வெளியில் மண்தரைமேல் உட்கார்ந்திருந்த நாயின் வாலினால் உண்டான அடையாளங் கண்டு அவ்வால் கூழையென்று அறிந்தேன், என்றான்.

## 3. எலியும் முட்டையும்

எலி முட்டைகளைத் திருடிக்கொண்டு போய்விடும் என்றால் யாராவது நம்புவார்களா? அஃது உண்மையாகவே நடந்ததைக் கேளுங்கள் :

ஆங்கில நாட்டின் ஓரூரில் ஒரு குடியானவன் இருந்தான். அவன் ஒருநாள் எலிகள் ஒரு கோழிக்கூண்டைச் சுற்றிக்கொண்டிருப்பதைக் கண்டான். கண்டவன், 'இவ்வெலிகள் என்ன செய்கின்றன பார்ப்போம்,' என்று சிறிது தொலைவில் அமரிக்கையாக இருந்துகொண்டு அவைகளை நோக்கியபடியே நின்றான்.

ஓர் எலி ஒரு முட்டையின்மேல் குனிந்து படுத்தவாக்காக இருந்து, தன் வாலை அடிக்கு இழுத்து வாயிற் பற்றிக்கொண்டது. இதனால் அம்முட்டை எலியின் கால்களினாலும் வாலினாலும் பிடிபட்டுப்போயிற்றல்லவா? உடனே சில எலிகள் அதன் கிட்டவந்து அதன் கழுத்தைப் பிடித்திழுத்துக்கொண்டு கூண்டினின்றும் வெளியேறிப் போய்விட்டன. அக்குடியானவன் பகுத்தறிவில்லா உயிர்களாகிய எலிகளின் சூழ்ச்சித் திறத்தைக்கண்டு வியப்பெய்தி தன்னிடஞ் சென்றான்.

## 4. ஓவியனும் அவன் கையாளும்

ஒரு கோவிலின் கும்மட்ட முடியில் வேலைசெய்வதற்காகச் சாரங்கட்டியிருந்தது. கும்மட்டத்தினுள்ளே ஒருவன் ஓவியமொன்று எழுதி அதற்கு நிறங்கொடுத்துக்கொண்டிருந்தான். இடைநடுவிற், செய்த வரையில் ஓவியம் எப்படிக் காணப்படுகின்றது என்று பார்ப்பதற்கு ஓவியத்தை நோக்கியபடியே பின்வாக்காகவே மெதுவாகப் போய்க்கொண்டிருந்தான். அவன் முதுகுக்குப் பின்பக்கம் சாரம் குறுக்குக் கொம்பில்லாமல் திறந்தபடியாக இருந்தது. ஓவியன் இரண்டோரடி யெடுத்துவைத்துவிட்டால் மல்லாக்கக் கீழே விழுந்து உடல் தூள்பட்டுப்போய்விடவேண்டியதுதான்.

இந்த நெருக்கடியில் அவன் கையாள் என்ன செய்தானென்றால்:—ஒரு நிறச்சட்டியை எடுத்து அந்த ஓவியத்தின்மேல் அடித்து விட்டான். உடனே ஓவியன் அடங்காச் சினங்கொண்டு கையாளைப் புடைக்க ஓடிவந்து விட்டான் கையாள் காரணத்தை எடுத்துக் காட்டியும் ஓவியனுக்குச் சினமடங்காததனால் அவன் அந்நேரத்தில் அக் கையாளுக்குச் செவ்வையாக நன்றியறிவு கூறவில்லை. ஆனாலும் கையாளின் இடுக்கணழியாத் தன்மையையும் சூழ்ச்சித் திறத்தையும் ஓவியன் பிறகு நன்கறிந்தான்.

கையாள் அவ்வாறு செய்திராவிட்டால் ஓவியன் பாழ்பட்டு உயிரிழந்திருப்பானல்லவா? அவ்வாள் பலநாள் வேலையினாலாகிய ஓவியத்தை ஒரு விநாடியிற் கெடுத்துவிட்டது சிறந்த நன்மையாகவே முடிந்ததைப் பாருங்கள்.

## 5. கப்பல் செலுத்திய பையன்

நூற்று முப்பதாண்டுகட்கு முன்பு நார்த்தம்பர்லண்ட் கரையோரத்தில் ஒரு பிரான்சுக் கப்பல் புகழி என்கிற ஓர் ஆங்கிலக் கப்பலைச் சிறைப் படுத்திக்கொண்டது. ஒரு கிழவனும் ஒரு பையனுந் தவிர மற்ற வெள்ளையர்களையெல்லாம் பிரான்சுக் கப்பல் கைதிகளாகப் பிடித்துக் கொண்டுபோய்விட்டது. புகழியில் அவ்விரண்டு வெள்ளையர்களும் அதனை உடனிருந்து பிரான்சுத் துறைமுகஞ் சேர்க்க ஆறு பறங்கிக் காரர்களுமே இருந்தார்கள்.

புகழி புறப்பட்டதும் புயற்காற்று கடுமையாக அடித்து அதனை ஒரு வளைகுடா மூலையில் தள்ளிக்கொண்டு போய் விட்டது. அவ்வளைகுடா வழியிற் கப்பலோட்டிக்கொண்டு போவதற்குக் கிழவனுக்குத் தெரியாது; அயலாராகிய பறங்கிகளுக்குந் தெரியாது: சுருக்கிருட்டும் மூடிக்கொண்டது; விளக்குகள் காற்றில் அவிந்து போய்விட்டன; எண்ணெயுந் திரியும் இருக்குமிடந் தெரியவில்லை. ஆகையால் திசையறி கருவி என்ன பயன் தரும்!

பதின்மூன்று வயதேயுடைய ஆங்கிலப் பையன் அவ்வழியே கப்பலில் இரண்டொரு தடவை வந்திருக்கின்றான். அவன் அவ்வளை குடாவின் அக்கம் பக்கங்களில் உள்ளவைகளையெல்லாம் ஏறக்குறைய அறிந்திருந்தான். தொலைவில் ஒரு கலங்கரை விளக்கொளியைக் கண்டு முன் பழக்கத்தினால் அஃது இன்னவிடம் என்றறிந்துகொண்டு கப்பலைத் தானே நடத்த முன் வந்தான்.

அவ்வளை குடாவில் ஆங்கிலச் சண்டைக் கப்பல் ஒன்று இருக்குமிடம் அவனுக்குத் தெரியும். கப்பலை அவன் அவ்விடத்திற் கொண்டுபோய் நிறுத்தினான். நிறுத்தினவுடனே அவன், அக் கப்பல் வேலையாட்களைக் கூப்பிட்டு, "யான் ஆறு கைதிகளைக் கொண்டுவந்திருக்கின்றேன், அவர்களை இறக்கிக் கொண்டுபோக வாருங்கள்," என்று கூவினான். பறங்கிகள் 'அயலார் கையில் அகப்பட்டுக் கொள்கின்றோமே' என்று அச்சங்கொண்ட போதிலும் புடலடியனின்றும் தப்பித்துக்கொண்டு போய்விட வேறுவழி காணாமல் மன அமைதியோடிருந்து விட்டனர். சண்டைக் கப்பற் காரர்கள் பையனைக் கப்பலுக்கு வந்து பார்த்தபோது அவன் அப் பறங்கிகளினுடைய போர்க் கருவிகளையெல்லாம் பிடுங்கி வைத்துக் கொண்டு அவர்களை முன்னமேயே கைதிகள் போலவே செய்து வைத்திருந்தான். ஆங்கிலக் கப்பல் ஆங்கிலரிடமே சேர்ந்து விட்டது. தேவருடைமை தேவரிடமே வந்து சேர்ந்தது.

---

## அ· அடக்கம்

ஒருவன் தன்னைத்தானே புகழ்ந்து கொண்டாலும், மிகவாகப் பேசிக்கொண்டாலும், தன்னைப் பற்றியவரையில் தானே உயர்ந்தவன் என்று பிறரிடம் காட்டிக்கொண்டாலும், அது பிறரால் ஏளனஞ் செய்யப்படுவதற்கு இடங்கொடுக்கும் என்பது ஒருதலை.

நமக்குள்ளே நாம் பணிவுள்ளவர்களாக இருக்க வேண்டும்; அவ்வாறே பிறராற் காணப்படவும் வேண்டும். பிறர் நம்மைப் பற்றிப் புகழ்ந்து பேசும்போது நாம் அவர் தம் உடன்பாட்டைத் தாழ்மையோடு பெற்றுக் கொள்ள வேண்டும். அடக்கத்தினாலேயே ஒருவனுக் கிருக்கும் நற்குணங்கள் உயர்ந்து அழகு காட்டுகின்றன.

ஆனாலோ மிகச் சிறந்த குணங்களும் தற்பெருமையினால் இழிவுபடுவதற்கே உரியனவாகும். அறிவும், தகுதியும், உயர் நிலையும் உடையனல்லாத ஒருவன் அவை தனக்கிருப்பனபோல நடித்துக் காட்டுவானாயின், அவன் இன்னும் இழிவுபடுவானென்பது சொல்லாமலே அமையும். இத்தகைய நடிப்புக்கள் யாவராலும் எளிதில் அறியப்படுகின்றன. அறிவு முதலிய நற்குணங்கள் ஒருவனுக்கு இல்லாதிருத்தல் அவ்வளவு இழிவுக்கு இடந்தராது; ஆனால் அவை இன்மையை உண்மைபோல ஆரவாரிப்பதே அவனுக்குப் பேரிழிவு தரும்.

ஒருவன் தனது கொள்கையே சிறந்தது, பிறருடையது தாழ்வானது என்றெண்ணுந் தன்மையை அடக்க வேண்டும். பிறர் தம் சரியான கொள்கைகள் நமக்கு நெறிமுரணாகக் காணப்படலாம்; அதுபோலவே நம் கொள்கைகள் பிறர்க்கு அவ்வாறாகவே காணப்படலாம். பல்லாயிரங் கோடி மக்களுள் ஒவ்வொருவனும் தனிப்பட்டவனே. அதனால் ஒவ்வொருவனும் தன்தன் கொள்கையே சிறந்ததென்று மதிக்கின்றான். ஆனால் எவனும் அறிந்திருக்க வேண்டியதொன்றுண்டு: அஃதாவது, நாம்

தவறு செய்யக்கூடும் என்பதை அறிதலும் அதன்படி நடப்பதுமே.

## 1. மயிலென நடித்த அண்டங்காக்கை

'எனக்கு மயிலிறகுப் போர்வை யிருந்தாற் போதுமே, நான் மயில்போலவே ஓர் அழகான பறவை யாய்விடுவேனே' என்று எண்ணியெண்ணி மனப்பால் குடித்துக்கொண்டு மகிழ்ந்திருந்தது ஓர் அண்டங்காக்கை. இம்மகிழ்ச்சியாற் செருக்கடைந்து பூரித்துப் போய் அது சில நாட்களிலேயே அழகிய மயிற்றோகை இறகுகளை வேண்டிய மட்டும் சேர்த்து அவைகளினால் ஒரு போர்வை செய்து கொண்டது. பிறகு அது தன்னினமாகிய காக்கைகளை வெறுத்து அவைகளுடன் கலக்காமலே அப்போர்வையோடு தனித்து நடித்துக் காட்டித் திரிந்துகொண்டிருந்தது அதன் பிறகு அது மயில்களுடன் சேர்ந்து வாழ முயன்றது. மயில்கள் அதனுடைய பகட்டுப் பிலுக்கு நடையைப் பார்த்தவுடனே அஃதொரு போலி மயிலெனக் கண்டு கொண்டன. கண்டவுடனே மயில்கள் அதன் மேற் சினங்கொண்டு வெறுத்து அதன் போர்வையைப் பிடுங்கிப் போட்டுவிட்டு அதனைத் தம்மிடத்தினின்றும் துரத்திவிட்டன. அதன் இனமாகிய காக்கைகளும் முன்னடந்ததை நினைந்து துரத்தப்பட்டு வந்த அந்த அணடங்காக்கையைத் தங்களிடமும் அண்டவிடவில்லை.

## 2. கலைஞன் நியூட்டன்

உலகம் புகழும் கல்விப் புலமை வல்லமைப்பேறு பெற்ற பெருமக்களெல்லோரும் ஏனையோரைவிட அடக்க முடையவர்களாகவே இருந்திருக்கின்றார்கள். அத்தகையோருள் நம் நியூட்டனும் ஒருவரே. அவர் இவ் அடக்கம் என்னும் உயர் குணத்திற் சிறந்தவராகவே வாழ்ந்து வந்தார்.

நியூட்டன் பள்ளிச் சிறுவனாயிருந்த போதே தன் கையினாலேயே புதுமையான சிறுசிறு பொருள்கள் செய்து யாவரையும் திகைக்கச் செய்வார். அவர்தம் வீட்டுக் கருகில் காற்றாடிப் பொறி யொன்று வைக்கப்பட்டு இயங்கிக்கொண்டிருந்தது. அவர் அங்கே அடிக்கடி போய் அப்பொறியின் ஒவ்வொரு பகுதியையும் நுணுகி ஆராய்ந்து பார்ப்பார். இவ்வாறாக அவர் அப்பொறி எவ்வாறு சுழலுகின்றது என்பதை விரைவில் நன்கறிந்துகொண்டார். உடனே அவர் தம் கருவிகளைக் கொண்டு அப்பெரிய பொறியைப் போலவே ஒரு சிறு காற்றாடிப் பொறியைத் தாமே செய்து விட்டார். அஃது ஒரு வியப்புத்தரும் வேலைப்பாடமைந்ததாகவுங்

காணப்பட்டது. அதனை அவர் வீட்டுக் கூரைமுகட்டின்மேல் வைத்து அது காற்றோட்டத்தினுல் இயக்கப்படுகின்றதா வென்றும் பார்ப்பார்.

நியூட்டன் அப்பொறியை ஓர் எலியினுல் இயக்கச் சூழ்ச்சி செய்தார்; அது வியப்பினும் வியப்பே! அஃது எவ்வொறெனின்: அப்பொறியின் உட்குழல் உருளை ஒன்றிற்குள் அவர் ஓர் எலியை விட, அது முன்னுக்கு ஏறிவர முயல, அதனுல் அவ்வுருளை சுழல அப்பொறியும் இயங்கினது.

அறியாப் பிள்ளையா யிருந்து அருஞ்செயல்களை யாற்றி வந்த நியூட்டன் பள்ளிச்சிறுவனுகிக் கலாசாலையில் நுழைந்து கல்வி பயிலலாயினர். அப்போது அவர் ஐம்முதற் பொருள் (ஐம்பூதம்) களைப் பற்றியும், அண்டகோளங்களைப்பற்றியும் அறிய அவாக்கொண்டிருந்தார். கலாசாலை விடுமுறை நேரங்களில் பூமியின்மேலுள்ள இயர்கை நிகழ்ச்சிகளைப் பற்றியும், வானின் கண்ணுள்ள கோளங்களைப் பற்றியும், அவற்றின் இயக்கங்களைப் பற்றியும் அவர் எண்ணியெண்ணிப் பார்த்துக்கொண்டே யிருப்பார்.

ஒருநாள் நியூட்டன் வீட்டுத்தோட்டத்தில் உட்கார்ந்து சுற்று முற்றும் பார்த்துக்கொண்டிருந்தார். அப்போது மரத்திலிருந்து ஓர் இலந்தைப்பழம் கீழே விழுந்ததைக் கண்டார். கண்டதும் அதைக் குறித்து எண்ணலானுர். இப்பழம் என் கீழே விழ வேண்டும்; இது பழத்தின் ஆற்றலினுலேயா? அல்லது பூமியின் வல்லமையினுலேயா? என்பதைப்பற்றி நீள நினைத்துப்பார்த்துக் கடைசியாக, பூமிக்கே தன்னிடம் இழுத்துக்கொள்ளும் இவ் வாற்றல் உண்டு; இஃது இயற்கை நெறிமுறைகளில் ஒன்று என்று கண்டறிந்து முடிவுகட்டினுர். அதனுலேயே அதனமேலுள்ள கட்டுப்படாத எப்பொருளும் அதனிடத்திலேயே தங்கியிருந்து விடுகின்றது; இக்காரணத்தால் பொருள்களுக்கு 'எடை' என்ப தொன்று ஏற்பட்டிருக்கிறது என்றும் கண்டுகொண்டார்.

மேலும், இன்னெரு மூல காரணத்தையும் அவர் கண்டறிந் தார். அஃதாவது, உலகத்திலுள்ள எப்பொருளாயினும் தன் பருமன், தொலைவு இவற்றின் விகிதப்படி மற்றெப்பொருளையும் தன்னிடமாக இழுத்துக்கொள்ள முயல்கின்றது. இவ்விதிப் படியே சந்திரன் பூமியினுலும், ஏனைக் கோள்கள் சூரியனுலும் இழுக்கப்படுகின்றன இவ் இழுப்பாற்றலினுலேயே கோள்க ளெல்லாம் முறை மாருமல் தங்கியிருக்கின்றன என்பதாம்.

நியூட்டனுல் புலப்படுத்தப்பட்ட இவ்விதிகள் உலகங் கண்ட றிந்த முதன்மைப் பொருள்களுடன் சேர்த்தெண்ணப்படுவன

வாகும். ஆராய்ச்சி யறிவுடைய பெருமக்களெல்லோரும் நியூட்டனின் இவ் அரிய செயலுக்காக அவரை எக்காலத்திலும் போற்றிப் புகழ்வர் என்பது ஒருதலை.

சூரியவொளியில் வெவ்வேறு வகையான ஏழு நிறங்கள் கலந்திருப்பதை முதன்முதல் கண்டறிந்து தெரிவித்தவர் இவரே. மேலும் அவர் முன்னறியப்படாதனவான எண்ணற்ற, புதுமையும் வியப்பும் தரத்தக்க எத்தனையோ பொருள்களைக் கண்டுபிடித்து உலகத்தாரின் கண்களைத் திறக்கவைத்திருக்கின்றார்.

இத்தகைய பெரியோராகிய நியூட்டன் அமைதித் தன்மையும் தணிவுக் குணமுமுடையவராகவே வாழ்ந்துவந்தார். அவருடைய வாழ்நாட்களில் அவர் சீற்றங்கொண்டிருந்த செவ்வியே இல்லை.

அவருடைய வரலாற்று நூலின்கண் அவர்தம் சிறந்த வாழ்க்கைக் குறிப்பொன்று காணப்படுகின்றது. அஃதாவது, வயிரமணி என்னும் பெயரிட்டு அவர் ஒரு நாயை வளர்த்துவந்தார். அவர் அவ்வப்போது மனத்தால் உழைத்துக் கண்டறிந்த பொருள்களின் குறிப்புக்கள் எழுதப்பட்ட தாள்கள் எப்போதும் அவருடைய நாற்காலிப் பலகையின்பேரிலேயே சிதறிச் செறிந்துகிடக்கும். அவர் ஒருநாள் மாலை வெளியே போயிருந்தபோது, அந்நாய் அப் பலகையின்மேல் குதிக்க, ஆங்கிருந்த விளக்கு தலைகீழாகத் தள்ளப்படவே தாள்கள் எல்லாம் தீப்பிடித்து நீறுபட்டுப்போய் விட்டன. இவ்வாறாக அவர் பல்லாண்டு உழைத்த உழைப்புப் பாழாய்ப்போய்விட்டதை வீட்டுக்கு வந்ததும் கண்டபோது, அவர் அந்நாய்க்கு எவ்வித ஊறுபாடுஞ் செய்யாமல் அதனை அமைதியோடு பார்த்தபடியே "வயிரமணியே! நீ செய்த குறும்பினால் வந்த கேட்டின் அளவை நீ அறிந்தாயில்லையே!" என்று சொன்னதோடு நின்றுவிட்டார்.

நியூட்டன் கல்வியிலும் அறிவிலும் சிறந்தவராக இருந்தபோதிலும் கல்விச்செருக்கும் தற்பெருமையும் அவரிடமில்லை; அமைதியும் தாழ்மையுமுடையவராகவே இருந்தார். அவர் எல்லோரிடத்திலும் வேறுபாடு இல்லாமல் அன்புடன் இருந்துவந்தார்.

நம் நியூட்டன் பெருந்தகையார் உயர்தரக் கல்வி வல்லார்களில் ஒருவராக இருந்தபோதிலும், அவர் தமது உயிர்விடுந் தறுவாயில் "யான் கற்றது கைம்மண்ணளவு, கல்லாதது உலகளவு!" என்றனராம்.

## 3. போலி மாணக்கன்

கலாசாலைத் தமிழ்ப்பேராசிரியர் ஒருவர் ஒருநாள் புகைவண்டியிற் பயணஞ் செய்துகொண்டிருந்தார், அவ் வண்டியில் இருந்த

வர்களில் எவருக்கும் அவர் இன்னாரென்று தெரியாது. அவர் எங்கே சென்றாலும் தம் சட்டைப் பைகளிலும் கைப் பையிலும் சிறந்த நூல்களை உடன்கொண்டுபோவார். அவ்வண்டியில் இருந்த கலாசாலை மாணாக்கன் ஒருவன் ஆங்கே சில பெண்டிர்களுடன் வேடிக்கையாகப் பேசிக்கொண்டு வந்தான். இடைநடுவே ஒரு மேற்கோள் எடுத்துச்சொல்லி, அஃது 'ஒளவையார் வாக்கு' என்றான். அப்போது அரைத்தூக்கமாகத் தூங்கிக்கொண்டிருந்த அவ்வாசிரியர் திடீரென விழித்துக் கண்களைத் துடைத்துக் கொண்டு அம்மாணாக்கனை ஏறிட்டுப் பார்த்து, "அப்பா! நீ இப் போது எடுத்துச்சொன்ன அவ்வாக்கியம் ஒளவையார் நூல்களில் எவ்விடத்தும் யான் கண்டேனில்லையே!" என்றியம்பினார். அதற்கு அக்கற்றுக்குட்டி அவரைப் பார்த்து, "பெரியீர், தாங்கள் பள்ளிக்கூடம் விட்டுப் பல்லாண்டுகளாய்விட்டன; இளமையிற் கற்றது முதுமையில் நினைவிலிருக்குமோ! யான் மொழிக்குமொழி அப்படியே சொன்னேன்," என்று பெருமிதத்தோடு பகர்ந்தான். அப்போது அவர் ஒளவையார் கையடக்கப்படி யொன்றைத் தம் சட்டைப்பையிலிருந்தெடுத்து, அவன் கையிற்கொடுத்து, "அப்பா! இதன்கண் ஒளவையார் பாடல்களெல்லாம் காணப்படும்; நீ காட்டிய மேற்கோள் இதனில் இருந்தால் எனக்கு அன்பு கூர்ந்து அறிவி, பார்ப்போம்," என்றனர். அம்மாணவன் அதன் ஏடுகளைத் திருப்பித்திருப்பிப் பார்ப்பவன்போல் நடித்து, ஆசிரியரைப் பார்த்து, "ஐயா, இப்போது நினைவுக்கு வருகின்றது; அதனை யான் நாலடியாரிற் பார்த்திருக்கின்றேன்," என்றான். ஆசிரியர், "அப்படி ஒருவேளை இருக்கலாம், இஃதோ, என்னிடம் நாலடியார்ப்படியும் ஒன்றிருக்கின்றது," என்று அதனையும் எடுத்து அவன் கையில கொடுத்து, "அவ்வாக்கியத்தை இதன் கண் கண்டு எனக்குக் காண்பிப்பாயாகில் யான் உனக்கு நிரம்பவும் கடமைப்பட்டவனாவேன்," என்று கூறினார். அப் போலிச் சிட்டன் முன்போல் ஒன்றும் சொல்லாமல் திறுதிறு என்று விழிக்கலானான். அப்போது அப்பெண்மகளிர் எல்லோரும், 'அகப்பட்டுக்கொண்டான் தும்மட்டிக்காய்ப் பட்டன்,' என்று உள்ளுக்குள்ளே கிளுகிளுத்துக் கொண்டிருந்தனர்.

பிறகு அம்மாணாக்கன் ஆசிரியரைக் கிட்டி, "பெரியீர்! என்னைச் சற்று மன்னித்துக்கொள்ள வேண்டும்; என்ன மந்த புத்தி எனக்கு! மறந்தேபோய்விட்டேன்; இப்போதுதான் நினைவுக்கு வருகின்றது; அதனைக் கட்டாயமாகவே திருக்குறளிற்றான் கண்டிருக்கின்றேன்," என்று சொல்ல, அவ் விடாக்கண்டராகிய ஆசிரியர் தன் கைப்பையிலிருந்து திருக்குறள் நூற்படி யொன்றினையெடுத்து அவன் முகத்துக்குநேரே நீட்ட முயன்றார். அப்போது கலைமாணாக்கன் மனங்கலங்கிப்போய், "ஐயா, சற்றுப்

பொறுங்கள், எனக்கு உடம்பு ஒருமாதிரியாக விருக்கின்றது,'' என்று சொல்லிச் சிறிதுநேரம் பேசாமலிருந்து, அடுத்த புகை வண்டி நிலையத்தில் அரவந்தெரியாமல் மறைந்துபோய்விட்டான்.

க. கேடு வரும் பின்னே, மதி கெட்டுவரும் முன்னே.

உ. இழிவிற்குமுன் இறுமாப்பு.

௩. பெருமையாளருடன் பங்கெடுத்துக்கொள்வதை விட, வறுமையாளருடன் வணக்கம் பெறு.

—பழமொழிகள்.

௪. நான் அமைதியும் தாழ்மையுமுள்ளவன்.

௫. என்னிடத்தில் உங்கள் உயிருக்கு ஓய்வுண்டு.

௬. அறியாக் குழந்தைபோல ஆணவமற்றிரு.

எ. உம்பர் உலகில் உயர்நிலை காண்பாய்.

—இயேசுநாதர்.

அ. அடக்கம் அமரருள் உய்க்கும், அடங்காமை ஆரிருள் உய்த்து விடும்.

—வள்ளுவர்.

---

## ௯. நயமுடைமை

உலகம் பலவிதமாதலின் கண்டபடி பேசுவதும் செய்வதும் கூடாது; அஃது ஒருவரோடொருவர் மாறுபட்டு மனத்தாங்கல் கொள்வதற் கிடங்கொடுக்கும். மனமபோன படி செய்வதை அடக்கிக்கொள்ளவேண்டும்; அதனுல், நாம் பிறருடைய மனவருத்தத்துக்கு ஆளாகமாட்டோம்.

ஒருவரோடொருவர் கூடிப் பழகும்போது மரியாதையும் அன்புங் காட்டவேண்டும்; அதற்காகப் பெரியோர் சில பேச்சு நடத்தைமுறைகளை ஏற்படுத்தி வைத்துக் கொண்டிருக்கின்றனர். ஒருவன் முகந்தெரியாத ஒருவனுக்கு எழுதும் கடிதத்தின் கீழே 'தங்கள் கீழ்ப்படிதலுள்ள ஊழியன்,' என்று எழுதுகின்றுன்; பழக்கமுள்ள ஒருவனுக்கு 'அன்புள்ள ஐயா' என்று எழுதுகினறுன். இவைகள் அதைப் படிப்பவனுக்கு மனக்கிளர்ச்சி உண்டாக இவ்வாறு மரியாதை காட்டும் சொற்கள் பயன்படுத்தப் படுகின்றன.

மக்கள் ஒருவரையொருவர் கண்டு பேசக்கூப்பிடும் போது மரியாதை காட்டுஞ் சொற்களைக் கூறுகின்றுர்கள். ஒரு கூட்டத்தில் வயதானவர்க்கு முதலில் இடங்கொடுத்துவிட்டுப் பினபே வாலிபன் தனக்கிடம்பார்த்துக்கொள்கின்றுன். ஒருவர் பேசிமுடித்த பின்னரே மற்றெருவர் பேசத் தொடங்குகின்றுர். இவைகளையெல்லாம் நடிப்பென எண்ணப்படாது; மேற்கொள்ளவேண்டிய கடமைகளே. ஏனெனில் வேறெவ்விதமும் மக்கட்கு மனத்தாங்கலை உண்டாக்காத நயஞ்செய்யுங்குணமே நாகரிகத்தைத் தரும். பொதுவாக மக்கள் எல்லோரிடத்தும் அன்புள்ளவன் நயம்படவுரைத்து நன்மை செய்வானேயொழிய தன் பேச்சிலும் செய்கையிலும் அவர்கள் வீணே மனத்தாங்கல் அடையும்படி வைத்துக்கொள்ளமாட்டான்.

நம்மைச் சூழ்ந்திருக்கும் காட்சிகளால் நம்முடைய உணர்ச்சிகள் மாறுபடுகின்றன; சண்டைசெய்து சச்சரவு

படும் மக்கள் நம்மைச் சூழ்ந்திருந்தால் நாம் கொடுமையும் எரிச்சலுமுடைய மனவுணர்ச்சி பெறுகின்றோம். மென்மையும் மரியாதையுமுடைய மக்கள் நடுவண், நாமும் அத்தன்மை யுணர்ச்சி பெறுகின்றோம்.

அளவுக்கு மீறின மரியாதை அருவருக்கத்தக்கதாகும். உண்மையான நயமுடைமையாவது பிறர் மனங் கோணுதபடி நடந்துகொள்வதே.

## 1. பாரசீக மன்னன்

தாழ்ந்தோருடைய நயம்படு செய்கையை உணராத உயர்ந்தோரும், உயர்ந்தோருடைய உதவியைப் புகழாத தாழ்ந்தோரும் இல்லை. ஏனெனில் ஒருதவியோ நயம்படு செயலோ சிறியதா பெரியதா என்பதைப் பற்றியன்று. நாம் மதிப்பது, அவை எத்தகைய உணர்ச்சியினுலும் வழியினுலும் செய்யப்படுகின்றன வென்பதைப் பற்றியே. இதனுலேயே தாழ்ந்தோர் செய்யும் சிறு உதவியும் பெரியதாக மதிக்கப்படுகின்றது. உயர்ந்தோர் செய்யும் பேருதவியும் அவ்வளவாக மதிக்கப்படுவதில்லை. வன்சொற் பேசிக் குடிகளின் வேண்டுகோளை நிறைவேற்றுகின்ற அரசனைக் காட்டிலும் இன்சொல் வழங்கி அவர்களின் விண்ணப்பத்தை மறுத்த விடுகின்ற மன்னனையே அன்புடையவனுக மக்கள் கொள்கின்றனர்.

அருட்சேகரன் என்னும் பாரசீக அரசன் அரண்மனை விட்டுத் தொலைவிலுள்ள ஒரு நகருக்குப் பயணஞ் செய்துகொண்டிருந்தான். வழியிலிருந்த ஓர் உழவன், அரசனுக்கு ஏதாவதொரு காணிக்கை கொடுக்கவேண்டுமென்று எண்ணி, பக்கலில் இருந்த ஒரு சிற்றாற்றினின்றும் ஒரு சிறங்கைத் தண்ணீர் கொண்டுபோய்ச் சென்று அரசன் எதிரில் நின்று, "மன்னர் பெருமானே! இத் தண்ணீரைச் சிறிதருந்தி யருளவேண்டும்,' என்றான். அரசனே அப் புத்தப் புதுமையான காணிக்கையைக் கண்டு, புன்சிரிப்புக் கொண்டு, அவனைநோக்கி, "அன்புடையாய்! இஃது உன்னுடைய பண்பு நயத்தைக் காட்டுகின்றது," என்று சொல்லி அவனுக்கு நன்றிசெலுத்தினர்.

அக்குடியானவன் ஒரு பட்டிக்காட்டானேயாயினும், உள்ளன்புடைய ஒரு குலமகனே யன்றோ!

## 2. அயலூர் சென்ற ஆங்கிலேயன்

ஆயிரம் ஆண்டுகட்கு முன்பு ஆங்கிலேயன் ஒருவன் பக்கத்திலுள்ள நாடுகளைக் கண்டுவரச் சென்றான். அவன் இத்தாலி

நாட்டின் துயூர் நகரடைந்து ஒரு பகல் அந்நாட்டுக் காட்சிகளைக் காணச்சென்றான். அப்போது படைப்பயிற்சி செய்துவிட்டு வந்து கொண்டிருந்த போர்வீரர் கூட்டம் எதிர்வரக்கண்டு ஓரிடத்தில் நின்றான். அப்போது அச்சிறு படைத்தலைவன் ஒரு வாய்க்காலைத் தாண்ட முயன்றான்; கால் தவறிப்போயிற்று. அவ்விடரினின் றும் எப்படியோ தப்பித்துக்கொண்டான். அப்போது அவனு டைய தலைமுடி தொலைவிற்போய் விழுந்துவிட்டது.

அவனைக் கண்ட போர்வீரர்கள் சிரித்துக்கொண்டு நிற்க, ஆங்கு நின்று பார்த்துக்கொண்டிருந்த ஆங்கிலேயனே அது வீழ்ந்துகிடந்த இடத்திற்கோடித் தலைமுடியை எடுத்துக்கொண்டு வந்து அத்தலைவன் கையில் அமைதியோடும் வணக்கத்தோடும் கொடுத்தான். அப்படைத்தலைவன் வியப்பும் வெட்கமுங்கொண்டு ஆங்கிலேயனுக்கு வணக்கமொழி கூறிவிட்டுத் தன் படையுடன் சேர்ந்து போய்விட்டான்.

இந்நிகழ்ச்சி படைப் பெருந்தலைவர் வரையில் எட்டிவிட்டது. அந்நாள் மாலையில் ஆங்கிலேயன் உணவுவிடுதியி லிருந்தபோது படைத் துணைத்தலைவர் அவனிடத்திற்கு வந்து விருந்துண்ணப் பட்டாளத்தின் உறைவிடத்திற்கு அவனை இட்டுக்கொண்டுபோயி னர். விருந்துக்கூடத்திற் போர்த்தலைவர்கள் எல்லோரும் அவ்வாங் கிலேயனை மிகமிக மெய்ச்சிப்பேசினர். பிறகு பெரும்படைத்தலை வர் அவ்வாங்கிலேயனை அரசனுக்கு அறிமுகஞ்செய்ய, அரசன் இத்தாலி மாவட்டங்களின் தலைவர்கள் எல்லாருக்கும் கடிதங்கள் விடுத்து, அவனை நல்வரவேற்கும்படி கட்டளை பிறப்பித்தான். அதனால் அவன் மரியாதையோடும் மேம்பாட்டோடும் அந்நாட்டா ரால் வரவேற்கப்பெற்று, அந்நாட்டின் அழகும் வியப்பும் வாய்ந்த காட்சிகளையெல்லாம் கண்டுகளித்து அவரவர்களின் அன்பையும் ஆதரவையும் பெற்றுத் தன்னூடுபோய்ச் சேர்ந்தான்.

ஒரு பெருமகன் ஓர் அயல்நாட்டிற் சென்றவிடமெல்லாஞ் சிறப்புப்பெறும்படி செய்தது அவன்தன் ஒரு சிறு நயம்பட்ட செய்கையல்லவா?

## 3. அருமையறிவன்

பிரான்சு நாட்டில் அருமையறிவன் என்னும் மன்னனொரு வன் இருந்தான். அவன் தன் குடிகளில் எவரையும் இகழ்ந்து பேசியறியான் மேலும் அரண்மனையில் ஆண் பெண் எவராயினும் குடிகளை இழிவாக நடத்தக்கூடாதென்று கண்டிப்பான கட்டளை யிட்டிருந்தான். மேலும் குடிகளிடம் மிடுக்காகப் பேசுவது, அவர் கள்மேல் இடிவிழுவது போலவும் நச்சம்பு படுவது போலவும்

ஆகும் என்று தன் குடும்பத்தார் எல்லோர்க்கும் அறிவூட்டியும் வந்தான்.

ஒருநாள் மன்னனின் மருமகள் ஒரு குடியானவனைப் பார்த்து, "அழகுகெட்டவனே அப்புறம்போ," என்றாள். உடனே மன்னன் அவளைக் கடுகடுத்துப் பார்த்து, உரத்த குரலோடு, "அம்மா! அவரை நான் நமது நாட்டிலுள்ளவர்கள் எல்லோருக்கும் மேலான அழகுடையவரென்றும் மதிக்கின்றேன்," என்று சொல்லி அவ்வம்மையாரைக் குடியானவரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளும்படி செய்தான்.

௧. பிறர் விருப்பத்தை நிறைவேற்றுதல் நமக்கு மேற்பட்டவரையும் நம்மை விரும்பும்படி செய்யும்; தம்மோடொத்தவரைத் தான் சொல்லுவதை ஒப்பச்செய்யும்; தமக்குத் தாழ்ந்தோரை ஒத்து நடக்கச்செய்யும். அது, வேறுபாட்டை மென்மைப்படுத்தும், பேச்சுக்குச் சுவை கொடுக்கும், உடனிருக்கும் ஒவ்வொருவனையும் மகிழச் செய்யும். அது, நல்லியல்பு தரும், ஈகையை ஈனும், மாட்சக்கு உளத்திட்பங் கொடுக்கும், முரட்டுத்தனத்தைத் தணிக்கும், கொடுமையை அடிமையாக்கும், காட்டாளையும் வீட்டாளாக்கும்.

—அடிசன்.

௨. மரியாதையற்ற சொல்லைப்போலவே செய்கையுந் தவறே.

௩. ஒருவனை அடித்துத் தள்ளுவது போலவே, முரட்டுப்பேச்சும் தவறே.

— ஜான்சன்.

௪. சிறுசிறு குற்றங்களால் தீமை நிறையும்.

௫. அமைதியும் ஆறுதலும் மகிழ்ச்சியைத் தரும்.

௬. மகிழ்ச்சி தருவது மக்களால் முடிந்ததொன்றே.

௭. சிறு தீங்கு பெருங் குற்றம்.

௮. பெரும்பொருள் கொடுத்துதவுவதைவிட, சிறு தீங்குசெய்வதை ஒழித்தலே சிறந்தது.

—ஒரு பெரியார்.

---

## ௧௦. இச்சை கடிதல்

இளையோர் முதியோராகிய ஒவ்வொருவரும் தாம் உடல்நலத்தோடும் உறுதியோடும் உயிரோடிருக்க ஓரளவு உணவுகொள்ளவேண்டும். ஆனால், சிலர் சிறிதளவாகவும் சிலர் மிகுதியாகவும் உணவெடுத்துக்கொள்கின்றனர். ஒருவன் உடல் வலிமையும் உடல்நலமுங் கொண்டவன், ஒருவன் மெலிவும் நலிவுங் கொண்டவன். இவ்விருதிறத்தாரில் ஒவ்வொருவனுக்கும் போதுமான ஓரளவு இருக்கின்றது. அளவு மீறுகின்றவனுக்குத் தீங்கு வந்தே தீரும். உணவு சுவையோடு கூடியிருப்பின் அதனை மிகுதியாக உட்கொள்வதற்கு மக்கள் மனஞ்செல்லும். அவ்விச்சைக்கிடங்கொடுப்பது நோய்க்கிடங்கொடுப்பதாகும். இத்தகைய மீதூணைத் தொடர்ச்சியாக விரும்பின் உடம்பு விடா நோயடையும்.

மீதூண் விரும்புபவன் வயிறுதாரி; சுவையுணவு இச்சிப்பவன் உணவுவிருப்பன். உண்பதிலேயே விருப்பங்கொண்டு இன்பம் நுகர விரும்புகின்றவன், அதை விரும்பாத அயலாரால் இழிவாக எண்ணப்படுகின்றான். உணவை மகிழ்ச்சியோடு அளவாக உண்ணவேண்டும். ஆனால், உணவே எண்ணமாயிருப்பதும், சோற்றுச் சுவையையே போற்றிக்கொண்டிருப்பதும், உணவின்பமே இன்பம் என்றுணர்தலும் மக்கட் பண்பிற்கொத்ததன்று. பேருண்டியைப்போன்று அருவருக்கத்தக்கது வேறொன்றில்லை.

பேருண்டிக்காரனுக்காவது போதும் என்னும் ஓரளவு உண்டு, கள்ளுண்பானுக்கு அஃதில்லை; குடிக்கக் குடிக்கத் தன்னை மறந்துவிடுவான். கள்ளுண்பவன் பிறரெல்லாராலும் எள்ளப்படுவான்; நாணத்தை இழப்பான்; அரும்பொருள்கொடுத்து அறியாமையைக் கொள்வான்; ஊர் நகைப்புக்கும் உறவினர் இகழ்ச்சிக்கும் ஆளாவான்; குடியானவன் என்பதுபோய்க் குடியன் என்னும் பெயரெடுப்பான்; எந்த வேலைக்குமே ஏற்றவனல்லான்; உள்ள பொருளைக் கொள்ளைகொடுத்து இல்லாதவனாவான்; அவன் குடும்பமோ பாழ்பட்டு நோய்பட்டுப் பட்டினிகிடக்கும்.

மீதூண் விரும்புபவனை மிதமாக உண்ணச்செய்யப் பல்வேறு வழிகள் உண்டு; கள்ளுண்பவனைக் காரணங் காட்டிக் குணப்படுத்தமுடியாது; அப்படிச் செய்வது நீர்க்குள் மூழ்கியிருப்பவனை விளக்குக்கொண்டு தேடுதல் போலாக முடியும். ஆகையால் கட்குடியைக் கனவிலும் நினைக்கப்படாது.

## 1. இரு தேனீக்கள்

ஒரு தோட்டத்திலிருந்த இரண்டு தேனீக்கள் ஒருநாள் தேன் தேடிவரப் புறப்பட்டுச் சென்றன. ஒன்று பூப் பூவாக நாடி நாடித் தேன் திரட்டியதுமன்றிக் கூண்டுக்குப் பயன்பட மெழுகை யும் தன் கால்களிற் பற்றிவைத்துக்கொண்டது. உடன்வந்த ஈயோ தேனை வெறுக்க வெறுக்கக் குடித்து வெறிகொண்டு கால் சிறகுகள் தேன்மெழுகுப் பசையால் மாத்துக் கட்டிப்போய்ச் சிறிதும் அசைய முடியாமல் ஒரு தேனிறைந்த பெரும்பூவில் பிணமபோற் கிடந்தது. மற்றொரு தேனீயோ நண்பனைக் காணாது தோட்டமெல்லாந் தேடிப்போய்க் கடைசியாகக் கண்டு, "நண்பா! கூண்டுக்கு வரவில்லையோ!" என்று கேட்டது. அஃது "அப்பா! மட்டற்ற இன்பம் மாள்வதற் கிடங்கொடுத்தது!" என்றுசொல்லி உயிர்விட்டதாம்.

## 2. கார்நரன்

வெனிசுநகரில் கார்நரன் என்னும் ஒரு குலமகன் இருந்தான். அவன் நாற்பதாண்டுவரையிலும் குடிகாரருடன் கூடிக்கொண்டு குடித்து வெறித்து உடலைப் பற்பல நோய்களுக்கு உட்படுத்திப் படாத பாடுபட்டான். நோய்முதலும் அவிழ்தமுறையும் நன்கறிந்த ஒரு மருத்துவர், அவனுக்குற்ற நோய்களையெல்லாம் மருந்து கொடுத்து நீக்கினார். அவன வாழ்க்கையையே முற்றும் மாற்றி விட்டார். அவன் அதுமுதல் இசைசுடிந்த இல்வாழ்க்கையில் அமர்ந்தான். அமரவே அவன் உடல்நலம் பெற்று உள்மகிழ் வடைந்தான்.

இக்குலமகனுக்கு எழுபதாவது அகவையில் ஓர் இக்கட்டு வர, கைகால் என்புகள் உடைபட்டன. எனினும் அவன் நல்ல செய லால் உடலுறுதிபெற்றிருந்தமையால் அறுவை மருத்துவத்தால் உடைந்த என்புகள் உடனே கூடி உடல்நலம் பெற்றான். அவன் எண்பதாவது வயதிலும் மலைமேலும் ஏறிப்போகத்தக்க உடல் வலிமையும் மனத்திடமும் கொண்டவனானான். அவன் தனது தொண்ணூற்றெட்டாவது வயதில் நோய்வருத்தமின்றி அமைதி யுடன் ஆண்டவனடி சேர்ந்தான்.

## 3. சம்பன்னன்

இங்கிலாந்தில் சம்பன்னன் என்னும் ஒருவன் கப்பல் செப்பனிடுந் துறையில் வேலைசெய்துகொண்டிருந்தான். அவன் கூடுவாருடன் கூடிக் குடிக்கக் கற்றுக்கொண்டான். அதனால் தானுந் தன் குடும்பத்துடன் நோய்வாய்ப் பட்டு ஊணுடையின்றி மிக வருந்தினான். இல்லிடமும் பொல்லிடமாய்த் தட்டுமுட்டுக்களுக்கும் முட்டுவந்துவிட்டது.

ஒருநாள் சம்பன்னன் ஒரு பெருந்தெருவிற் போய்க்கொண்டிருக்கும்போது ஒருபெருங் கூடத்தில் நன்மக்கட் கூட்டமொன்று நடந்தேறிக் கொண்டிருப்பதைக் கண்டு உள்ளே நுழைந்தான். ஆங்கு ஒரு பெரியார் கள்ளுண்ணு திருத்தலைப் பற்றிச் சொற்பொழிவு செய்துகொண்டிருந்தார். அவர் குடித்தலின் தீமைகளைப் பற்றியும் குடியாமையின் நன்மைகளைப் பற்றியும் மக்கள் மனத்தில் பசுமரத் தாணிபோல் பதியும்படி பேசினார். அதனை நன்கு கேட்டுக்கொண்டிருந்தான் சம்பன்னன். அதனால் அவன் முற்றும் மனமாறிப்போய்ச் சரேலென்று சொற்பொழிவாளரிடஞ் சென்று, "பெரியீர்! அடியேனை இக்கழகத்தில் ஓர் உறுப்பினனாக ஏற்றுக்கொள்ள வேண்டும்," என்று சொல்லிக் கையொப்பமுஞ் செய்து விட்டான்.

அதுமுதல் சம்பன்னன் தன் வேலையைத் தான் செய்துகொண்டு குடும்பத்தையும் பாதுகாத்துக்கொண்டு வந்தான்; தனது ஊதியத்திலும் மிச்சப்படுத்திக்கொண்டு வந்தான். அவன் குடிகாரக் கூட்டாளிகளைத் தூற்றுமலே தூர விட்டுவிட்டான்.

ஒருநாள் சம்பன்னன் சேமநிதியிற் செலுத்தப் பொற்காசுகளை எடுத்துக்கொண்டு ஒரு தெருவழியே நடந்து சென்றான். பழைய கூட்டாளிகளிற் சிலர், அவனை ஆங்குக்கண்டு, "சம்பன்னா! குடியா நோன்பு எப்படியிருக்கின்றது! உன்முகம் மஞ்சட் பூத்துப் போயிருக்கின்றதே!" என்றார்கள். அதற்குச் சம்பன்னன்; "என் முகம் மாத்திரம் அன்று, எனது சட்டைப்பையும் மஞ்சட் பூத்திருக்கின்றது," இதோ பாருங்கள் அதனிற் பொற்காசுகள் என்று அப்பொற்காசுகளைத் தன்கையில் எடுத்து வைத்துக்கொண்டு காண்பித்தான். அவர்கள் தங்கள் வறுமையை நினைந்து வெட்கிப் போய்விட்டார்கள்.

## 4. எளிய உணவே இன்பந் தருவது

உள்ளக் கவர்ச்சிதரும் உயர்தரமான உணவானது தன்னால் உண்டாக வேண்டிய உடல்நலப் பயனையே ஒழித்துவிடுகின்றது; நோய் கொடுக்கின்றது; பசி கெடுக்கின்றது; அருட்சேகரன் என்

னும் பாரசிக அரசன் தன் பகைவர்க்கஞ்சிப் பட்டிக்காடான ஓரிடத்திற் சென்று பதுங்கி வாழ்ந்துவந்தான். ஆங்கு அவன் அத்திப் பழமும் வாற்கோதுமை அப்பத்தையுமே உண்டுவந்தான். அப்போது ஒருநாள் அம்மன்னன், "இவ்வெளிய உணவின் இன்பத்தை இத்தனை நாளும் அறியாமலிருந்தேனே!" என்றியம்பிக் கழிவிரக்கங் கொண்டானும்.

## 5. கிழவனும் சிறுவனும்

**சிறுவன் :** தாத்தா! நீர் தொண்டு கிழவராய் விட்டீர், நரைத்துப் போய் உதிர்ந்து போகாமல் நின்ற சில தலைமயிரே தலைகாட்டிக் கொண்டிருக்கின்றது; மேலும் உம் உடல்நலமும் மனோதிடமும் சிறிதுங் குறைந்திருக்கவில்லையே! இதற்குக் காரணம் என்ன? தயவுசெய்து தெரியச் செய்வீராக!

**கிழவன் :** பிள்ளாய்! இளமைப் பருவம் நிலையற்றதென்று யான் எப்போதும் நினைவில் வைத்திருப்பேன். ஆகையால் அப்பருவத்திலேயே, முதுமையில் அதனைப் பற்றிக் கழிவிரக்கங் கொள்ளாதிருக்கவேண்டி, யான் உடல்நலத்தையும் உடல் வலிமையையும் தீத்தொழில்களிற் செல்ல விட்டேனில்லை. அக்காலத்திலேயே யான் எது செய்தபோதிலும் எதிர் காலத்தைப் பற்றிய எண்ணம் என் மனத்தின்கண் இருந்து கொண்டே யிருக்கும்.

**சிறுவன் :** தாத்தா! வாழ்நாட்களோ பறந்து போய்க்கொண்டிருக்கின்றன! நீரோ மரணத்தைப் பற்றி மகிழ்ச்சியொடு மகிழ்ந்து பேசிக்கொண்டிருக்கின்றீர்! இது வியப்பினும் வியப்பன்றோ! சற்றுத் தெரிவிப்பீரோ?

**கிழவன் :** பிள்ளாய்! யான் மகிழ்ச்சியாக இருப்பது உண்மையே! யான் சொல்லப்போகின்றதை நீ உன்கருத்தில் கொள்வாயாக. யான் இளமையில் இறைவனை மறந்ததே இல்லை; ஆகையால் அவர் என்னை இம்முதுமையில் மறக்கவில்லை.

க. நஞ்சுண்பார் கள்ளுண்பவர்.

—திருவள்ளுவர்.

உ. குடியருடன் கூடிக் குடித்து வெறித்துக் களிப்பவன் குடும்பத்தைத் தலைகுனியச் செய்கின்றான்.

ஙு. பட்டப்பகலில் மக்கட் கெதிரில் தலைகுனியாமல் முகமேறிட்டு நட.

—ஒரு பெரியார்.

## கக. உடலோம்பல்

உடலின் ஒவ்வோ ருறுப்பும் கேடடையாது தன்தன் தொழிலை எளிதிற் செய்யத்தக்க நன்னிலைமையிலிருப்பதே உடல்நலமாகும். விளக்கமாகச் சொல்லின், வயிறும் குடர்களும் உரங்கொண்டு உணவைச் செவ்வையாகச் செரிப்பிக்கச் செய்யவேண்டும்; நெஞ்சப்பையும் நாடி நாளங்களும் நன்னிலையிலிருந்து செந்நீர் நன்குஓடச் செய்து வரவேண்டும்; மூச்சுப்பை சிறிதும் பழுதின்றி யிருந்து செந்நீர்க்கு ஏற்ற, காற்றைக் கொடுத்துதவவேண்டும்; தலை மூளை நன்னிலையோடிருந்து மனத்தின் தொழில்களை யெல்லாம் மாறுபாடின்றி நடத்துவிக்கவேண்டும்; உடலுக்குள்ளிருந்து ஓய்வில்லாமல் எந்நேரமும் வெளியேறிவரும் வியர்வைநீரை வெளிப்படுத்த உடலின் தோல் துப்புரவாக இருக்கவேண்டும். நாம் இவ்வாறான உடலைப் பெற்றிருப் போமானால், நமக்கு உடலிலும் மனத்திலும் எவ்வித வலியும் மெலிவுந் தோன்றாது; நாம் அன்றாடம் நம் கடன்களை விருப்பத்தோடும் மகிழ்ச்சியோடும் செய்ய வல்லவர்களாவோம். இந்நிலைமையே சிறந்த வரமும் வாய்ப்புமாகும்; இதன் மாறுபாடே உடல் வாட்டத்தை யும் மனக்கோட்டத்தையும் உண்டாக்கும்.

உடற்கேட்டுக்கு முதன்மையான காரணங்களில் இரண்டொன்றையும் அவற்றின் தீப்பயன்களையும் இங்குக் காண்பாம். மீதூணும் துப்புரவற்ற உண்பொருள்களும் வயிற்றுக்குக் கேடுண்டாக்கும்; எண்ணமேல் எண்ணமுங் கவலையும், மூளையையும் நெஞ்சப்பையையும் செந்நீரையும் பழுதுபடுத்தும்; வெதுவெதுப்பா யிருக்கும்போது குளிர் காற்று மேலே வீசுவது மயிர்க்கால்கள் அடைபட்டுப் போய் வியர்வையை மேல்வரவொட்டாமல் அடக்கும். நம்முடைய இத்தகைய தவறுகளால் உடலில் உண்டாகும் மாறுபாடுகள், நோயுறச்செய்து, ஒருவேளை சாக்காட்டை யுங்கூடக் காட்டிவிடும். ஆகையால் உடல்நல விதிகளைத் தவறாமற் கையாளவேண்டியது நமது முதன்மையான

கடமை. இதுவே நம் உடலின் வலிமையையும் நலத்தையும் பேணுவதாகும்.

நோய்களின் மூலங்கள் வெவ்வேறு வகை; அவை முதன்மையாகத் தன்னாலும், தன் மூதாதைகளாலும், அக்கம் பக்கத்தாராலும் உண்டாகின்றன. தன் தாய்தந்தையர், பாட்டன், பூட்டன்மார்கள் பெருநோய்கொண்டிருந்திருப்பார்கள். அது கால்வழி கால்வழியாய் அக்குடும்பத்தாரில் எவரையேனும் பற்றிக்கொள்ளும்; இதுவேயன்றி ஓரிடத்திலுள்ள ஒருவரிடமிருந்து அங்குள்ள இன்னொருவரைப் பற்றிக்கொள்ளும் தொற்றுநோய்களும் உண்டு. ஒருவன் முன்னறிவில்லாமல் ஏற்றுக்கொள்கின்ற நோய்கள் பலப்பல. ஆகையால் ஒருவன் உடல்நல விதிகளைத் தவறாமல் கையாண்டுவருவதோடு, மனத்தூய்மையும் பெற்றிருப்பானாயின் அவனை எந்நோய்களும் அணுகா; அணுகினும் விரைவில் நீங்கிப்போகும்.

நமக்காகவும் நம் மக்கட்காகவும் நாம் கையாளவேண்டிய முதன்மையான உடல்நல விதிகளை இங்கெடுத்துக்காட்டுவாம்.

க. ஈரம் காட்டும் இடத்தில் இல்லம் கட்டாதே.

உ. இல்லத்தின் இடமெல்லாம் துப்புரவாக இருக்க வேண்டும்.

ந. இல்லம் எங்கும் இரவும் பகலும் மெல்லிய காற்றோட்டம் இருந்துகொண்டிருக்க வேண்டும்.

ச. இல்லத்தார் நாடோறும் குளித்து முழுக வேண்டும்.

ரு. ஒவ்வொருவரும் துப்புரவும் அளவுங்கொண்ட உணவைக் குறைவறக் கொள்ளவேண்டும்.

சு. ஒரேவகை யுணவைத் தொடர்ந்து கொள்ளக் கூடாது.

எ. வெறியுண்டாக்கும் குடிநீர்களை வெறுத்துத் தள்ளவேண்டும்.

அ. வெளிக்காற்றில் கூடியவரை சிலநேரம் உலவிவர வேண்டும்.

௯. ஒருநாளில் இருபது நாழிகைக்குக் குறையாமல் உடலினாலேயோ மனத்தினாலேயோ வேலை செய்யவேண்டும்.

௧௦. வேடிக்கை விளையாட்டுக்களிலும் சிலநேரம் கழிக்கவேண்டும்.

௧௧. ஈரம்படவும் குளிர்காற்றிலும் ஒரு வினாடிப் போதும் குந்தியிருக்கவே கூடாது.

௧௨. எவனுக்கும் இரவில் பதினைந்து நாழிகைநேரத் துக்குக் குறையாமல் நல்ல தூக்கம் வேண்டும்.

௧௩. மனத்தின்கண் வருத்தமும் கவலையும் புக வொட்டக் கூடாது.

இவ்விதிகளையும் இவைபோன்றவைகளையும் மக்கள் கையாண்டுவரின் உலகின்கண் நோய்கள் தலைகாட்ட மாட்டா.

## 1. தமக்கையும் தங்கையும்

ஆங்கில நாட்டில் தமக்கையுந் தங்கையுமாய் இரண்டு பெண்டிர் இருந்தனர். தமக்கை படித்தவள், அவள் பள்ளிக்கூட ஆசிரியை. தங்கையோ நல்லவளாயினும் பொதுவறிவு இல்லாதவள். தமக்கை ஒரு சிறு நகரில் வாழ்ந்துவந்தாள்; தங்கையோ ஒரு குடியானவனுக்கு வாழ்க்கைப்பட்டு, ஒரு சிற்றூரில் குடித்தனம் செய்துவந்தாள். இவள் வீட்டைச் சுற்றிச் சதுப்புநிலம்; மழைகாலத்தில் வீடெல்லாம் சில்லென்று போய்விடும்.

ஒருநாள் தமக்கை தங்கை வீட்டுக்கு அவளைப் பார்க்க வந்தாள். வந்தவள் தங்கையின் குடும்ப நலங்கேட்க அவள் "அக்கா! இவ்வீடு எங்கட்கு வாய்ப்பாக இல்லை; நாங்கள் இவ்வீட்டுக்கு வந்ததுமுதல் வைத்தியர் வராத நாள் இல்லை; என் கணவருக்குக் கைகால் பிடிப்பு; எனக்கோ எப்போதும் நீர்க்கோவை; பிள்ளைகளெல்லாரும் மழைக் காலத்தில் தொண்டைநோயினால் வருந்துகின்றனர். சென்ற மழை நாளில் எல்லோருக்கும் காய்ச்சல்; அப்போதுதான் இரண்டு பிள்ளைகளும் ஒரு வேலைக்காரனும் இறந்துபோய்விட்டார்கள். அஃது உனக்குத் தெரியுமே!

தமக்காய்! என்ன தீவினையோ! நாங்கள் இப்பாடுபட்டுக்கொண்டிருக்கின்றோம்!" என்று அழுதுகொண்டே சொன்னாள்.

அதனைக்கேட்ட தமக்கை, "என் அருமைத் தங்காய்! நீ வாய்ப்பற்றவளன்று; முன்னறிவில்லாதவள். உனக்கு வரும் இக்கட்டுக்களெல்லாம் நீங்கள் குடித்தனம் பண்ணும் இடத்தினாலேயே உண்டாகின்றன. இவ்வில்லம் இல்லாத நோய்களையெல்லாங் கொடுக்கும். நீங்கள் இவ்வீட்டில் இருக்கும்வரையில் இந்நிலைமை மாறுபடாது," என்றாள்.

அதனைக் கேட்டுத் தங்கை, "அக்கா! அப்படியா நினைக்கின்றாய்! ஆனால் இவ்விடத்தை விட்டு நாளைக்கே போய்விடுகின்றேன். எங்கே போனாலும் வருகிற துன்பங்கள் வந்துதானே தீரும்! ஒருவேளை அவைகள் மிகுந்தாலும் மிகுமே!" என்றாள்.

அப்போது தமக்கை சொல்லுகின்றாள்: "தங்காய் நீ சொல்லுவது சரியே; துன்பங்கள் எங்கும் உண்டு. ஆனால் இக்கட்டுக்கள் இடைவிடாது நேரிட்டுக்கொண்டிருந்தால் அவைகளை நீக்க வழி தேடிக்கொள்ள வேண்டுமல்லவா? அவ்வாறு செய்யின் அவை குறையுமே தவிரப் பெருகமாட்டா. நாம் உலகவாழ்க்கையைச் செவ்வனே நடத்தற்குரிய சில விதிகள் இயற்கையிலேயே ஏற்பட்டிருக்கின்றன. அதுபோலவே நாம் நமது உடல் நலம் பேணுவதற்கென்றும் சிலமுறைகள் உண்டு. நீங்கள் இந்த இடத்தில் குடித்தனம் பண்ணிக்கொண்டிருப்பதனால் அவ்விதிகளுக்கு மாறாக நடக்கின்றீர்கள். இஃதே உங்கள் துன்பங்களுக்கெல்லாம் காரணம், இஃது உங்கள் தவறேயன்றித் தீவினைப் பயனாகாது".

தமக்கை இவ்வாறு பேசித் தங்கைக்கு உடல்நல விதிகளையெல்லாம் உளத்தில் ஊன்ற எடுத்துக்காட்டினாள்.

தமக்கை அறிவுறுத்தியது தங்கை மனத்தில் நன்றாகப் பற்றிக்கொள்ள அவள் தமக்கை சொற்படியே வேறொரு தூய்மையான இடந்தேடிக் குடித்தனஞ் செய்துவந்தாள். சில நாட்களிற் கணவன் கைகால் பிடிப்புத் தணிந்துபோய்விட்டது. பிள்ளைகளெல்லோரும் நோய்ச் சள்ளையற்றுத் துள்ளிக்குதித்து விளையாடி மகிழ்ச்சியோடிருந்தனர். தாயின் விடா நீர்க்கோவையும் அவளைத் தொடாதொழிந்தது. இவ்வாறு அக்குடும்பமெல்லாம் நோயென்பதற்றுச் சிறந்த உடல்நலம் பெற்றுச் சீருற்றது.

## 2. சேரியாமல் துன்புற்ற பெருமகன்

திருவிற் குறையாப் பெருமகனொருவ னிருந்தான். அவன் எங்கே போனாலும் வண்டியிலேயே போவான்; விரும்பிய உண்

பொருள்களையெல்லாம் ஒன்றுவிடாமல் தின்பான். இவ்வாறிருக்கச் சிலநாட்களில் அவனுக்கு உணவு செரியாமல் உடல்நலக் கேடுற்றது. அவன் ஒருநாள் ஒரு மருத்துவரை யழைத்துத் தன்னுடைய நோயை மருந்தளித்துத் தீர்க்க வருந்திக் கேட்டுக் கொண்டான்.

அம் மருத்துவர் நோய்மூலமும் அளவுமறிந்து, அதனைத் தீர்க்கும் வழியையும் நாடித் தெரிந்துகொண்டு, அவனைப் பார்த்து, "ஐயா! அப்படியே செய்யலாம், ஆனால் இப்போது நாமிருவரும் வண்டியிலேறிச் சிறிது தூரம் போய்வரலாம்; யானே வண்டியைச் செலுத்துகின்றேன்," என்றான். அதற்கு அச்செல்வன் ஒத்துக் கொண்டான். இருவரும் வண்டியிலேறி அரைக்காவதம் சென்றதும், மருத்துவர் சட்டெனச் சவுக்கைத் தவறினாற்போற் கீழே போட்டுவிட்டுப் பெருமகனை நோக்கி, "ஐயா! தயைகூர்ந்து சற்றுக் கீழே யிறங்கிச் சவுக்கை யெடுத்துக் கொடுப்பீரா?" என்றார். உடனே அச்செல்வன் அதனையெடுத்துவரக் கீழே இறங்கியதும், வைத்தியர் வண்டியை வந்தவழி திருப்பி ஓட்டிக்கொண்டே புன்சிரிப்புடன் திரும்பிப்பார்த்து நோயாளியை நோக்கி, "தாங்கள் சிறிது நடந்து வீடுவந்து சேர்ந்துவிடுங்கள்," என்று சொல்லிக் கொண்டே குதிரையை விரைந்தோடச்செய்து வீடுசென்றார். செல்வனும் நடந்து வீடுவந்து சேர்ந்தான்.

அச்செல்வனுக்கு அதுவே நோய்தீர்க்கும் முதலுதவியாயிருந்தது அன்று பசியெடுத்து உணவுகொண்டான். பிறகு மருத்துவர் அன்றுபோலவே என்றும் அவனை எங்குச்சென்றாலும் நடந்து போய்வரச்சொல்லி, வேறு சில பரிகாரங்களுஞ்செய்து சின்னாட்களிலேயே உற்ற நோயை முற்றும் போக்கினார்.

இதுபோலவே செரியாமை நோயடைந்திருந்த வேறொருவனுக்கு இன்னொரு வைத்தியர் சொன்னதாவது:

"அப்பா! ஒருநாளில் ஆறணாவே செலவுசெய்து உணவருந்திக்கொண்டு வா; அதனையும் உடலாலுழைத்துப் பெறுவாயாக," என்று அறிவுரை கூறி அனுப்பிவிட்டாராம்.

## 3. ஒரு செட்டிச் சிறுவன்

ஒரு நகரில் ஒரு செட்டிப் பையன் பேசும்படக் காட்சிக்குச் சென்று நள்ளிரவில் வீட்டுக்கு வந்தான். அப்போதே அவன் உடம்பு சிறிது குளிர்ச்சியடைந்திருந்தது. அவன் மறுநாள் ஓய்வெடுத்துக்கொண்டிருப்பானாயின் அக்குளிர்ச்சி மாறியிருக்கும். அப்படிச் செய்யாமல், அவன் காலையிலெழுந்து கடைக்குப்போய்

வேலைபார்த்துக் கொண்டிருந்தான். அன்று மாலை அக் குளிர் நோய் சிறிது மிகுந்தது. அடுத்த நாளும் உடம்பைப் பார்த்துக் கொள்ளாமல் வேலைக்குச் சென்றான். அதற்கடுத்த நாள் அவனுக்குத் தொண்டை கட்டிக்கொண்டிருந்தும், அதனைப் பொருட்படுத்தாமலே, கொடுக்கல் வாங்கல் வேலையாக ஒரு காவதத் தொலைவிலிருந்த வேறொரு செட்டியாரிடம் போய்வந்தான். மறுநாள் அவனால் வாய்திறந்து பேசவே முடியாமற் போயிற்று.

இவ்வாறாக ஒரு நண்பன் இச் செட்டிமகனைக் கடையிற் கண்டு, "என்ன, கம்பளிப்போர்வை! உடலும் நடுக்கலடுத்துக் கொண்டிருக்கின்றதே!" என்றுகேட்க, அவனுடன் பேசமுடியவே இல்லை செட்டிமகனார்க்கு. இதனைக் கண்ட நண்பன், "செட்டியாரே! இப்போதே இல்லத்துக் கேகிவிடுங்கள்; உடனே ஒரு வைத்தியரை யழைத்து உங்கட்கு ஏதாவது மருந்து கொடுக்கச் சொல்லுங்கள்," என்று சொல்லி அவனை ஒரு வண்டியிலேற்றி வீட்டுக்கு அனுப்பிவிட்டான்.

வைத்தியர் பிள்ளையாண்டானுடைய நோயை நாடிப் பார்த்த போது, காற்றுக் குழாயும், காற்றுப் பைகளுக்குச் செல்லும் குழாய்களும் மருத்துவம் மீறிப் புண்பட்டுப்போயிருந்தன. வைத்தியர் ஆவனவெல்லாம் செய்தும் செட்டியார் குபேரச் செல்வத்தையும் குடும்பத்தையும் இங்குவைத்துக் கூடுவிட்டு அங்குப் போயினர்.

நல்ல பிள்ளையாண்டான்! பெரும்பேறுடைய விருந்தவன்! சிறிது அறிவின்மையால் இளமையிலேயே உயிர்துறந்தான்.

க. ஓ! வாழ்த்துப்பெற்ற உடல் நலமே! பொன் பண்டாரங்களுக்குமேல் நீ நிற்கின்றாய்! உயிரை உயர்த்துகின்றாய்! கல்வியறிவிற் கருத்தைச் செலுத்துகின்றாய்! நற்குணங்களை நல்கி இன்பம் நிறையச் செய்கின்றாய்! உன்னைப் பெற்றவன் எல்லாம் பெற்றவன்! உன்னைப் பெறாதவன் உன்னோடு ஒன்றையும் பெறாதவன்!

—ஸ்டெர்னி

உ. உடல் நலத்துக்கும் நீண்ட ஆயுளுக்கும் வேண்டியவை எவை?

இச்சைகடிதல், வெளிக்காற்று, அளவுழைப்பு, சிறிது உன்னிப்பு.

—ஸர் பிலிப் ஸிட்னி.

௩. தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோயள வின்றிப் படும்.

—திருவள்ளுவர்.

௪. போனக மென்பது தானுழந் துண்டல்.

—ஔவையார்.

௫. உள்ளம் பெருங்கோவில்

—திருமூலர்.

௬. மக்கள் உடலே ஆண்டவன் கோவில்

—இயேசுநாதனுர்.

௭. உழைப்பின்றேல் பிழைப்பில்லை

—ஒரு பெரியார்.

௮. உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ ?

—பட்டினத்தார்.

## கஉ. மனம் நிறைவு

ஒருவனுக்கு உணவுக்குறைவு உடைக்குறைவு இருக்கலாம்; ஒருவன் ஈரங்காணும் வீட்டிற் குடியிருக்கலாம்; ஒருவன் தொழிலுக்குரிய கருவிகள் பழுதுபட்டிருக்கலாம். உடல் வலிமையும் மனத் திறமையு முடையவர்களாயிருப்பின் இக் குறைபாடுகளை யெல்லாம் எளிதில் நிறைவு செய்துகொள்ளலாம். இதைவிட்டு அவர்கள் மனநிறைவின்றியிருந்தால் அது பெருங் குற்றமேயாகும். உலகத் தோற்றமுதற்கொண்டு மக்கள் இம்மாறுபாடான மனம் நிறைவின்றியிருப்பாராயின், உலகமே இப்போது காட்டுமிராண்டிகளின் இருப்பிடமாக இருக்கும்.

நம் திறமைக்கும் ஆற்றலுக்கும் தக்கபடி கிடைப்பவைகளில் மகிழ்ச்சியும், தவிர்க்கமுடியாத கெடுதல் காலத்தில் பொறுமையும் பெற்றிருப்பதே உண்மையான மன நிறைவு ஆகும்.

தான் கண்ட நன்மையோடு மனநிறை வடையாதவன் சிலர் நன்மைமேல் தனக்கு நன்மைகள் வரவேண்டுமென்றெண்ணுவான். சிலர் பட்டமேற்பட்டம் பெற்றாலும் பேராசையால் மேலும்மேலும் உயர் பட்டங்களைப் பெறுவதையே விரும்புவர். ஆதிகாலத்தில் தனக்குத் தெரிந்த நாடுகளையெல்லாம் வெற்றிகொண்ட ஓரரசன், இன்னும் அவ்வாறு பெறுவதற்கு வேறு நாடொன்று மில்லையே என்றழுதானும்.

பெருநிதி பெற்று உயர்நிலை யடைந்தோர்க்கு மனவமைதியென்பது இராது; இடுக்கண்மே லிடுக்கணே இருந்துகொண்டிருக்கும். ஒருவன் உயிர்வாழ்க்கைக்கு வேண்டிய அளவு பொருளுடையவனு யிருந்து மனநிறைவும் பெற்றிருப்பானுபின், அவன் இடுக்கணற்று அமைதியுற்று மகிழ்ச்சியோ டிருப்பன். மனநிறைவு என்பது நல்லதே; நீக்கக்கூடிய துன்பங்களை நீக்கிக்கொள்ளாமல் அவற்றினுல் வருந்திக்கொண்டிருப்பது போலி மனநிறைவேயாகும். அது மனநிறைவுக்கு மாருக உயிர்க்குக் கேடு தருவதொன்ருகும்.

## 1. பேராசைப் பேயன்

நாளுக்கொரு பொன்முட்டை யிடும் ஒரு வாத்து ஒருவனிடம் இருந்தது. 'சேரச்சேரப் பொன்னாசை, பெறப்பெறப் பிள்ளையாசை,' என்பதுபோல், இவ்வாத்துக்காரனைப் பேராசைப் பேய் பிடித்துக்கொண்டது. அவன் ஒருநாளிரவு படுக்கையில், 'இவ்வாத்தின் வயிற்றிற் பொன்முட்டைகள் இருக்கின்றன; அஃது ஒரு நாளைக்கு ஒரு முட்டைதானே நமக்கு இட்டுக் கொடுக்கின்றது; நாம் என் அம் முட்டைகளை யடையப் பலநாட்கள் காத்துக் கொண்டிருக்கவேண்டும்! அவைகளை யெல்லாம் ஒரேநாளிற் பெற்றுக்கொள்ள நம்மால் முடியாதா! அதனைக் கொன்றுவிட்டால் நமதெண்ணம் நிறைவேறிவிடுமே!' என எண்ணினான்.

அவன் இவ்வெண்ணத்துடன் பொழுது விடிந்ததும் எழுந்து போய் வாத்துக்கூண்டைத் திறக்கவே, அவ்வாத்தண்டை அன்று இடவேண்டிய ஒரே பொன்முட்டை இட்டு இருந்தது. அதனை எடுத்துக்கொண்டு போய் வைத்துவிட்டு, ஒரு சூரிக்கத்தியுடன் திரும்பிவந்து அவ்வாத்தின் கழுத்தை யரிந்து, அதனைக் கொன்று, அதன் வயிற்றையும் பிளந்து பார்த்தான். பார்த்தவன் அங்கு ஒரு பொன்முட்டையுங் காணாமல் வருந்தி ஏக்கங்கொண்டவனாய், 'என் பொன் வாத்தே! உன்னையும் இழந்து பொன்னையு மிழந்தேனே! பேராசையினால் ஆராமை மேற்கொண்டேனே! நீ உயிரோடிருந்தால் என் வீடெல்லாம் பொன்மயமாய்விடுமே!'' என்று சொல்லி எண்ணியெண்ணி மனம் புண்ணாயழிந்து, சின்னாட்களில் உயிருந் துறந்தான்.

## 2. மந்திரி தந்தாசர்

இங்கிலாந்தில் மூன்றாம் ஜார்ஜ் மன்னர் காலத்தில் தந்தாசர் என்னும் அரசியல் நிபுணர் ஒருவர் மந்திரியாக இருந்தார். நாட்டுக்கு நலம் செய்யும் பொறுப்புக்களை யெல்லாம் மன்னர் அவரிடமே விட்டுவைத்தார். அவர் நாடோறும் நாட்டுநன்மைகளைப் பற்றியே எண்ணமிட்டுக் கொண்டிருப்பார். அயல்நாட்டுத் தொடர்பு வினைகளிலும் அவர் தம்மரசே மேன்மைபெறச் செய்வார். வேறுபாடுகளுக்கும் தந்நாட்டுக்கும் ஒன்றுக்கொன்றுள்ள சண்டை சச்சரவுகளில் தம் நாடே வெற்றிபெறச்செய்வார். இவ்வாறு மன்னனுக்கும் மக்கட்கும் மகிழ்ச்சிதரும் வேலைகளையே செய்வதில் அவருக்கு ஓய்வு ஒழிவு கிடையாது. பேரின்மேற் பேரும் பெருமையின்மேற் பெருமையும் பெறுவதே அவர்தம் நோக்கம்.

புத்தாண்டு பிறந்து ஒருநாள் தந்தாசர் நண்பரொருவர் அவரைக் காணவந்து, "நண்பரே! இப்புத்தாண்டில் சென்ற

வாண்டுக்குமேல் தாங்கள் ஒவ்வொருநாளும் உளமகிழ்ச்சிகொண்டு வாழ்வீராக !" என்றார். அதற்குத் தந்தாசர் சொல்லுகின்றார், "ஐயா, சென்ற வாண்டில் ஒருநாளும் எனக்கு ஓய்வும் மன நிறைவும் இருந்ததேயில்லை. இவ்வாண்டில் எப்படியோ !"

கணக்கற்ற வெற்றியும் மட்டற்ற பெருமையும்கூட மக்கட்கு மனநிறைவு கொடுக்கவில்லையே ; என, வருந்திப் போயினர் நண்பர்.

## 3. வறுமையிற் செம்மை

ஒரு நகரில் தாய் தந்தையரற்ற பெத்தாள் என்னும் ஒரு பெண் பிள்ளையைச் செல்வப் பேறுபெற்ற அவளுடைய மாமன் மாமியர் வளர்த்துவந்தனர். அவர்கள் பணக்காரராக இருந்த போதிலும் அளவறிந்த வாழ்க்கையும் அறிவறிந்த ஒழுக்கமு முடையவர்கள். அக்குலமகன் அடிக்கடி தம் வீட்டுப் பிள்ளை களோடு மனக்கிளர்ச்சியுடன் பேச்சுக்கொடுத்துக் கொண்டிருப் பார். அவர் அப்பிள்ளைகளுக்கு இடைநடுவில் என்ன கற்பிப்பார் என்றால், எவர்மேலும் குற்றஞ் சொல்லாதீர்கள் ; எக் குடும்பத் தையும் பழிக்காதீர்கள் ; ஒருவர் உடையையும் தொழிலையும் பற்றி இழிவாகப் பேசாதீர்கள்; ஆகிய இவையும் இவைபோன் றனவுமாம்.

சிலகாலம் சென்றபின், பெத்தாளும் பெரிய பெண்ணானாள் ; அவளுக்குத் திருமணமும் நடந்தேறியது. ஆனாலும் அவள் இச் சிறந்த வாழ்க்கையில் சிலவாண்டுகளே இருந்தாள். மாமன் மாமியர் மருவிய கணவன் ஆகிய மூவரும் மேலுலகெய்தினர். இவள் தன் னந்தனியாக இருந்து திக்கற்றவர்களாய்த் தவித்தாள்; சிலநாட்கள் தன்னுழைப்புக்கொண்டே பிழைத்துவந்தாள். இப்படியிருக்க அவளுடைய சிறு குடில் தீப்பிடித்துவிட்டது. அவள் திடீரெனப் பலகணியின் வழியே வெளியில் குதித்தாள். கீழே விழுந்தாள். அதனால் அவளின் வலக்கை யொடிந்து வலதுகாலும் நசுங்கிப் போயிற்று. மருத்துவசாலையில் வலது முழங்கையை வாங்கிவிட்டு வலக்காலைக் குணப்படுத்தி யனுப்பிவிட்டனர். எனினும் அக் கால்களும், கைகளும் ஒன்றுக்கும் உதவாமற் போயின. பிறகு அக்கம்பக்கத் தன்பர்களுதவியால் சிலநாட்கள் காலங்கழித்தாள். ஆனாலும் ஆயுள் வரையில் அவ்வாறே வாழ்வோமென்ற நம்பிக்கை அவளுக்கு இல்லை. அதனால் முடிவாகத் தீரவெண்ணி ஓர் அறக் கூழ்ச்சாலையிற் சேர்ந்துகொண்டாள். அங்கிருந்துகொண்டு சோறுண்பது, அவளுக்கு அவமானமாகத் தோன்றவில்லை ; ஏனெனில் நற்குணமும் நன்னடக்கையுமே சிறந்ததென்பது அவள் கொள்கை. அவள் அங்குப் பொறுமையும் அமைதியும்

மனக்களிப்பு முள்ளவளாக நடந்துவந்தாள். அவள் அங்குச் சிறுவர்களுக்கு அறிவுரை கூறுவாள்; முதியோர்களிடம் இரக்கங் காட்டுவாள். தானறிந்த நல்லொழுக்க நிலைகளையெல்லாம் அங்குள்ளார்க்கு எடுத்துச் சொல்லுவதிலும், அவர்களுடன் வேடிக்கையாகப் பேசுவதிலும் காலங்கழித்துக்கொண்டு மகிழ்வுடன் வாழ்ந்துவருவாள். இவ்வாறான அவளுடைய நடவடிக்கைகளே அச்சாலைக்கோர் அழகும் மேன்மையுங் கொடுத்தன. அச்சாலையைப் பார்வையிட வந்தவர்களெல்லோரும் பெத்தாளின் அறச் செயல்களைக் கண்டு மெய்ச்சி, வேண்டும் உதவிகளும் செய்துபோயினர்.

க. வேலையை இகழ்வோர் வீணரே யாவர்.

உ. உழைத்துச் செய்வதே உண்மை வாழ்க்கை.

ங. உழைத்து உண்பதே சுவையோ டுண்கை.

ச. உழைப்பு இன்றேல் உண்பொருள் இல்லை.

ரு. ஆராமை தானே அழிவைக் கொடுக்கும்.

சா. கைசெய் யுணவு காட்டும் ஆர்வு.

எ. செல்வமோ டுயர்நிலை சேர்க்கும் ஆராமை.

அ. உண்மை யுணர்வே உளத்தார்வு அளிக்கும்.

—ஓர் உழைப்பாளி.

கூ. எனக்கு வறுமையும் வேண்டாம், வளமையும் வேண்டாம்; போதுமான உணவை எனக்குக் கொடு; மீறின உணவு உன்னை மறுக்கச்செய்து, 'எவனவன் கடவுள் என்று கேட்கச்செய்யும்; அல்லது என்னை வறியோனாக்கித் திருடச்செய்து உன்னையும் பழிக்கச்செய்யும்.

—பழமொழிகள்.

க0. எனக்குள்ளது எனக்குப் போதும்; மேலும் மேலும் ஆசைப்பட்டால் உலகின்கண்ணுள்ள எல்லாமும் போதாது.

—மான்டெக்னி.

கக. பதிற்றுப் பத்தாயிரம் ஆசையை விற்று மன நிறைவு என்னும் முத்துமணியை வாங்குகின்றவன், பேரறிவாளியாவான்.

—பாலு.

கஉ. போதுமென்ற மனமே பொன்செய்யு மருந்து.

—பழமொழி

கங. செல்வம் என்பது சிந்தையின் நிறைவே.

—குமரகுருபரர்.

# கங. செட்டு நெறி

நாம் உயிரோடு வாழ்ந்திருப்பதற்கு உழைத்துப் பொருளீட்டவேண்டும். ஈட்டிய பொருளை விழிப்போடும் பகுத்தறிவோடும் பயன்படுத்த வேண்டும். வருந்தி உழைத்து ஈட்டிய பொருளைக் கண்டபடி செலவழித்து விடுவோமானால், சோம்பி யிராமல் வேலைசெய்தோம் என்பது தவிர அதனால் வேறொரு பயனும் இல்லை. வருந்தியும் வேலைசெய்யாமல் வருவாயும் குறைவாயிருக்கும் போது மனம் போனபடி செலவுசெய்வது இன்னுங் கேட்டைப் பயக்கும்; சிறு தேட்டமும் சிதறுண்டுபோய்க் கடன் பட்டுக் கவலையிலாழ்ந்து அல்லலுழக்கவேண்டியதே!

வருவாய்க்குத் தக்கபடி செலவுசெய்து சிறிது மிச்சப் படுத்தியும் வைக்கவேண்டும். அப்படிச் செய்வது எதிர் காலத்தில் வரும் நோய்ப்பாட்டுக்கோ, கிழத்தனத்துக்கோ அல்லது எதிர்பாராத இக்கட்டுகட்கோ பரிகாரங் கொடுக்கும்; பிற்கால உதவிக்கென்று சிறிது தொகை சேர்த்து வைத்துககொள்வது எவருக்கும் இன்றியமையாததொன்றாகும்.

நாம் எவ்வளவு செல்வப்பேறுடையவர்களா யிருந்த போதிலும், பொருளை நல்வழிகளிற் செலவுசெய்யவேண்டும். அறிவற்ற தீச்செயல்களிற் செலவழித்த பொருள், அதனை யீட்ட நாம் பட்டபாட்டைப் பாழாக்கிவிடும். அத்தகைய பொருளை நாமும் இழந்தோம்; உலகமும் இழந்தது! உணவுப் பொருள்களையும், வீட்டுத் தட்டுமுட்டுக்களையும் பாழ்படுத்தக்கூடாது. இழிவான செயல்களிற் செலவுசெய்யும் பணத்தையும், தட்டுமுட்டுக்கள் வாங்கிய பணத்தையும் ஏழைகளுக்குக் கொடுத்தல் எவ்வளவு மேலானதாகும்!

## 1. ஒரு சிக்கனக் குடும்பம்

செல்வப் பெருக்கும் செல்வாக்குமுடைய ஒரு பெருஞ் செல்வர் தம்முடன் கல்விபயின்ற ஒரு நண்பரைக் காணப் போனார். போனவர் நண்பர் வீட்டுவெளியில் நின்று பார்த்தார். வீட்டின்

முன்பக்கத்தின் காட்சியே அவர் மனத்தைக் கவரச்செய்தது. வீடு அவ்வளவு தூய்மையாகவும் ஒழுங்காகவுங் காணப்பட்டது. உள்ளே நுழைந்ததும் நண்பரால் அவர் நல்வரவேற்புக் கொடுக்கப்பட்டார். வந்தவர் நண்பரின் வேண்டுகோளின்மேல் மூன்று நாட்கள் அங்கேயே தங்கிவிட்டார். அவ்வீட்டில் அவர்கண்ட சிக்கன வாழ்க்கைச் செய்திகளைத் தாம் தமது வீட்டுக்குத் திரும்பிப் போய்த் தம் பெண்டுபிள்ளைகளுக்குத் தெரிவித்தார். அவை யாவன :—

1. அவ்வீடு இடம்படாது எடுத்த வீடு.
2. எங்குப் பார்த்தாலும் தூய்மை குடிகொண்டிருந்தது.
3. வீட்டார் தண்ணீரையும் அளவாகச் செலவிட்டனர்.
4. தட்டுமுட்டுக்கள் எப்போதும் துப்புரவாக விருந்தன. அவைகளில் ஓட்டையுடைப் பென்பதில்லை. அவைகளும் இன்றியமையாதனவே; பயன்படாத தொன்றுமில்லை. ஒவ்வொரு பொருளுக்கும் ஒவ்வோரிடமுண்டு; வீட்டார் எடுக்கும் எந்தப் பொருளையும் இடமாற்றி வைக்கமாட்டார்கள்.
5. குட்டிகுழந்தைகளுங்கூடக் குளித்து முழுகித் துப்புரவான உடையையே மேற்கொள்வார்கள். அவைகளும் குறைந்த விலை யுடையனவே.
6. வீட்டு மக்கள் அளவோடுண்டு உரமுடன் நோய்க் கிடங்கொடாமல் இருக்கின்றனர்.
7. அவ்வீட்டில் எந்தப் பொருளும் பாழ்படுவதில்லை.
8. துண்டு துணுக்குகள் எதுவும் கீழே விழுந்து கிடக்கா ; விழினும் உடனே செத்தைப்பெட்டியில் சேர்க்கப்படும்.
9. அந்த வீட்டில் வேலையா ளொருவருமில்லை; வீட்டுப் பிள்ளைகளே வேலைகளைப் பங்கிட்டுக்கொண்டு செய்து விடுவார்கள்.
10. பெண்டுபிள்ளைகள் தங்கள் உடைகளைத் தாங்களே தைத்துக்கொள்வார்கள்; அழுக்காடைகளைத் தாங்களே அழுக்குப் போக்கிக்கொள்வார்கள்.
11. அவர்கள் ஒவ்வொருவரும் ஏதாவதொரு வேலையைச் செய்து கொண்டே இருப்பார்கள்.
12. சிறுவருஞ் சிறுமியரும் பிறர்க்குப் பணிசெய்வார்களே தவிரப் பிறரிடம் வேலைவாங்கமாட்டார்கள்.
13. அறிவற்றதனமாக வாழ்வதென்பது அவ் வீட்டாரிடமில்லை.

14. பிறர் பெருஞ் செலவுசெய்து முடிக்கும் வேலைகளை இவர்கள் சிறு செலவில் நிறைவேற்றிவிடுவார்கள்.

15. வேலைசெய்யப் போகும்போது நடந்து போதலே நல்லதும் உடற்பயிற்சியும் ஆகுமென்பது அவர்கள் கொள்கை.

16. அவர்கள் வேடிக்கை விளையாட்டுக்களுக்குப் போவது அத்தி பூத்தாற் போலத்தான்.

17. ஒருநாள் நண்பர் கடைக்குப்போய் வாங்கிய பொருள்களைப் பொட்டலங்களாகக் கட்டிக்கொண்டு வந்தார். இல்லாள் அவைகளை உடனே அவிழ்த்து அவ்வப் பொருள்களை அவ்வவ்விடங்களிற் சேர்த்தாள். உடனே ஒரு பிள்ளை காகிதங்களை மடித்து ஓரிடத்திற் சேர்த்தது; மற்றொரு பிள்ளை நூலைச்சுற்றி மற்றோரிடத்தில் வைத்தது; இன்னொரு பிள்ளை குப்பையை விளக்கிக் குப்பைத் தொட்டியிற் கொண்டுபோய்க் கொட்டிவிட்டது.

இவைகளையெல்லாஞ் சொல்லி அச்செல்வர் கடைசியாக, "நாம் திரண்ட செல்வத்துடன் நல்வாழ்வு வாழ்ந்தும், அங்கே மூன்று நாட்கள் நான் கொண்டிருந்த மனநிறைவு இங்கு ஒரு நாளும் இன்று," என்று கூறி முடித்தார்.

## 2. ஒரு பொன்னின் மதிப்பு

ஒரு நாட்டுப்புறத்துப் பையன் அடுத்த நகர் ஒன்றில் ஒரு கலாசாலையில் படித்துக்கொண்டிருந்தான். அவனுடைய தந்தையார் மற்றச் செலவுகளோடுகூடக் கைச்செலவுக்கும் திங்களொன்றுக்கு ஒரு பொன் கொடுத்துக்கொண்டு வந்தார். பையனுடைய நண்பர்கள் சிலர்க்கு அவர்களின் பெற்றோர் கைச்செலவுக்கென்று கிழமைக்கொரு பொன் கொடுத்துக்கொண்டுவந்தனர். இதனைக் கண்ட இவனும் அதேபோலத் தனக்கும் அனுப்பவேண்டுமென்று தன் தந்தையாருக்கு எழுதியனுப்பினான். அதற்கு அவர் கடிதம் மூலம் அவனுக்குத் தெரிவித்ததாவது :—

என் அருமை மைந்த !

உனக்குக் கிழமையொன்றுக்குப் பொன்னொன்று அனுப்பி வைப்பதற்கு நான் வருத்தப்படவில்லை. ஆனால், யான் சொல்வதைக்கேள் :—

1. இந்தப் பணத்துக்கு அரிசி வாங்கினால் நம்முடைய குடும்பத்துக்கெல்லாம் ஒரு திங்கட்குப் போதுமானதாகுமே !

2. அல்லது, இந்தப் பணத்துக்கு நாம் இரண்டு ஏழைக்குடும் பங்களைக் காப்பாற்றலாமே!

3. அல்லது, இந்தப் பணத்துக்கு நாலைந்து ஏழைப்பிள்ளை களுக்குப் பள்ளிக்கூடக்கட்டணம் கொடுத்துதவலாமே!

4. அல்லது, இந்தப் பணத்துக்கு இரண்டு மூன்று ஏழைப் பிள்ளைகளுக்குத் திங்களுணவு கொடுத்துக் காப்பாற்றலாமே! இன்னுங் கேள்!

5. இந்தப் பணத்துக்குக் கிழமைதோறும் படங்களுஞ் செய்திகளுங்கொண்ட கிழமைத் தாள்கள் வாங்கிப் பார்த்துப் படிக்கலாமே!

6. அல்லது, இந்தப் பணத்தை ஒரு நூல்நிலையத்தில் பிணைப் பொருளாகக்கட்டிவைத்துவிட்டால், ஒரு திங்களில் எத்தனையோ உயர்நூல்கள் எப்போதும் வாங்கிப்படித்துக்கொண்டிருக்கலாமே! அத்தொகையும் மிச்சமாகுமே!

7. அல்லது, இந்தப் பணத்தைக்கொண்டு அரியபெரிய நூல் கள் எத்தனையோ வாங்கிப் படித்துப்படித்து நமது வீட்டில் சில் லாண்டுகளில் ஒரு நூல்நிலையமே ஏற்படுத்திவிடலாமே!

8. இப்போதுஞ் சொல்கின்றேன். நீ கேட்கும் தொகையைக் கொடுப்பதற்கு யான் விருப்பமில்லாமலில்லை. அதனைக்கொண்டு உனக்கும் பிறர்க்கும் நன்மைதரும் வழிகளிற்பயன்படுத்தாமல் உன் கூட்டாளிகள் செய்வதுபோல் வம்புக்கும்தும்புக்கும் செலவழித்து விடுவது நல்வினையாகுமா, என்பதனை எண்ணிப்பார்! இதற்கு உன் மறுமொழியை எதிர்பார்க்கின்றேன்.

—அன்புள்ள தந்தை-

இவன் நல்ல தன்மையனாதலால், தந்தையார் கடிதத்தைப் படித்துப் பார்த்துவிட்டு, அவர்க்கு நன்றி கூறி யெழுதியனுப் பினனே தவிர, பொன் கேட்டானில்லை.

## 3. செட்டுநெறிப் பெருமக்கள்

1. பெரியோனென்று சொல்லப்படும் அலெக்ஸாண்டர் மன்னர் தமது மிகக்கீழான அலுவலாளர் போலவே எளிமையான உடைகளையே யணிந்து கொள்வாராம்.

2. கேதோவென்னும் உரோமநாட்டுத் தலைவர் ஐந்து ரூபா வும் பெறமாட்டாத சட்டையொன்றையே தரித்துக்கொண்டு 'அது மதிப்பற்றது' என்பாராம்.

3. அரசர்க்கரசராகிய அகஸ்டஸ் என்பவருடைய உடைகளைத் தையற்காரன் தைக்கிறதில்லையாம்; அவ்வேலையை அவர் தம் மனைவியாரே செய்துவிடுவாராம்; அவர் படுப்பதும் எளிமையான படுக்கையேயாம்.

4. ஜெர்மானிய மன்னர் ஒருவர் கிழிந்த உடையுடன் ஓர் அப்பக்கடைப்பக்கம் குளிர்காயப்போக, அப்பக்காரி, "வறுமை பிடித்தவனே! தொலைவிற் போய்விடு," என்று திட்டித் துரத்தி விட்டாளாம்!

5. பதினொன்றும் லூயி என்னும் பிரான்சு மன்னர் கணக்கேட்டில் 'கிழிந்த ஆடை தைப்பதற்கு ரூபா ஒன்று' என்று எழுதியிருந்ததாம்.

இதுபோன்ற மன்னர் சிக்கனச் செய்திகள் வரலாற்று நூல்களிற் கணக்கற்றவை காணலாம்.

இப்படிப்பட்ட மன்னாதி மன்னரெல்லாரும் நாட்டுவளர்ச்சிக்கென்று செலவுசெய்த பணத்தொகை இவ்வளவவ்வளவென்று சொல்லிமுடியாது.

---

## கசு. உதவி செய்தல்

மக்கள் ஒவ்வொருவரும் தத்தமக்குத் தேவையான வைகளையும் தாங்கள் விரும்பும் பொருள்களையும் தாமே தேடிக்கொள்ளவேண்டியது உண்மையே. ஆனால், மக்கள் எல்லோருமே பொதுவான தொடர்புகொண்டு பற்பல வகையில் ஒருவருக்கொருவர் கட்டுப்பட்டுள்ளனர். ஆகையால் அவர்கள் செவ்வி நேரும்போதெல்லாம் ஒருவருக்கொருவர் நலங்கருதித் தொண்டும் உதவியும் செய்துகொள்ளவேண்டும். இதனால் மக்கட்குள் இன்பம் பெருகி இணக்கமுண்டாகும்.

இவ்வுலகில் மக்கட்கு எதிர்பாராத இக்கட்டுக்கள் வரலாம்; நோய் நொடிகளால் மக்கள் பலநாட்கள் பாயும் படுக்கையுமாக விருக்கலாம்; செய்முயற்சிகளெல்லாங் கைவிட்டுப் பாழ்பட்டுப் போய்விடலாம்; வறுமை வெறுமைகளால் துன்புற்றிருக்கலாம். அப்போது உடனுள்ள மக்கள் அவர்கட்கு ஆறுதல் தேறுதல் சொல்லித் தங்களாலான உதவியுஞ்செய்து துன்புறுவோரை இன்புறச்செய்ய வேண்டும்.

மக்கள் வாழ்க்கையில் பற்பல நன்மை தீமைகள் கலந்திருக்கின்றன. சிலர் உடல்வலிமையும் மனவலிமையுங் கொண்டுள்ளனர். சிலர் இரண்டும் அற்றிருக்கின்றனர். சிலர் சில தவறுகளுக் குட்படுகின்றனர். சிலர் செய்யுந் தவறுகள் பலவாகும். சில தாய்தந்தையர் தம் மக்கட்குக் கல்விப் பயிற்சி கொடுத்துப் பொருளும் வைக்கின்றனர்; சில மக்கட்கு இவ்விரண்டில் ஒன்றுகூட இல்லை. இதுபோலவே பல்வேறுநாட்டு மக்களின் நிலைமைகளும பற்பல வேறுபாடுடையவைகளாக இருக்கின்றன. மேலும், சிலர் நாகரிகமுற்றும் சிலர் அஃதற்றும் இருக்கக் காண்கின்றோம். தனி மக்களாகட்டும், ஒரு நாட்டுச் சமூகமக்கள் ஆகட்டும் ஒருவருக்கொருவர் அக்கறை யெடுத்துக்கொண்டு, வலிமை பெற்றோர் அஃதற்றோருக்கும், நன்னடக்கையுள்ளோர் அஃது இல்லோருக்கும், பொருள்பெற

றோர் அஃது பெறுதோர்க்கும், நாகரிகர் நாகரிகம் இல்லார்க்கும் அவரவர்க்கேற்ற உதவிசெய்து, அவரவர் நிலைமைகளை உயர்த்த முயலவேண்டும்.

பிறர்க்கு உதவிசெய்யும் உணர்ச்சி மக்கட்கு இயற்கையிலேயே உண்டு. ஒருவன் தன்னைத்தான் விரும்புவதுபோலவே, அயலாருக்கும் அன்புகாட்டி உதவிசெய்தல் வேண்டுமென்று பேரறிவாளர் கூறியிருக்கின்றனர்.

உதவிசெய்வதிலும் பகுத்தறிவு வேண்டும். ஒருவனைச் சோம்பேறியாக்கவும், தீவினைவழிச் செல்லவுஞ் செய்யும் உதவியைச் செய்வதைவிடச் செய்யாமலிருப்பதுவே மேலாகும். பிறர் சீர்படச்செய்வது உதவியே. உதவி பெற்றவன் அவனைக்கொண்டு தன்னைத்தானே காப்பாற்றிக்கொள்ள வல்லவனாகப் பெறின் அவ்வுதவியே சிறந்த பயன்பெற்ற தொன்றாகும்.

கடன்பட்டு உதவிசெய்வது தவறு; கொடுக்க வேண்டிய கடனைக் கொடாமல் அத்தொகையினால் உதவி செய்வது அதனினுந் தவறு; அது கொடுப்பதன்று. கொள்ளையடிப்பதேயாகும்.

## 1. வரதர் என்னும் வள்ளல்

இங்கிலாந்தில் வரதர் என்னும் வள்ளலொருவர் வாழ்ந்துவந்தார். மக்கள் படுந் துன்பங்களைத் தீர்க்க அவர் பட்டபாடு அளவற்றது. அவர் இலிஸ்பன் நகர் நோக்கிக் கப்பற் பயணஞ் செய்தபோது, பிரான்சியர் அவரையும் அவரோடிருந்தவர்களையும் பிடித்துக்கொண்டுபோய் ஓர் இருட்டுச் சிறைச்சாலையிற் போட்டுவிட்டனர். அங்கு அவர்கள் பாறுங்கற் படுக்கையிற் பட்டினி கிடந்து படாதபாடு பட்டனர். அங்கு அவர் தாம் பட்ட துன்பத்துக்கு வருந்தாமல் உடனிருந்தார் படும் துன்பத்தைக் கண்டு பொறாராகி உள்ளம் நொந்து உருகினார்; இங்கு அவர் இரக்கமயமே யாய்விட்டார். இவர் சிறைநீங்கித் தந்நாடு சென்றதும், அங்கொரு பெருங்கிளர்ச்சியுண்டாக்கிப் பிரான்சியர் சிறையிலுள்ளாரை இரக்கத்தோடும் இணக்கத்தோடும் பாதுகாக்கவேண்டுமென்று தந்நாட்டரசியலார் மூலம் ஒரு முறைப்பாடு அனுப்பிவைத்துப் பிரான்சிய அரசியலாரை அங்ஙனமே செய்விக்கச் செய்தனர்.

இங்கிலாந்தில் பெட்போர்டு என்னும் நகருக்கருகில் ஒரு பேரூரில் இவருக்கு நல்ல நிலச்செல்வமும் பொருட்செல்வமுமுண்டு. சுற்றுப்புறங்களிலுள்ள மக்கள் எல்லோரும் இவர்தம் உதவிபெற்று உளமகிழ்ந்து வாழ்ந்து வந்தனர். இவர்தம் வயல்களில் ஆயிரக்கணக்கான உழைப்பாளிகள் வேலைசெய்து நல்லூதியம் பெற்றுவந்தனர். வரதர் அவர்களெல்லோரையும் தாயன்புகாட்டித் தாங்கிவந்தவர். அங்கே அவர் ஏழைப்பிள்ளைகள் படிக்க இலவசக் கல்விச்சாலையொன்று ஏற்படுத்தி நடத்திவந்தார். தமது வருமானத்தில் முக்காலே மூன்றுவீசத்தையும் ஈகையறத்துக்கென்றே ஈடுபடுத்திவந்தார். அவர்தம் உணவோ மிக எளியநிலையில் அமைந்தது; அஃது ஊழியர் கொள்வதற்குமேல் சிறிதும் உயர்ந்ததன்று.

பின்னர் அவர் மனப்போக்குச் சிறைச்சாலைச் சீர்திருத்தத்தின் மேற் றிரும்பியது. ஏனெனில், தந்நாடாகிய இங்கிலாந்திலேயே சிறைச்சாலைகளெல்லாம் கொலைக்குகையாகக்கேடுகெட்டிருந்தன. உடல்நல மென்பதொழிந்து தீங்குகள் நிறைந்துகிடந்தன. அவர் பெருமுயற்சிசெய்து தம்மூர்ப் பக்கமிருந்த சிறைச்சாலைகளையெல்லாம் ஒருவாறுகச் சீர்ப்படுத்தினர். பிறகு பிரிட்டிஷ் தீவுகளிலுள்ள சிறைச்சாலைகளுக்கெல்லாஞ்சென்று, அவைகளின் துன்பநிலைமைகளையெல்லாம் நன்குதெரிந்துகொண்டு, அவைகளை அரசியலாருக்கெடுத்துக்காட்டிக் கைதிகளின் உடல்நலம் பேணுதற்கென்று ஒரு சட்டத்தையே பாராளுமன்றமொப்பப் பிறப்பித்தார். இவ்வாறு தந்நாட்டுச் சிறைச்சாலைகளின் நலங்கண்டு மனநிறைவடைந்தபின் அயல்நாடுகளுக்குச் சென்று ஆங்குள்ள சிறைச்சாலைகளின் நிலைமைகளை ஆராய்ந்து ஆவனசெய்வதற்கெண்ணி அயல்நாடுகளுக்குப் புறப்பட்டார்.

ஐரோப்பாவிலுள்ள ஒவ்வொரு நாட்டின் சிறைச்சாலைகளையெல்லாம் பார்வையிட்டு, அவர் அவ்வச்சாலைகளின் நிலைமைகளையெல்லாம் அறிந்து, அவைகளின் சீர்திருத்தங்களுக்காக அந்தந்த அரசியலாரிடம் வாதாடி வருந்திக் கேட்டுக் கொண்டார். அவர் எங்கே போனாலும் சிக்கன உணவுடைகளையே கொண்டு, சிறைச்சாலை வாழ்க்கையிலுள்ளார்க்கு உதவியாக மிக்க தொகை செலவு செய்துகொண்டுவந்தார். தாம் சென்றவிடங்களிலெல்லாம் சிறைச்சாலைகளில் தாம் கண்ட குற்றங்குறைகளை யெல்லாம் வெளிப்படுத்தி அவைகளுக்கேற்பச் செய்யவேண்டியவைகளை இன்னவை யென்றுந் தெரிவித்துவந்தார். இப்படிச் செய்ததனால் சிறையில் வாழ்வார்க்குப் பலப்பல நன்மைகளேற்பட்டன. இவ்வாறு அவர் சிறைச்சாலைச் சீர்திருத்தத்துக்காகவென்று நாற்பத்தீராயிரம் மைல் தம் பணச்செலவோடு சுற்றிவந்தார்.

மத்தியதரைக் கடலையடுத்த நாடுகளில் அக்காலத்தில் நோய் மிகுதியால் மக்கள் மிக வருந்தியிருந்தனர். ஆங்காங்கே வருவார் போவார்களைச் சிலநாட்கள் தங்கவைத்துத் தேர்வுசெய் தனுப்பும் தொற்றுநோய் மருத்துவச்சாலைகள் பலவுண்டு. அச்சாலைகளும் நன்னிலைமையில் வைக்கப்படாமையால் நோயினால் மாளும்மக்கள் எண்ணிக்கையைவிட அங்கு மாண்டுபோவார்களுடைய எண்ணிக் கையே மிகுதியாயிற்று. நம் வரதர் அச்சாலைகளைப் போய்ப் பார்த்துவர உடன் வேலையாள் ஒருவனுமில்லாமல் ஒன்றியாகவே புறப்பட்டார்; ஏனெனில் வேறொருவரை நோய்வாய்ப்படச்செய்ய அவர் மனம் ஒப்பவில்லை.

வரதர் மத்தியதரைக் கடற்கரையோர நாடுகளிலுள்ள பற்பல நாடுகளுக்குச்சென்று ஆங்காங்குள்ள தொற்றுநோய் மருத்துவச் சாலைகளைப்பார்வையிட்டார். வெனிஸ்நகரத் தொற்றுநோய்மருத் துவச் சாலையில் தம்முயிரைத் துரும்புபோல் நினைத்து நாற்பது நாட்கள் தங்கியிருந்தார். இவருடைய தன்மதிப்பையுந் தயாள குணத்தையுங்கண்டு ஜெர்மானிய மன்னன் இவரைப்போல் ஓர் உரு வச்சிலை செய்து நாட்டிவைக்க வேண்டுமென்று முயல, அவ்வாறு செய்வது தமது மனப்பான்மைக்கு ஒவ்வாததென்று அரசர் பெருமானை வேண்டிக்கொண்டு அதனைத்தடுத்துவிட்டார். அடக்க முடைமையை அணியாகக்கொண்ட வரதர், புகழை விரும்பு வாரோ!

இவ்விடம்விட்டு உருஷியாவுக்குப் போனதே அவர்தம் கடை சிப் பயணமாகும். ஆங்குச் சேர்சன் நகரில் ஒரு பெருமாட்டிக்கு நச்சுக்காய்ச்சல் கண்டிருந்தது. அவருக்கு வேண்டியதைச் செய்ய வரதர் அவரிடம் சென்று வந்தார். அதுவே காய்ச்சலாய் இரண் டொரு நாட்களில் வரதர் விண்ணுலகடைந்தார். உருஷியமன்னர் அலெக்சாண்டர் என்பவர் வரதர் நினைவுக் குறிக்கென்று ஓர் அழகிற் சிறந்த கல்லறை கட்டுவித்தார்.

வரதர் தம் பொருளையும் உடலையும் உளநோய்ப்பட்டோருக் கும் உடல்நோய்ப்பட்டோருக்கும் பயன்படுத்திவந்தார். ஆதலால், அவர்தம் ஈவிரக்கமுடைமைக்கு ஈடு காண்பதரிது! அவர் தமக் கென வாழாது பிறர்க்கென வாழ்ந்துவந்தார். அவரைத் தற்காலத் தனிவள்ளல் என்று சொல்வது மிகையாகாது.

## 2. சீராளர் சிட்னி

சிட்னி என்பவர் ஒரு சிறந்த போர்வீரர். அவர் போர் செய்தபோது காலில் அடிபட்டுப் பாசறையிலிருந்தார். அப்போது ஒருநாள் அவர் நீர் வேட்கைகொண்டு தண்ணீர் கேட்டார். தண் ணீர் கொண்டுவந்தனர்; அவர் அதனை ஆவலோடு குடிக்கத்

தொடங்கும்போது, அண்மையிலிருந்த நோயாளி ஒருவன் நீர் வேட்கையால் வருந்தப் பார்த்து, வாயில் வைக்கப் போன நீரே னத்தை உடனே அவன் கையிற் கொடுத்துவிட்டு, "தம்பி! நீ எனக்குமேல் நீர் வேட்கை கொண்டிருக்கின்றாய்," என்றனராம்!

## 3. நீதித்தலைவர் திறமைந்தர்

எடின்பரோ நகரில் திறமைந்தர் என்னும் ஒரு நீதித்தலைவர் இருந்தார். அவர் ஒருநாள் நகர்வெளியில் ஒரு சாலைவழியே போய்க்கொண்டிருந்தார். அங்கு ஒரு பிணத்தைப் பாடையின் மேல் வைத்து, உடன்வருவார் ஒருவருமின்றி, நான்குபேர்களே தூக்கிக்கொண்டு போவதைக் கண்டார். அஃது ஓர் ஏழைப்பிண மெனக் கருதினார். அதனால், அதனைப் பின்தொடர்ந்து போனார். வழியில் வந்தவர்களெல்லோரும் இவரைக் கண்டஞ்சி இவருடன் சேர்ந்து கொண்டனர். கூட்டம் பெருகிப்போயிற்று. எல்லோரு மாக இடுகாடு செல்ல, அப்பிணத்தைத் தாமும் உடனேந்திச் சவக் குழியில் விட்டனர். பிறகு இறந்தவரின் தாயும் மனைவியும் உயி ரோடிருப்பதாகக் கேட்டறிந்து உடன்வந்த குலமக்களை நோக்கி, "பெருமக்களே! நாம் எல்லோரும் வியக்கத்தக்க வழியில் ஒன்று சேர்ந்தோம்; உயிர்நீத்தவருடைய குடும்பத்துக்கென்று நாமெல் லோருஞ் சேர்ந்து ஒரு நன்கொடை யளிப்பது நல்வினை யென் றெண்ணுகின்றேன்," என, உடனே யாவரும் தங்கள் தங்களால் கூடிய தொகைக்குக் கையொப்பஞ் செய்தனர். திறமைந்தரும் ஒரு பெருந்தொகை ஈந்து, மொத்தப் பணத்தையும் நீத்தார் மனைவி யிடம் கொடுத்துதவினர்.

## 4. பரிவுற்ற படைத்தலைவர்

பல்லாண்டுகட்கு முன் நமது தமிழ் நாட்டில் படைத் தலைவர் ஒருவர்இருந்தார். அவர் தம்போர்வீரன் ஒருவனை ஓர் அலுவலாகத் தமது குதிரையிலேறிப் பக்கத்திலுள்ள ஊருக்குச் சென்று வரக் கட்டளையிட் டனுப்பினார். அவன் அலுவலை முடித்துக் கொண்டு திரும்பிவந்து தலைவரைநோக்கி, "ஐயா! இனி யான் அலுவலாகச் செல்லும்போது இக்குதிரையோடு ஒரு பைநிறையப் பணமுங் கொடுத்தனுப்பவேண்டும்," என்றான். தலைவர் காரணங் கேட்க அவன், 'எந்தப்பிச்சைக்காரன் எதிர்வந்து கையேந்தினாலும் உமது குதிரை உடனே நின்றுகொண்டு பிச்சைக்காரனுக்கு ஏதாவது கொடுக்கும்வரையில் நின்றவிடம்விட்டு நகரமாட்டேனென்கிறது; என் கையிற் பணமேது! பிச்சைக்காரனுக்கு ஏதாவதொன்று கொடுக்கிறாப்போல் அங்கங்கே பாசாங்குசெய்துகொண்டே வந்து விட்டேன்," என்றான். பிள்ளைகளே! இவ்வரலாற்றினால் என்ன தெரிந்துகொள்கின்றீர்கள்? சொல்லுங்கள் பார்ப்போம்!

## 5. மனமாண்புசேர் மன்னன்

அன்றுடம் ஒரு நன்மையாவது செய்யாமல் படுக்கைக்குப் போகாத ஓர் அரசன் ஒருநாள் யாதொரு நன்மையும் எவருக்குஞ் செய்ய நேரிடாமல் அன்றிரவு, "இந்நாள் பாழ்பட்டுப் போய்விட்டதே!" என்று சொல்லிப் பட்டினியாகப் படுக்கையில் வருந்திக் கிடந்தானும்!

க. ஒருவருக்கொருவர் அன்புகாட்டி வாழுங்கள்.

உ. வெந்துயர் அடைந்தோர்க்கு வேண்டியதைச் செய்யுங்கள்.

ந. வறுமையாளர்க்கு வெறுங்கை காட்டாதீர்கள்; நிறைந்த கை காட்டுங்கள்.

—விவில்லியம்.

ச. பெற்றோரைப் பாதுகாக்குக.

ரு. இடுக்க ணுற்றோர்க்கு இடுக்கண் தீர்ப்பவன் இடுக்கணிலிருந்து தீர்க்கப்படுவான்.

—நீதிமொழி.

சு. பெருநிதி படைத்தோர் பெருமனங் கொண்டிருக்க வேண்டும்.

—நீதிமொழி.

எ. உடனுள்ளார் உனக்கு அன்பு காட்டாவிட்டால், அஃது உன் குற்றமே. நீ அவர்கட்கு அன்பும் நட்பும் காட்டினுல், அவர்களும் உனக்கு அன்பும் நட்புங் காட்டாமலிருக்க முடியாது. உன்னிடம் அன்புகாட்டுந் தன்மையும், தன்மறுப்புத் தன்மையுமிருந்தால், உனக்கு நண்பருக்குக் குறைவு இராது. நட்புத் தருவது அழகும் அன்று; செல்வமுமன்று; அதனைத் தருவது அன்புந் தயையுமே.

—நாட்கடமை.

அ. பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புக.

—திருவள்ளுவர்.

## கரு. சினமாறுதல்

மனமொவ்வாத தொன்றை ஒருவன் செய்யக் கண்டாலும், பேசக் கேட்டாலும் மனக் கடுப்பும், ஒத்ததைச் செய்தால் மன உவப்பும் உண்டாவது மக்கள் இயற்கை. மனக்கடுப்பு சினத்தையும், மன முவப்பு தயையையும் உண்டாக்கும். சினத்திலும் ஒருறுதியுண்டு; தவற்றையும் தீங்கையும் அஃது எதிர்க்கின்றது. நமது மதிப்புக்குரிய ஒருவரை வேறொருவர் வருத்தினாலும், அல்லது அவருக்குத் தீங்கிழைத்தாலும் நமக்குச் சினம் மூள்கின்றது. இத் தன்மை யில்லாத ஒருவரைப்பற்றி நாம் வருந்தவேண்டியதே!

தக்க செவ்விகளிற் சினங்கொள்வது ஒவ்வுமே யாயினும், அது பகுத்தறிவுக்குப் பொருந்தியதாகவு மிருக்க வேண்டும். அது முன்பின் பாராமல் பழிக்குப் பழிவாங்குதலைத் தூண்டும் செயலுக்கு இடந்தரல் கூடாது. அத்தகைய சினத்தை நாம் மனத்தைவிட்டு நீக்கிவிடவேண்டும். சினமூட்டுபவனுடைய சொற் செயல்களின் குற்றத்தை அவனுக்கு அமைதியும் உறுதியுமான சொற்களால் காரணங்காட்டி எடுத்துச் சொல்லி, அவன் இனியும் அக் குற்றம் செய்யாதவாறு திருத்துவதே உண்மைச் சினமாகும்.

நம் மனமொவ்வாத செயல்கள் எண்ணிக்கையற்றவை உலகத்தில் நடந்துகொண்டே யிருக்கின்றன. ஒவ்வொன்றுக்கும் நாம் சினமுஞ் சீற்றமுங் கொண்டிருந்தால், நமது வாழ்க்கையே ஒன்றுக்கும் உதவாமற் போய்விடும். நம்மைச் சார்ந்துள்ளோர்க்கும் அது நம்மீது வெறுப்பை யுண்டாக்கும். பிறர் தம் வெடுவெடுப்புச் சொற்களையும், வெறுக்கத் தக்க செயல்களையும் அமைதியோடு பொறுத்துக்கொள்ளுந் தன்மையுடைமையே சிறந்த குணமாகும்.

பிறர் செய்யுங் குற்றத்தையோ அல்லது தீங்கினையோ பராமுகஞ்செய்து மன்னிப்பதே அமைதியின் அறிகுறியாகும். தவறுத லென்பது மக்கட்கு இயல்பே.

அதைப்போலவே மன்னிப்பென்பது மக்கட்குரிய குண மாகும். பழிக்குப் பழிவாங்குதல் குற்றத்தை மிகுக்கும்; மன்னிப்போ அதனைக் குறைக்கும்; மன்னிப்பு பகைமையை நட்பாக்கும். இஃதே உலகில் நற்கோரிக்கையையும் நல்ல மதியையும் உண்டாக்கும்.

## 1. சாக்கரத்தீசர்

கிரேக்க தேயத்துச் சாக்கரத்தீசர் என்பவர் பேரறிவாளர்; ஆயினும் பெருவெகுளி கொண்டவர். அவர் அதனை அடக்கிக் கொள்ளும் வல்லமையுமுள்ளவர். அவர் தாம் சினங்கொள்ளும் காலத்தில் தமக்கு அறிவிக்கும்படி தம் நண்பர்களிடம் சொல்லி வைத்திருந்தார். அவர்கள் அவ்வாறு அவருக்கு அறிவிக்கும் போதெல்லாம் அவர் உடனே அடைந்த சினத்தை அடக்கிக் கொள்வார்.

ஒருநாள் அவரை ஒருவன் தலைமேல் குட்டினான்; அப்போது அவர் புன்சிரிப்போடு, "நான் தலைமூடி போட்டுக்கொள்வதற்கு மறந்து வந்துவிட்டேனே!" என்று சொல்லிக்கொண்டே போய் விட்டாராம்.

இன்னொருநாள் சாக்கரத்தீசர் வழியே போய்க்கொண்டிருந் தார். எதிரில் ஒரு பெரிய மனிதர் வந்தார். அவரைக் கையெடுத் துக் கும்பிடுபோட்டார். வந்தவர் அதனைச் சட்டைபண்ணாமலே போய்விட்டார். அதனைக் கண்ட அவருடைய நண்பர்கள் சினங் கொண்டு அதனை அவருக்குத் தெரிவித்தனர். அவர், "இச்சிறு செய்திக்கே உங்கட்கு இவ்வளவு சினம் பெருகினால், ஒருவன் உங்களைத் திட்டியடித்தால் என்செய்வீர்களோ!" என்றாராம்.

சாக்கரத்தீசர் மனைவி அந்திப்பாவை என்பவள் ஒரு பெருஞ் சண்டைக்காரி; கடுமையாய்ப் பேசுவாள்; கணவனுருக்கும் சிற்சில வேளைகளில் தீங்குகள் செய்வாள். ஒருநாள் இருவரும் தெரு வழியே போய்க்கொண்டிருக்கும்போது, யாதோ பேச்சின்பேரில் அவள் சினங்கொண்டு கணவனார் சட்டையைக் கிழித்துப்போட் டாள். அதனைக் கண்ட அவர் தம் நண்பர்களிற் சிலர் பெருஞ் சினங்கொண்டு மிக வருந்தி அவரைப் பார்த்து, "ஐயா! இஃதென்ன வேலை இவ்வம்மணி செய்தது? இவரை நன்றாக அடித்துப் புடைக்கவேண்டும்!" என்றார்கள். அதற்கு அவர், "நானும் என் மனைவியும் சொற்போர் செய்துகொண்டிருந்தால் நாங்கள் ஒருவரை யொருவர் அடித்துக்கொள்ளும்படி சினமூட்டி விடுவீர்போலும்!" என்றாராம்.

ஒருநாள் சாக்கரத்தீசரும் அந்திப்பாவையும் மாளிகை மேன் மாடியில் பேசிக்கொண்டிருக்கும்போதே சொற்போர் வந்துவிட்டது. அப்போது அந்திப்பாவை கடுஞ்சினங்கொண்டு கணவனுரைக் கண்டபடி திட்ட, அவர் ஒன்றும் பேசாமல் இறங்கிவந்து தெருவாயிற்படியண்டை உட்கார்ந்துகொண்டு மௌனமாக இருந்தார். அவர்தம் மௌனமே மனேவியின் சினத்தை மிகுக்க, அவள் ஒரு குண்டுசட்டி நிறைய அழுக்கு நீரை மேலிருந்தே அவர்தம் தலைமேல் கொட்டினுள். அப்போது அவர், "மட்டற்ற இடிக்கு மழை பெய்யாமல் விடுமா?" என்று சிரித்தாராம்.

## 2. அபரதர்

ஜெனீவா நகரில் அபரதர் என்பார் ஒருவர் இருந்தார்; அவர் வெகுளி யென்பதையே யறியாத பெரிய அறிவாளி. அவர்தம் வேலைக்காரிகூட அவர் வெகுளிகொண்டதைக் கண்டதே யில்லை. அவரைத் தேர்வு செய்யப் பேரவாக்கொண்ட அவர்தம் நண்பர், அந்த வேலைக்காரிக்கு ஒரு பெருந்தொகை கொடுத்து அவரை எப்படியாவது வெகுளிகொள்ளச்செய்யத் தூண்டிவிட்டனர். படுக்கை துப்புரவாகவும் அழகாகவும் இருக்கவேண்டும் என்பது அவர்கொள்கை.அவ்வேலைக்காரி ஒருநாள் அப்படுக்கையைத்தட்டி அவர் மனப்பான்மைப்படி செய்யவில்லை. அபரதர் அவ்விரவு பேசாமல் இருந்துவிட்டு, மறுநாள் அதனைப்பற்றி அவ்வேலைக்காரியைக் கேட்டார். அதற்கு அவள் தான் மறந்துபோய்விட்டதாக மறுமொழி கூறினுள். மறுநாளும் அவள் படுக்கையைத் தட்டிப் போடாமல் இருந்துவிட்டாள். அடுத்தநாட் காலை அதனைப்பற்றி அபரதர்கேட்டபோது,அன்றும் ஏதோ சாக்குப்போக்கொன்றைச் சொல்லிவிட்டாள். அன்றும் அவர் ஒன்றுஞ் சொல்லவில்லை. மூன்ருநாளும் அவள் அப்படியே செய்ய, அதற்கு மறுநாள் அவர் கேட்டதற்கு அவள் மிக அமைதியோடு முன்போலவே ஏதோ வொன்றைச் சொன்னுள். அதனைக் கேட்ட அவர், "அம்மா! உன் மனத்தில் ஏதோ ஓரெண்ணமிருக்கின்றது; அதனுல்தான் படுக்கையின் கிட்டப்போகிறதென்ருல் உனக்கு மனம் வரவில்லை. ஆனுலுங் குற்றமில்லை; அழுக்குப் படுக்கையிற் படுப்பது எனக்குப் பழக்கமாய்விட்டது," என்ருர். அதனைக் கேட்ட வேலைக்காரி மனமிளகிப்போய் நிலந்தோய அவர்தம் கால்களில் விழுந்து வணங்கி அவரிடம் உள்ளதைச் சொல்லி, மன்னிப்புக் கேட்டுக் கொண்டு மளமளவென்று கண்ணீர் விட்டு அழுது நின்ருள்.

## 3. சீனநாட்டு மன்னர்

சீனப் பெருநாட்டின் மன்னர் ஒருவர் ஒருதடவை தமது நாட்டைச் சுற்றிப் பார்த்துக்கொண்டு வந்தார். அப்போது ஒரு நகரில்

ஒரு செல்வர் மன்னனுக்குத் தமது மாளிகையில் விருந்து வைத்தார். அக் குடும்பத்தில் அப்பெருமகனார், தம் மனைவிமக்கள், அண்ணன் தம்பியர், அவர்தம் மனைவிமக்கள், மருமக்கள்மார்கள் முதலாகிய எல்லோருடனும் ஒன்றுபட்டு வாழ்ந்துவந்ததைக் கண்டார். பெரு வியப்புக்கொண்டு, அக் குலமகனாரை நோக்கி, "இத்தனை மக்களுள்ளும் ஒற்றுமையும் அமைதியும் எப்படி யுண்டாயிருக்கின்றது," எனக் கேட்டார். அவர் உடனே ஏடெழுத்தாணிகொண்டு,

பொறுமை, பொறுமை, பொறுமை

என்று முக்கால் எழுதிக்காட்டினார். மன்னர் எக்களிப்புடன் விடை பெற்றேகினர்.

## 4. உலுவலனும் நாயும்

உவேல்சு நாட்டில் உலுவலன் என்னும் ஒரு சேனைத்தலைவன் இருந்தான். அவன் நாயொன்று வளர்த்துவந்தான். அதற்குச் சலரதன் என்று பெயரிட்டு அழைத்து வருவது வழக்கம். அவன் ஒருநாள் அந்நாயுடன் காட்டுக்கு வேட்டையாடப்போனான். காட்டிடத்திற் சலரதன் என்னும் தன் நாய் காணமற்போகவே பல தடவை குழலூதிக் கூப்பிட்டான்; சலரதன் வரவேயில்லை. உலுவலன் அன்று காட்டில் அரைமனதாகவே வேட்டையாடித் திரும்பிவிட்டான். உலுவலன் அரண்மனையைக் கிட்டினபோது சலரதன் வாலாட்டி மகிழ்காட்டி அவனுக்கெதிரில் ஓடிவந்தது. சலரதன் உதட்டிலும் பற்களிலும் செந்நீர் ஒழுகக்கண்டு, அவன் திடுக்கிட்டு நின்றான். அஃதோ அவனுடைய கால்களை நக்கி நக்கிப் பெருமகிழ்ச்சியுடன் அவன்மேல் தாவித் தாவி விளையாடியது.

பிறகு சலரதன் உடன்வர, அவன் அரண்மனைக்குச் சென்றான். பார்த்தவிடமெல்லாம் உறை செந்நீர்ப் பொட்டுக்களைக் கண்டு மனக்கலக்கங் கொண்டான். இன்னும் பார்த்துக் கொண்டே உட்செல்லக் குழந்தையின் போர்வை துண்டு துண்டாகக் கிழிச்சல்பட்டுச் செந்நீர்மயமாக இருக்கக்கண்டு,நடுக்கமடைந்து, குழந்தையைப் பேரிட்டுக் கூப்பிட்டுக்கொண்டு அரண்மனையிடம் முழுதும் அல்லாடியும், எங்குஞ் செந்நீர் கண்டானேயொழியச் செல்வச் சேயைக் கண்டானில்லை!

சினவெறிகொண்ட உலுவலன் சலரதனைப் பார்த்து, "கேடுகெட்ட சலரதனே! நீயே என் குழந்தையைக் கொன்று தின்றாய்!" என்று சொல்லிக்கொண்டே தன் வாளை உருவி அதனை விலாப்புறத்தில் ஆழக் குத்திவிட்டான். அப்போது சலரதன், 'ஐயோ அரசே! என்னை வீணே கொலைசெய்தனையே!' என்று சொல்வது

போல் இரக்கங்காட்டுஞ் சாக்குரல் கூவி உயிர்விட்டது. அக்குரல் உலுவலன் மனத்தை அலைக்கழித்தது.

சலரதன் சாக்குரல் கேட்டுக் குழந்தை சரேலென அழுங் குரல் கேட்டது. உலுவலன் இங்குமங்குந் தேடிப்பார்க்க, ஓரிடத் திற் செந்நீர்க்கந்தைக் குப்பையினடியிற் செல்வச் சேயை யாதோர் ஊறுபாடுமின்றி யிருக்கக்கண்டான். அப்போது அவனுக்குண்டான அகமகிழ்ச்சிக்கு அளவுண்டோ! உடனே அவன் அக் குழந்தையை யெடுத்து முத்தமிட்டுக் களித்தான்.

அடுத்தாற்போல் அக்குப்பையின் மற்றொரு பக்கத்தடியில் அச்சங்கொடுக்குமொரு ஓநாய் கடிபட்டுச் செந்நீர்க்காடாய்ச் செத் துக்கிடப்பதையுங் கண்டான். கண்டவன் யாவும் விண்டான். தன்னுடைய வீரச் சலரதன், தன் சேயைக் காப்பாற்ற, அதனைக் கொன்று தின்னவந்த ஓநாயைத் தான் கடித்துக்கொன்றது எனத் தெரிந்து கொண்டான், தேர்ந்தறியாத உலுவலன். என்ன அறிந்தும் என்ன பயன்! போன சலரதன் உயிர் வந்து பொருந் துமோ? "அறிவுற்ற சலரதனே! என் அறிவற்ற செயலுக் கென் செய்வேன்! பதைத்த மனம் பாழ்பட் டொழிக! ஆராத சிந்தை சீர்கெட் டழிக!" என்று பெருங்குரல் கொண்டு ஓ! வென்றலறி மனம் உருகி மண்ணில் வீழ்ந்தழுதான்.

பிறகு உலுவலன் சலரதன் உடலைச் சவக்குழியிற் புதைத்து, அதன்மேலோ ரழகிய கல்லறை யெழுப்பி, அதன் மேல் சலரதன் வீரச்செயலை மெச்சிப் பொறித்துவைத்தான்.

## 5. தீமைக்கு நன்மை

நாகரிகமில்லாத முன்னாளில் இத்தாலி நாட்டின் ஒரூரில் உடலுரங்கொண்டவ னொருவனிருந்தான். அவன் தன் பகை யாளி யொருவனுடன் கடுஞ்சண்டையிட்டு அவன் கண்களிரண் டையுங் குத்திவிட்டான். அதனால் அவன் குருடனாகவே போய் விட்டான். அவன் பிழைக்க வேறு வழிகாணாமல் ஒரு துறவோர் மடஞ் சேர்ந்து தன்னாலான அறச்செயல்கள் செய்துகொண்டிருந் தான். அவனைக் குருடாக்கிய பகைவன் சிலநாட்களில் தீரா நோயாளியாய் அந்த மடத்துக்கே வந்துசேர்ந்துவிட நேர்ந்தது. குருடன் மற்றவர்களுக்குச் செய்வதுபோலவே இந்நோயாளிக்கும் இரவும் பகலும் வேண்டிய பணிவிடைகள் செய்துவந்தான். இரண் டொரு நாட்களில் நோயாளி தனக்குப் பணிவிடை செய்பவன் தான் குருடாக்கிய பகைவனேயென் றறிந்துகொண்டு, தன்னை அவன் என்செய்துவிடுவானோ என்கிற அச்சத்துடனே அங்கி ருந்து வந்தான். குருடன் அவன் குரலால், இன்னானென் றறிந்து

கொண்டு, நோயாளி தனக்குச்செய்த ஊறுபாட்டை மனத்திற் கொள்ளாமலே தன் கடமையைச் செய்துவந்தான். குருடனின் இந் நற்றன்மை கண்ட நோயாளி கழிவிரக்கங்கொண்டு அவனுடன் நட்பாக இருந்துவந்தான். மடத்தாரின் மருத்துவத்தினுலும், கண்கெட்டான் கருத்துடன் செய்த கருணைப் பணிவிடையினுலும் நோயாளி முற்றுங் குணப்பட்டு, மடத்தாருக்கும் மாற்ருனுக்கும் மனமார்ந்த நன்றிகூறித் தன்மனை போய்ச் சேர்ந்தான்.

மிகுதியான் மிக்கவை செய்தார் நாணத் தகுதியால் நன்னயஞ் செய்வதற்கு இதனைக் காட்டிலும் எடுத்துக்காட்டு வேறென்று வேண்டுமோ !

## 6. அடிமைகோள்வோரை ஆட்கோண்டது

அடிமை வாணிபம் நடந்துவந்த காலத்தில் ஓர் ஆங்கிலக் கப்பல் பல மக்களுடன் மத்தியதரைக்கடல் வழியாக இங்கிலாந்துக்குப் போய்க்கொண்டிருந்தது. வழியில் பத்துத் துருக்கிய அடிமை வாணிபர் அக்கப்பலில் வந்து புகுந்துகொண்டனர். அவர்தம் நோக்கம் என்னவெனில், அக் கப்பலைக் கொண்டுபோய் ஆப்பிரிக்காக் கரைசேர்த்து ஆங்கிலேயரையெல்லாம் அடிமைகளாக விற்றுவிட வேண்டுமென்பதே.

அன்றிரவு துருக்கியர்கள் தூங்கிக்கொண்டிருக்கும்போது, அவர்தம் போர்க்கருவிகளை யெல்லாம் ஒன்றுவிடாமல் எடுத்து மறைத்து வைத்துவிட்டான் ஆங்கிலக் கப்பலோட்டி. அதனைக் கண்டுகொண்டார்கள் துருக்கியர்கள். ஆங்கிலக் கூட்டம் அக் கப்பலில் பெரிதாக இருந்தபடியால், தம்மால் ஒன்றுஞ் செய்ய முடியாமல் துருக்கியர் அக்கப்பலிலேயே உடனிருந்துகொண்டிருந்தனர். கப்பல் ஸ்பெயின் நாட்டுக் கடற்கரை சேர்ந்தபோது அந்நாட்டார் துருக்கியர் எல்லோரையும் தங்களிடம் ஒப்பித்து விடக் கேட்க, ஆங்கிலேயர் அதனை மறுத்துவிட்டனர்.

பிறகு அக்கப்பல் ஆப்பிரிக்கா கரைசேர்ந்து, பார்பரி மாகாணத்தில் அத்துருக்கியர் எல்லோரையும் இறக்கிவிட்டு, இங்கிலாந்து போய்ச் சேர்ந்தது. இந்நற்செய்தி ஆங்கில நாடெல்லாம் பரவிவிட்டது. அரசன் அக்கப்பற் றலைவனை யழைத்து, "அவர்களை என் இங்குக் கொண்டுவந்து சேர்க்கக்கூடாது?" எனக் கேட்டான். அதற்குத் தலைவன் "அவர்கள் ஊரிலேயே அவர்களை விட்டுவிடுவது நலமென்று நினைத்தேன்," என்ருன்.

## 7. உபரதன்

இத்தாலி நாட்டில் ஜினேவா மாகாணத்தில் ஒரு காலத்தில் பெருமக்கட்கட்சி பொதுமக்கட்கட்சி யென இரண்டு கட்சிகள்

இருந்தன. ஒருகால் பொதுமக்கட் கட்சி தோற்றுப்போய், பெரு மக்கட் கட்சி அரசியல் நடத்த நேர்ந்தது. அப்போது பொது மக்களின் தலைவனாகிய உபரதன் என்னும் வாணிபச் செல்வன் அந்நாட்டிலிருந்து துரத்தப்பட வேண்டுமென்று தீர்மானிக்கப் பட்டது. அத் தீர்மானத்தை நிறைவேற்றியவன் அதாரணன் என்னும் ஒறுப்பு நீதிபன்.

உபரதன் கிரேக்கநாட்டைச் சார்ந்த ஒரு தீவினில் சேர்ந்து, அங்குச் சிறுகச்சிறுக வாணிபஞ் செய்து ஒரு பெரிய வணிகனாய் விட்டான் உபரதன் ஒரு தடவை வாணிப வேலையாய்த் தியூனஸ் நகர் சென்றிருந்தான். அந்நகர் மகம்மதியருடையது. அங்கு ஓரிடத்தில் அடிமைகள் வேலை செய்துகொண்டிருந்தனர். அவர்களில் ஓர் இத்தாலியப் பையன் விலங்குக் கட்டுடன் இளைப்புங் களைப்புமாகக் குற்றேவல் செய்துகொண்டிருந்தான். உபரதன் அவன் வரலாற்றினைக் கேட்டபோது அவன், தான் ஜினோவாவிலிருந்து அடிமையாகக் கடற்கொள்ளைக்காரராற் பிடித்துக்கொண்டு வரப் பட்டதாகவும், தான் ஒறுப்புத்தலைவன் அதாரணன் பிள்ளை யென்றும் அழுதுகொண்டே சொன்னான்.

உபரதன் அவனுடன் ஒன்றும் பேசாமற்போய் அடிமைகளின் தலைவனைக் கண்டு, அவன் கேட்ட பெருந்தொகையைக் கொடுத்துவிட்டு, அந்தப் பையனைத் தன்னிருப்பிடத்திற்குக் கொண்டுபோய், அவனைக் குளிப்பாட்டி நல்லுணவும் நல்லுடையுங் கொடுத்துப் பாதுகாத்துவந்தான்.

ஒருநாள் இத்தாலிக்கு ஒரு கப்பல் அத்தீவிலிருந்து புறப் பட்டது. உபரதன் அவனுக்குச் செலவுக்கு வேண்டிய காசு கொடுத்து, ஒறுப்புத் தலைவனுக்கொரு கடிதத்துடன் ஜினோவா வுக்கு அனுப்பிவிட்டான்.

பையனின் பெற்றோர் அவனைக் கடலில் மூழ்கிவிட்டதாக எண்ணியிருந்தனர். திடீரென்று தங்கள் பிள்ளை சுகமாக வீடு நுழைந்தபோது அவர்கள் அடைந்த பெருவியப்புக்கு அள வுண்டோ!

பிறகு அப்பையன் போன வரலாற்றையும் புகுந்த வரலாற் றையும் மீண்டுவந்த வரலாற்றையும் விளங்கச் சொல்லிக் கடிதத்தை யுந் தந்தையின் கையிற் கொடுத்தான். அதனடியில் ஊர் துரத் தப்பட்ட உபரதன் எனக் கையொப்பமிட்டிருந்தது. இந்த வெட் கக்கேட்டை நீதித்தலைவன் மனம் தாங்கமுடியவில்லை. அவன் தன் செல்வாக்கினால் உபரதன் திரும்பத் தன் நாடு சேர்ந்தான். அவனிடம் நேர்முகமாக மன்னிப்புக் கேட்டுக்கொண்ட பிறகே அதாரணனுக்கு மனதமர்ந்தது.

## கருணையின் தன்மை

௧. கருணை கட்டுப்படாதது—மழைபோல் மக்கள் மேல் விழுவது.

௨. கொடுப்போன் கொள்வோன் இருவரையும் வாழ்த்துவது.

௩. வல்லோனிடம் வல்லமை பெறுவது.

௪. முடிமன்னர்க்கு முடியாவது; செங்கோலுக்குச் செங்கோலாவது.

௫. அரசர் உள்ளம் அரியணை அதற்கு; படைத்தோனுக்கே பண்பாவது.

௬. மண்ணரசு நீதிக்கு மணத்தைக் கொடுத்து விண்ணரசாக்கி வீறச் செய்வது.

— ஷேக்ஸ்பியர்.

௭. வெகுளியையுஞ் சினத்தையும் விட்டொழி; கடுந் துன்பத்தினுல் எரிச்சல்கொண்டு பிறர்க்குத் தீமை செய்யாதே.

—சங்கீதங்கள்.

௮. தயை காட்டுகிறவர்கள் வாழ்த்தப்பட்டவர்கள்; அவர்கள் தயை பெறுவார்கள். பகைவருக்கு அன்பு காட்டுங்கள், வசைமொழி கூறுவோர்க்கு வாழ்த்துமொழி கூறுங்கள். வெறுப்போருக்கு விருப்பங் காட்டுங்கள். புண்படுத்துவோருக்காகப் போற்றி செய்யுங்கள்; அவ்வாறு செய்தால் நீங்கள் விண்ணுலகத் தந்தைக்குப் பிள்ளைகள் ஆவீர்கள். உம் உடன்பிறந்தார் குற்றத்தை ஏழு தடவையன்று ஏழெழுபது தடவை மன்னிக்கவேண்டும்.

—இயேசுநாதர்.

௯. ஆறுச் சினத்தையும் பழிக்குப் பழிவாங்குதலையும் உன் மனத்தைவிட்டு ஓட்டிவிடு; காலைச் சினம் மாலைக்குள் ஒழியவேண்டும்.

—மேசன்

௧௦. உன் உள்ளத்தில் மன்னிப்பை எழச்செய்த குற்றவாளியை மார்போடணைத்துக் கட்டிக்கொள்.

—இளவேதர்.

௧௧. மன்னிப்புக் கொடாதவன் தான் தாண்டும் பாவத்தைத் தானே உடைத்துத் தள்ளுகின்றான்.

—ஹெர்பர்ட்.

௧௨. ஆறுவது சினம்.

—ஔவையார்.

௧௩. நகையும் உவகையும் கொல்லும் சினம்.

—திருவள்ளுவர்.

---

## ககூ. பணிவுடைமை

சொற் செயல்களில் பிறரிடம் பணிவு காட்டி நடந்து கொள்ளுதல் வேண்டும்; அது நமக்கு மரியாதை கொடுக்கும். நமது எண்ணங்களையும் செவ்வனே நிறைவேற்றப் பண்ணும். இதனை விட்டுப் பிறரிடம் நாம் கடுமையும், செருக்கும், அச்சமூட்டலும் கூடாது. அது நமக்கு அவமானத்தை உண்டாக்குவதுந் தவிர, நம் நோக்கங்களையும் பாழ்படுத்தும். ஏனெனில், எதற்கும் பிறரை வற்புறுத்துதல் நம்மிடம் அவர்களுக்கு எதிர்ப்பை உண்டாக்கும். வற்புறுத்துதல் பிறர் மரியாதைக்குக் குறைவுண்டாக்குவதால், அவர்கள் நாம் சொல்லுவதை மறுத்துவிடுவார்களே தவிர நிறைவேற்றமாட்டார்கள். அவர்கள் நமது பயமுறுத்துதலுக்கு அஞ்சி ஒருவேளை நாம் சொல்லுவதைச் செய்ய முயல்வார்களானாலும், அதனை அரைமனதோடு செய்து அவ்வேலைக்குக் குறைவுண்டாக்கிவிடுவார்கள். இதனை விட்டு நாம் எதினும் பிறரிடம் பணிவு காட்டுவோமானால், அஃது அவர்களுடைய தன்மரியாதைத் தன்மைக்குக் குறைவுண்டாக்காது; அவர்களிடம் எதிர்ப்பையுமுண்டாக்காது; மேலும் நாம் சொல்லுவதை அவர்கள் நல்லெண்ணத்தோடு நிறைவேற்றி நமக்கு மனநிறைவையும் உண்டாக்குவார்கள்.

### 1. யோசேப்பு ஆல்த்தர்

பெருங் குற்றவாளிகளை ஆஸ்திரேலியா நாட்டுக்கனுப்பி, குற்றேவல் செய்ய விட்டுவைப்பது ஆங்கில நாட்டாரின் பழையகால வழக்கமாக இருந்தது. அங்கே அவர்கள் வயிற்றுச் சோற்றுக்கு வேலை செய்யவேண்டும். அங்கு அவர்கள் வேலையில் தவறு செய்தாலும், சோம்பேறித்தனம் காட்டினாலும், அல்லது ஒழுங்குதவறி நடந்துகொண்டாலும் அவர்களுக்கு முதுகின்மேல் சவுக்கடி கொடுப்பதுதவிர, வேறு தண்டனை கிடையாது.

அத்தகைய குற்றவாளிகள் ஆஸ்திரேலியாவில் ஒரு நிலச் செல்வரிடம் வேலை செய்துகொண்டிருந்தார்கள். அவர் ஒரு தடவை யோசேப்பு ஆல்த்தர் என்னும் ஒருவரைக் குற்றவாளிகளுக்குத் தலைவராக ஏற்பாடு செய்துவைத்தார். ஆல்த்தர் பேரறிவாளர்; ஈவிரக்கமுள்ளவர்; அவர் குற்றவாளிகளின் தவறு

களுக்குச் சவுக்கடி கொடுப்பதைவிட்டு, வேறு நல்லவழியில் அவர்களிடம் வேலைவாங்க முயன்றார். அவர் அவ்வலுவலை ஏற்றுக் கொண்ட பிறகு அக்குற்றவாளிகளுக்கு முன்பைவிட நல்லுணவு கொடுக்கலாயினர்; இடும் வேலைகளுக்கு மேல் அவர்கள் மிகுதியாக வேலை செய்வார்களானால், அவர் அதற்கென்று அவர்கட்குச் சிறிது பணமுங் கொடுத்துவந்தார். அவர்களில் எவனோ ஒருவன் ஒருநாள் கண்டுபிடிக்கக்கூடாத திருட்டுவேலை ஒன்று செய்து விட்டான். அவர் அப்போது அவர்களையெல்லாம் ஒன்றுகூட்டி வைத்துக்கொண்டு, "உங்களில் ஒரு திருடன் இருக்கின்றான். நீங்கள் அவனைக் கண்டுபிடித்தாலன்றி, யான் உங்கட்கு மிகுதி வேலைக்கென்று கொடுக்கும் பணத்தை நிறுத்திவிடுவேன். ஆகையால் அவனைக் கண்டுபிடிப்பது உங்கள் பொறுப்பு; கண்டு பிடித்து அவனுக்குத் தக்க தண்டனை கொடுப்பதும் உங்கள் வேலையாகவே இருக்கவேண்டும்; எவனுக்கும் சவுக்கடி கொடுப்பது எனக்கு விருப்பமில்லை," என்றார். அதனைக் கேட்டு அக் குற்றேவற்காரர்கள், அவர் சொல்வது சரியென்றும், அவர் தங்களை நன்றாகவே நடத்துகிறாரென்றும் உணர்ந்து கொண்டார்கள். பிறகு அவர்களே முயன்று, அத்திருடனைக் கண்டு பிடித்து, அவர்களே அவனுக்குத் தக்க தண்டனையுங் கொடுத்தார்கள்.

வரவர இத்தகைய வழிகளால் அக்குற்றவாளிக் கூட்டத்தாரிடத்தில் திருட்டுத்தனமும், இன்னும் ஒழுங்கற்ற நடவடிக்கைகளும் சிலநாட்களில் இல்லாமலே போய்விட்டன. ஆகவே அவர்கட்குச் சவுக்கடி கொடுக்கும் வழக்கமும் நீங்கிப் போயிற்று. இவ்வாறு அக்குற்றேவற்காரர்களின் வாழ்க்கை நலத்துடனும் நேர்மையுடனும், மனமகிழ்ச்சியுடனும் நடந்துவந்தது.

## 2. அரசன் ஆலப்பன்

இத்தாலிப் பெருநாட்டில் ஆலப்பன் என்னும் ஓர் அரசன் இருந்தான். அவன் மென்மைத் தன்மையும் ஈவிரக்கமுமுள்ளவன். முதன்முதல் அவன் அரோகனுட்டுச் சிற்றரசனாக அரசு செலுத்தி வந்தான். தன் குடிகளின் அன்புக்குணத்தில் அவனுக்கு நம்பிக்கையுண்டு. அவன் மெய்க்காப்பாளர் இன்றியே வெளியில் போய்வருவான். அவன் குடிகளின் உயிரைத் தன்னுயிர்போற் கருதி வந்தான். தான் தந்தை, குடிகள் தனையர்கள் என்னுங் கொள்கையைக் கடைப்பிடித்தவன்.

ஒருநாள் அவன் கடற்கரையோரத்தில் உலாவிக்கொண்டிருந்தான். அப்போது கடலில் மக்களுடன் ஒரு படகு அல்லாடி முழுகிப்போகுந் தறுவாயிலிருந்தது. அதனைக்கண்டு அவன் உடனே

சில ஆட்களுடன் ஒரு கட்டுமரத்தின்மேல் ஆங்குச் சென்று அம்மக்களைக் காப்பாற்றிக் கொண்டுவந்து கரைசேர்த்தான். குற்றவாளிகட்கு மன்னிப்புக் கொடுப்பதற்கே அவன் பெரும்பாலும் முயல்வான். நல்லவர்கள் நீதியினால் நட்பாகின்றனர், அவர்கள் தயையினால் கவரப்படுகின்றனர் என்பது அவன் வழக்க மொழி.

நாளாவட்டத்தில் நெபில் மாகாணமும் சிசிலித் தீவும் ஆலப்பன் கையிற் சிக்கின. ஆங்கு கெயிட நகரத்தலைவன் எக்காரணத்தினாலேயோ இவன்மேற் பகைகொள்ள இவன் அந்நகரை முற்றுகை யிட்டான். கோட்டைப் படையில் உணவுப்பொருள் குறைந்துபோக, அத்தலைவன் சில மக்களை வெளியேறச்செய்தான். அவர்களை ஆலப்பன் என்னவேண்டுமானாலும் செய்துவிடலாம்; வெளியேக வொட்டாமல் வந்தவழியே துரத்தியும் விடலாம். ஆனால் மக்கள் பட்டினிகிடந்து சாவதற்கு ஆலப்பன் மனம் ஒப்பவில்லை. ஆகையால் அவர்கள் வெளியேறிப்போய் விடத் தன் பட்டாளத்தின் மூலம் வழிவிட்டுவிட்டான் ஆலப்பன் தண்ணளிகண்டு அந்நகரத்தார் மனமுருகினர். இரண்டொரு நாட்களில் ஆலப்பன் முற்றுகையில் வெற்றிபெறக் கெயிடத் தலைவன் அவனுக்குப் பணிந்துவிட்டான். ஆலப்பன் வெற்றி கொண்டதைப்பற்றி அந்நகரத்தாரும் மனமுவந்தனர்.

ஆலப்பன் நெபில நாட்டை ஆயுள்வரையில் அரசியலில் அரை குறையின்றி ஆண்டுவந்தான். அந்நாட்களிலெல்லாம் அவன் வல்லமையும் செல்வாக்குமுடைய அரசனாகவே வாழ்ந்தான். எப்போதும் அவன் எண்ணத்தில் தண்ணளியே தலைகாட்டிக்கொண்டிருந்தது. அவனைக் கண்ணிய ஆலப்பன் என்று மண்ணுலகு வழங்கிற்று.

## 3. ஆசிரியன்மார் இருவர்

தென் தமிழ்நாட்டில் தண்டலம் என்னும் பேரூர் ஒன்றுண்டு. அது கீழப்பாதி மேலப்பாதி யென்று இருபிரிவாக இருந்தது கீழப்பாதியில் ஒரு தெருப் பள்ளிக்கூடம். அதனைத் தண்டபாணி வாத்தியார் என்பவர் நடத்திக்கொண்டுவந்தார். அதனில் நாற்பதைம்பது பிள்ளைகள் படித்துக்கொண்டுவந்தனர். ஆசிரியர் அவர்கட்கு எழுதப்படிக்கக் கற்றுக்கொடுத்து வந்தார். அவர் நாட்டுக் கணக்கு நன்கறிந்தவர். அதனையும் அவர் பிள்ளைகட்குச் சொல்லிக்கொடுப்பார். பள்ளிக்கூடம் அவர்தம் தெருத்திண்ணையிலேயே நடைபெற்று வந்தது.

பிள்ளைகள் விடியற்காலை 4 மணி முதல் ஒவ்வொருவராகப் பள்ளிக்கூடம் வந்துசேருவார்கள். தண்டபாணி வாத்தியார் காலை

6 மணிக்கெல்லாம் தெருத் திண்ணைக்கு வந்து பிள்ளைகளிடம் ஒரு பக்கத்தில் பிரம்புங் கையுமாக உட்கார்ந்து கொள்வார்.

அரிச்சுவடிப் பிள்ளைகள், பேர்ச்சுவடிப் பிள்ளைகள், ஆத்திசூடிப் பிள்ளைகள் என்பது போன்ற வகுப்புக்கள் அங்குண்டு அருணாசலபுராணம், நைடதம், பெரியபுராணம் ஆகிய பெருநூல்களையும் பார்த்துப் படிக்கும் பெரிய பிள்ளைகளும் அங்குண்டு

பிள்ளைகள் நூல்களைப் பிழையில்லாமல்வாத்தியாருக்குப்படித்துக்காட்டவேண்டும். ஒரு பிழைக்கு ஒரு பிரம்படி. அவ்வடி ஆசிரியர் மனம்போனபடி எளிதாகவும் உறைப்பாகவுமிருக்கும். அடிபடும் பிள்ளைகள் அழுதுகொண்டே படிப்பார்கள். படிக்கும் நூல்களில் ஒரு வரிக்காவது பிள்ளைகட்குப் பொருள் தெரியாது. ஆசிரியர் சொல்லிக் கொடுப்பதுமில்லை.

ஆசிரியர் ஒரு பிள்ளையிடம் பாடம் படிக்கக்கேட்டுக்கொண்டிருக்கும்போது, மற்றப் பிள்ளைகள் அவரவர் பாடங்களை உரக்கப் படித்துக்கொண்டிருக்கவேண்டும். சட்டாண்பிள்ளை யென்னும் முதன்மை மாணவன் அங்கொருவனுண்டு. அவன் படிக்கும் பிள்ளைகளை மேற்பார்வை பார்க்கவேண்டும். அவன் உரக்கப் படிக்காதவர்களை ஆசிரியரிடம் கூட்டிக்கொண்டுவந்துசொல்லுவான். மனம் போனபடி அவர்கட்குப் பிரம்படிகள் கொடுப்பார். அகப்பட்ட பையன் அழுதுகொண்டேபோய்த் தன்னிடஞ் சேர்ந்து உரக்க உரக்கக் குரல்தூக்கிப் படிப்பான். இவ்வாறு அப்பள்ளிக்கூடத்தில் எப்போதும் பேரொலியும் அழுகுரலும் முழங்கிக்கொண்டேயிருக்கும்.

அங்குத் தண்டனை பிரம்படியேயன்றி, தலையிற் குட்டுவதும், காது திமிண்டுதலும், தசையைக் கிள்ளுதலுமுதலிய தண்டனைகளுமுண்டு. அடாத குற்றங்களுக்குக் கோதண்டம் போடுதல், நாற்காலியில் நிற்கவைத்தல், படுக்கப்போட்டுப் பிட்டங்களின்மேல் பிரம்படி கொடுத்தல் முதலிய கடுந்தண்டனைகளும் உண்டு.

அங்குப் பிள்ளைகள் ஒருவருக்கொருவர் திட்டிக்கொள்வர், அடித்துக்கொள்வர், கிள்ளிக்கொள்வர்; இவைகட்கெல்லாம் தண்டனை பிரம்படியே.

பிள்ளைகள் உணவுக்கு வீடுசெல்லும் நேரந்தவிர நாளெல்லாம் பள்ளிக்கூடத்திலேயே இருக்கவேண்டும். விளக்கு வைக்கத்தான் பிள்ளைகளை வீட்டுக்கு விடுவார்.

அப் பள்ளிக்கூடத்தில் உடற்பயிற்சி செய்யும் நேரமே கிடையாது. நிலவு நாட்களில் அப்பிள்ளைகள் சிலர் சிலராக அவ்வத் தெருக்களில் ஒன்றுகூடி அடிபிடிசண்டையோடு விளையாடுவர்.

அப் பிள்ளைகளிடம் நல்ல படிப்பில்லை; நல்ல பேச்சில்லை: நல்ல நடையொழுக்கங்களில்லை; நன்னெறி இன்னதென்பதில் ஆசிரியர் பிள்ளைகளைப் பயிற்சி செய்வதே இல்லை.

சினத்திலும், உருட்டுதலிலும், மிரட்டுதலிலும், அடியிலும் அழுகையிலும் வளர்ந்த பிள்ளைகள் உலக வாழ்க்கையில் எப்படி யிருப்பார்கள்! அவர்கள் குருடர்களாகவும் திருடர்களாகவும் மூடர்களாகவும், சண்டைக்காரர்களாகவும் இருப்பதைத்தவிர, நல் வழியில் நடக்க அறிவார்களோ!

மேலப்பாதியில் அன்பகத்தர் என்னும் ஓராசிரியர் இருந்தார். அவர் இலக்கண விலக்கியங்களில் நிபுணர். அவர் மாணவர்கட்கு முறையாக நூல்களைக் கற்பித்துவந்தார். வாக்கியங்களின் பொருள் தெள்ளத்தெளிய விளங்க எல்லோருக்கும் சொல்லிக்கொடுத்து வந்தார். அவர் இன்முகங்காட்டி இன்சொற் பேசுவர். அவர் கையிற்பிரம்பு காண்பதருமை. அவர் பன்னிரண்டு பிள்ளைகளுக்கு மேல் தமது பள்ளிக்கூடத்திற் சேர்த்துக் கொள்வதில்லை. அங்கு தொடக்கப் படிப்பு, நடுத்தரப் படிப்பு, உயர்தரப் படிப்பு என்று மூவகைப் பிரிவுகளாக மாணவர்கள்கல்விகற்பர் ஔவையார் சிறு நூல்கள் போன்றவை தொடக்கப் படிப்பு, கீழ்க்கணக்கு நூல்கள் நடுத்தரப்படிப்பு, மேற்கணக்கு நூல்களும் மற்றும் புராண இதிகா சங்களும் உயர்தரப் படிப்பு, வகுப்புக்குத் தக்கவாறு இலக்கண நூல்கள்.

காலை 10 மணிமுதல் 12 வரை ஒரு வேளை. 2 மணி முதல், 4 வரை ஒருவேளை, ஆக நான்கு மணி நேரமே பள்ளிக்கூடம். பிள் ளைகள் படிப்பதும் பாடங்கேட்பதுந்தவிரவேறொன்றும் அவர்கள் அங்குச் செய்வதில்லை; பள்ளிக்கூடம் நடப்பது பக்கத்து வீட்டா ருக்கும் தெரியாது. ஆசையும், அன்பும், கருத்தும், கவனிப்பும் அங் குக் குடிகொண்டிருக்கும். ஒரு நேரத்தில் ஆசிரியரிடம் கற்கும் மாணவர்போக ஏனையோர் தங்களுக்குத் தாங்களே படித்துக் கொண்டிருத்தலிலும் ஒருவருக்கொருவர் வினவிடுத்து விடை பெறுதலிலும் சொல்லுவதிலும் பழகிக்கொண்டிருப்பர். அவர்கள் தமக்குத் தெரியாத பொருள்களை ஆசிரியரைக் கேட்டறிந்து கொள்வர்.

ஒவ்வொரு நாட்களில் ஒவ்வொரு பிரிவுப்பிள்ளைகளுடன்வெளி யில் உலாவிவரப் போவார் அன்பகத்தர். வெளிக் காட்சிகளிற் பிள்ளைகளுக்குத் தக்கபடி அறிவிக்கவேண்டிய செய்திகளையெடுத் துச் சொல்லி அறிவூட்டுவார் அவர்; இயற்கைப் பொருள்களுக்கும் செய்திகளுக்கும், உலகப்பொருள்களுக்கும்செய்திகளுக்கும்உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைப் பிள்ளைகளுக்கெடுத்துக் காட்டுவார்.

பாடநூற்பொருள்களையும் இயற்கைக் கண்காட்சிகளில் விளக்கிக் காட்டுவார். உலாவிவரும்போது பழந்தமிழ்நாட்டுக் கதைகளையும், அயல் நாட்டுக் கதைகளையும் பிள்ளைகள் காதுக்கினிமைபடச் சொல்லி, அவற்றின் மூலம் நீதிமுறைகளையும் அவர் அவர்கட்கு உணர்த்துவார். நன்னெறி நன்னடக்கைகளைச் செவ்விநேரும் போதெல்லாம் அவர் அவர்கட்கெடுத்துச் சொல்லி, அவைகள் அவர்கள் மனத்தில் பசுமரத்தாணிபோல் பதியச் செய்வார்.

பிள்ளைகளுக்குக் கல்வி கற்பிக்கும்போதெல்லாம்-கசடறக் கற்றல், கற்றபடி நிற்றல், உலகவொழுக்கம், நீதிமுறை—ஆகிய இவைகளைத் தம் மனத்தின்கண் நோக்கமாக வைத்துக்கொள்வார் அன்பகத்தர்.

இத்தகைய ஆசிரியரிடம் பழகும் பிள்ளைகள் வாழ்க்கையில் எவ்வாறு நடந்துகொள்வார்கள் என்பதை எடுத்துச் சொல்லவும் வேண்டுமோ? அன்பகத்தர்தம் மாணுக்கர் என்றால் அவ்வூரும் மற்றெவ்வூரும், அரசியலும், அலுவலகமும், தொழிற்சாலையும் மதித்து மரியாதை கொடுக்கும், அம்மாணுக்கர்களெல்லோரும் நன்னிலைபெற்று, நல்வாழ்வு வாழ்ந்து, நல்லவர்களெனப் பெயரெடுத்து, உலகத்துக் கோரழகு கொடுத்து வந்தனர்.

க. குளிர்காற்று உடையை உடுக்கும்,
கொடுவெயில் உடையை எடுக்கும்.

உ. நீர்வீழ்ச்சி மலைக்கற்களை உடைத்துக் கொண்டு வந்து, பேரொலிசெய்து பள்ளத்தில் வீழ்ந்து, மக்களைக் கிட்ட அணுகவொட்டாமற் செய்யும். அருவியோ மெல்லென வோடி, மரஞ்செடி கொடிகளை வளர்த்து, வயல்களிடம் அமைதியுடன் பாய்ந்து மக்கட்கு மகிழ்ச்சி யுண்டாக்கும்.

ஒரு பெரியார்.

ங. பையச் சென்றால் வையந் தாங்கும்.

ஒளவையார்.

ச. பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு அணி.

திருவள்ளுவர்.

---

## கஎ. பிறர்பொருளை விரும்பாமை

மக்கள் தத்தமக் குதவும்படி சொத்துக்கள் வைத்துக் கொண்டிருக்கின்றார்கள். அவை அவரவர்கட்கு உரிய உடைமைகள். ஒரு பையன் தான் படிக்கப் புத்தகம் முதலியன வைத்துக் கொண்டிருப்பான்; ஒருவன் பணம் வைத்துக் கொண்டிருப்பான். ஒருவன்வீடும் வீட்டுத் தட்டுமுட்டுக் களும் வைத்துக் கொண்டிருப்பான். ஒருவன் நிலம் வைத்துக்கொண்டிருப்பான். ஒருவன் சேர்த்து வைத்துக் கொண்டிருக்கின்ற எப்பொருளும் அவனுடைய சொத்தாகும். அஃது அவனுக்கே உரியது; அதனை எடுக்கவோ, பயன்படுத்தவோ பிறன் எவனுக்கும் உரிமை இல்லை. இதனை மீறுவது உடையவனுக்குக் குற்றஞ் செய்வதேயாகும்; மேலும் அவன் அப்பொருளை யீட்டப்பட்ட உழைப்பைப் பாழாக்குவதுமாகும். உழைத்தவன் துன்பமடைய உழைக்காதவன் இன்பமடைவதா? ஒருவன் தன்னதல்லாத ஒரு பொருளைத் தொடவுங்கூடாது என்பது முதன்மையான நீதிமுறை. ஒருவன் உழைத்துழைத்துப் பெற்ற பொருள்களை யிழந்து கொண்டேயிருந்தால், அவனுக்கு மேலும் மேலும் உழைக்க மனம் வருமா? உழைப்பாளிகள் எல்லோரும் இவ்வாறு ஏமாற்றமடைந்துபோனால், உலகத்தில் இன்பநலமென்பதேது? பிறன்பொருள் தன்னுடையதன்று என்பதை ஒவ்வொருவனும் மனத்திற் கொள்ளவேண்டும். ஒருவனுடைய வீட்டுத் துரும்பையும் பிறன் எவனும் விரும்பப்படாது. தன்னுடைய தொன்றைப் பிறனொருவன் எடுத்துக்கொண்டு போய்விட்டால், அது தனக்கு எவ்வளவு மனத்துன்ப முண்டாக்குமென்பதை ஒவ்வொருவனும் எண்ணிப்பார்க்கவேண்டும். பிறன் பொருளை வெளவுபவன் அவனுக்குத் துன்பஞ் செய்பவனாதவதுந் தவிரத் தானுந் திருடனென்று யாவராலும் பழிக்கப்பட்டு வெறுக்கவும் படுவான்.

பலநாள் திருடன் ஒருநாளில் அகப்பட்டுக் கொள்வானல்லவா? அகப்பட்டுக் கொண்டால் திட்டுந் தட்டும்

பெற்றுத் திண்டாடுவதுந்தவிர, அரசியலாரால் தண்டிக்கவும் படுவான். திருட்டுத்தனஞ் செய்பவன் தன் திருட்டுப் பிறராற் காணப்படாதென்று மனப்பால் குடிக்கின்றான். ஆனாலும் அவனறியாத வழியிலே அது கண்டுபிடித்துக் கொள்ளப் படுகின்றது. ஆகையினாலே பிறர் சொத்துக்கு ஆசைப்படக் கூடாதென்பது எவனும் அறியவேண்டிய தொன்று.

## 1. மிலன்நகர்க் காவலாளி

மிலன்நகரில் ஒரு குலமகன் மாளிகையில் காவலாளியொருவனிருந்தான். அவன் ஒருநாள், தெருவில் விழுந்துகிடந்த ஒரு பணப்பையைக் கண்டெடுத்தான். அதனில் ஒரு நூறு ரூபா இருந்தது. அவன் உடனே, "இன்ன தெருவில் இன்ன நேரத்தில் ஒரு நூறு ரூபாகொண்ட ஒரு பணப்பையைத் தான் கண்டெடுத்து வைத்திருப்பதாகப் பறையறைவித்தான். இதனைக் கேட்டவுடனே பை யிழந்தவன் ஒய்யென ஓடிவந்து காவலாளியைக் கண்டான். கண்டு, அவன் அப்பை தன்னுடையதென்று மெய்ப்பிக்கவே, காவலாளி அதனை அவனிடங் கொடுத்துவிட்டான். வாங்கிக் கொண்டவன் காவலாளிக்கு நன்றிகூறி, இருபது ரூபா எடுத்து அவனிடங் கொடுத்தான்; அவன் அதனை வாங்க மறுத்துத் தான், தன்னுடைய கடமையைச் செய்தபடியினால் யாதொரு கைம்மாறும் வேண்டாமென்றான்.

பிறகு பணப்பைக்காரன் மனநிறைவடையாமல் பத்து ரூபா எடுத்து அவனுக்குக் கொடுக்கப்போனான். அவன் அதனையும் மறுத்தான். பிறகு பைக்காரன் வேண்டுகோளுடன் ஐந்து ரூபா கொடுக்கப்போனான். அதன்பிறகு காவலாளி சினக்குறிப்புடன், "கடமைக்குக் கைம்மாறில்லை, போம் போம்!" என்றான். பிறகு பொருட்காரன் பெருஞ் சினங்கொண்டு, "நீர் கைம்மாறு சிறிதும் வேண்டாமென்று பிடிவாதஞ் செய்கிறீர்; ஆகையால் இப் பணப்பை எனக்கும் வேண்டாம்," என்று அதனைத் தரையில் போட்டுவிட்டுப் போகப் புறப்பட்டான் உடனே காவலாளி அவன் கையைப்பிடித்துத் தடுத்து, பணப்பையை யெடுத்து அவனிடங் கொடுத்து, ரூபா ஐந்துமாத்திரம் பெற்றுக்கொண்டு, அவனிடத்து இன்சொற் பேசி அனுப்பிவிட்டான். பிறகு காவலாளி அச்சிறு தொகையையும் ஓர் அறச்சாலைக்குக் கொடுத்துவிட்டான்.

## 2. இலவநாதன்

இலவநாதன் என்பவன் ஒருவன் சிறுவயதிலேயே தந்தையைப் பறிகொடுத்துவிட்டான். பெற்றோளோ உழைப்புக் குதவாத

கிழத்தன மடைந்துவிட்டாள். தன்னைக் கைதூக்கிக் காப்பாற்றும் நண்பர் ஒருவரும் அவனுக்கில்லை. ஒருநாள் அவன் தனக்குள்ளே "நாம் என் எவனையும் நத்திப் பிழைக்கவேண்டும், நமக்குத்தான் எழுதப் படிக்கத்தெரியுமே, கணக்குப் போடவுஞ் சிறிதறிவோமே; நம்மிடம் உழைப்பும் உண்மையுமிருந்தால், நமக்கு என் பிழைப்பு நடக்காது!" என்று எண்ணித் தாயினிடம் விடை பெற்றுக் கொண்டு அடுத்த நகரை அடைந்தான். உழைப்பு விரும்பு வோனுக்கு ஊதியம் கிடைக்காமற் போகுமா? இரண்டொரு நாட்களிலேயே அந்நகரின் ஆவணத்தில் ஒரு பெருவணிகர் இலவ நாதனைத் தன்னிடம் கை வேலைக்கு வைத்துக்கொண்டார். இவன் வணிகர் இடும் வேலைகளை உண்மையோடும் ஊக்கத்தோடும் செய்துகொண்டு வந்தான். வணிகரும் இலவன்மீது அன்பு கொண்டு ஆதரவு காட்டிவந்தார். இலவன் தான் ஏதாவது தப்புத் தவறுகள் செய்துவிட்டால், அவைகளை ஒப்புக்கொண்டு இனி மேலும் அத்தகைய குறை குற்றங்கள் நேராதபடி கவலையுடன் பார்த்துக்கொள்வான். இவ்வாறாகவே வணிகர் இலவனுடைய வேலைத் திறமையையும், நற்குண நற்செய்கைகளையுங் கண்டு, அவனிடம் முழுநம்பிக்கை கொண்டிருந்தார்.

வணிகர்வீட்டு இல்லாண்மைக்காரி சிறிது திருட்டுப்புத்தி யுடையவள். ஆகையால், அவள் இலவநாதனை ஓர் உளவாளி யென்றே எண்ணிவந்தாள். அவனை வீட்டைவிட்டுத் துரத்தி விடவேண்டுமென்னும் எண்ணத்தினுல் எந்நேரமும் அவன்பேரில் வணிகரிடம் ஏதாவதொரு கோள் சொல்லிக்கொண்டே யிருப்பாள். ஆனாலும், அவள் பேச்சை வணிகர் நம்புவதில்லை. நாளேற நாளேற வணிகர் மனமும் சிறிது மாறிப்போய் இலவ நாதனை அவர் இன்னுந் தேர்வுசெய்ய எண்ணங்கொண்டார். விலைப்பொருள்களை வாங்குவதற்கு அவனையே அனுப்பிவைப்பார்; விலைக்கு இரட்டிப்புத் தொகை அவன் கையில் கொடுத்தனுப்பு வார். அவன் மிச்சப் பணத்தில் ஒரு செப்புக்காசும் குறையாமல் திருப்பிக் கொடுத்துவிடுவான்.

ஒருநாள் வணிகர் பணப்பெட்டியண்டை ஒரு பவுனைப் போட்டுவிட்டு வெளியே போய்விட்டார். அதனை இலவன் கண் டெடுத்தான். அப்போது இல்லாண்மைக்காரியும் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் அதனைத் தமக்குள் பங்கிட்டுக் கொள்ளலாமென்று அவனிடம் மறைபொருளாகச் சொன்னாள். அவன், "வணிகர் பணம் வணிகரிடம் சேரவேண்டும்; அது நமது பொருளன்று," என்று சொல்லிவிட்டு அதனை அவரிடமே சேர்ப்பித்துவிட்டான். வணிகர் செய்தி முழுது மறிந்து மிக மகிழ்ச்சி கொண்டார்.

வணிகருக்கு மக்கட்பேறில்லை. அன்றுமுதல் வணிகர் இலவனாதனை எடுப்புப் பிள்ளையாக வைத்துக்கொண்டார். சில நாட்களில் வணிகர் விண்ணுலகடைய அவர் தம் உடைமைகளுக்கெல்லாம் இலவனாதனே உடையவனானான். பின் இல்லாண்மைக்காரி இல்லாமலே போனவழி தெரியாமற் போய்விட்டாள்.

## 3. இரதசைலன்

ஒரு காலத்தில் பிரான்சியர் ஜெர்மனியின்மீது படையெடுத்து வந்தனர். அப்போது அங்குப் பணவாணிப யூதன் ஒருவன் இருந்தான். அவன் பெருஞ் செல்வன் அல்லன்; ஆனாலும், அவன் உண்மைமிக்கவனென்று பேரெடுத்தான். அப்போது ஜெர்மனி அரசன் ஒருவன் வலசை வாங்கிப்போக நேர்ந்தது. அச்செவ்வியில் அவன் பன்னூற்றுக் கணக்கான தன் பணத்தை அவ்யூதனிடம் யாதொரு செல்லுச் சீட்டுமில்லாமலே ஒப்படைத்துவைத்துப் போய் விட்டான்.

யூதன் ஒப்படைத்த பணத்தைமாத்திரம் தன்னுடைய புறக்கடையில் புதைத்து வைத்துவிட்டுத் தன் பணத்தைத் தன் வீட்டிலேயே வைத்திருந்தான். பிரான்சியர் வீட்டில் இருந்த பணத்தையெடுத்துக்கொண்டு, அவன்மீது ஐயுறவொன்றும் படாமற் போய்விட்டார்கள். யூதன் தன் பணத்தையும் உடன் புதைத்து வைத்திருந்தால், இரண்டையும் ஒருசேர இழந்திருப்பான். இஃது அவனுடைய தன்னய மறுப்பை நன்கு காட்டுகின்றதல்லவா?

அமர் நின்றது, நாட்டில் அமைதி யுண்டாயிற்று. சிலநாட்கள் சென்று அரசமகன் யூதனை வந்து கண்டான். யூதன் தான் பணத்தைக் காப்பாற்றிய வகையைச் சொல்லிப் பின்னுஞ் சொல்லுகின்றான்.—"யான் என் பணத்தை யிழந்துவிட்டேனாகையால் உமது பணத்திற் சிறிதுதொகை யெடுத்து, வாணிபத்துறையில் வைத்து யானிழந்த தொகையை மீண்டும் பெற்றேன். ஆகையால் உம்முடைய முழுத்தொகையுடன் எனக்குக் கிடைத்த மேல் தொகையில் நாலில் ஒரு பங்கும் உமக்குக் கொடுக்கின்றேன்," என்று சொல்லி அப்படியே மொத்தத் தொகையையும் அரசமகன் கையில் அளித்து விட்டான் இரதசைலன்.

அரசன் மட்டற்ற மகிழ்ச்சியுடன் யூதனை நோக்கி, "என் பணத்தைப் பாதுகாக்க உம்முடைய பணத்தை யிழந்துவிட்டீர்! உம்முடைய நன்றிக்குக் கைம்மாறு இன்னது செய்வதென்று எனக்கு ஒன்றுந் தோன்றவில்லை. யான் எது செய்யினும் அஃது உமது நன்றிக்கு ஈடாகாது. ஆயினும் யான் ஒன்று செய்யத் துணிகின்றேன்: இந்தத் தொகையைத் தாங்களே உங்கள்

வாணிபத்துறையிற் போட்டு வைத்துக்கொள்ளுங்கள். வட்டி வாசியில் உங்கள் மனமொப்புந் தொகையை எனக்கு அவ்வப் போது கொடுத்துக்கொண்டு வாருங்கள்," என்று சொல்லிப் பெற்ற தொகையை அவனிடமே திருப்பிக் கொடுத்துவிட்டு அவனிடம் விடை பெற்றுக்கொண்டு அரண்மனை சென்றான்.

சில நாட்களில் இரதசைலயூதன் மன்னன் பெருந்தொகை யைக் கொண்டு, நாலாபக்க நாடுகளிலும் நல் வாணிபஞ் செய்து, அரசியலாருக்கும் அவ்வப்போது வேண்டிய தொகை கொடுத்துக் கொண்டு, உலகறிந்த ஒப்பற்ற வணிகச் செல்வனானான்.

க. திருட்டுத்தனஞ் செய்யாதிருப்பாயாக.

—மோசே கட்டளைகள்.

உ. திருட்டுத்தனம் செய்திருந்தவன் இனிமேலாவது அதனைச் செய்யாதிருக்கட்டும்; அவன் கையால் நல்வழியில் உழைத்துப் பொருள் பெற்றுத் தானும் பிழைத்து, வேண்டியவர்க்குங் கொடுக்கட்டும்.

—உபதேசி பவுல்.

ங. நம்முடைய கைகள் படைக்கப்பட்டது உண்மை உழைப்புக்கேயன்றித், திருட்டுக்கும் கொள்ளைக்கும் அன்று; திருடன் தன்னைத்தானே வஞ்சித்துக்கொள் கின்றான்; மேலும் திருட்டுப்பொருள் துன்பத்தையும், துயரத்தையும், அவமானத்தையும் கொடுக்கும்.

—வாட்ஸ்.

ச. அஃகாமை செல்வத்திற்கு யாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்.

ரு. அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறனறிந்து ஆங்கே திரு.

—திருவள்ளுவர்.

---

## கஅ. பழிப்பன சொல்லாமை

உடைமைப் பொருளே யன்றி மக்கள் மதிப்புக் கொடுத்துக் காக்கின்ற வேறு பொருள்களும் பல உள. அவைகளில் முதன்மையானது நல்ல பெயர். நல்ல பெயர் என்பது ஒருவன் நல்லவன் என்று பொதுவாக மக்கள் எல்லோரும் மனத்திற் கொண்டிருத்தல். அப்படிப்பட்டவனை மக்கள் பலரும் பாராட்டிப் பேசுகின்றனர். மேலும் மக்கள் அவனிடம் நம்பிக்கை வைக்கின்றனர். அவனை அலுவலில் வைத்துக்கொள்கின்றனர்; அவனுக்கு உதவியாகப் பேசுகின்றனர். இவ்வாறு நல்லவன் தன் நற்பெயரினாலேயே பற்பல வழிகளில் முன்னேற்றமடைகின்றான்.

நல்லவனுக்கு நல்ல பெயர் வரவேண்டியது முறைமையும் உரிமையுமாகும்; அதனால் அவனுக்குச் சிறப்பு உண்டு. நற்பெயரே அவனுடைய நற்குணத்திற்குக் கைம்மாறாகும். அதனால் அவன் எப்போதும் நல்லவனாகவே யிருக்க ஊக்கப்படுகின்றான். நல்லவனுக்கு நல்லபெயர் கிடைக்காவிட்டால் அவன் நல்லவனாகவே எப்போதும் இருப்பது ஐயுறவே. அதனைக் கண்டு ஏனையோரும் நல்லவராக இருக்க முயலமாட்டார்கள். ஆகையால் மக்கள் எவருக்கும் அவரவர் தகுதிக்குத் தக்கபடி நன்கு மதிப்புக் கொடுக்கவேண்டுமென்பது முதன்மையான தொன்றாகும்.

தீமை செய்யாதவனைத் தீவினையனென்றும், கடமையில் தவறாதவனைப் பிழைசெய்பவனென்றும் உண்மை போலத் தோன்றப் பிறரிடம் அவர்களைப் பழித்துப் பேசுதல் மிகக் கீழான செயல் ஆகும்.

ஆதலால், ஒருவனைப் பொருளிழக்கச் செய்வதற்கு மேல் நற்பெயரிழக்கச்செய்வது அவனுக்குப் பெருந் தீங்கிழைப்பதாகும். ஆகையால் எவரைப் பற்றியும் எதனைச் சொல்வதானாலும் நாம் உன்னிப்போடிருக்கவேண்டும். ஒருவனுடைய நற்பெயர் கெட்டுப்போய்விட்டால் அவன் அதனைத் திரும்ப அடைவதருமை. பழிச்சொல்லும்

இழிசொல்லும் மக்களிடம் ஒன்று பத்தாகவும், பத்து நூறு கவும் பரவி, ஒருவனுடைய நற்பெயரை அறவே கெடுத்து அவனையறியாமலே அல்லல் விளைக்கும். வாய்விட்டுச் சென்ற சொல் திரும்பவந்து உட்புகுந்து மறைந்து போகுமா? பிறன் ஒருவனுடைய நற்பெயரில் மன மார்ந்த மதிப்புவைத்த ஒருவன் அவனைப்பற்றிப் பழிப்பும் இழிப்பும் வாய்விட்டுப் பேசமாட்டான்; பிறர் அவ்வாறு கத் தன்னிடம் சொல்லினும், அதனைக் காதுகொடுத்துக் கேட்கவுமாட்டான்; கேட்டாலும் அதனைப் பிறனெவ னிடத்தும் சொல்லவுமாட்டான். நற்பயனற்ற எவ்வகைச் சொல்லையும் வாய்விட்டுச் சொல்லாதிருப்பது உலக வாழ்க் கையிற் பெருநலச் சிறப்புத் தருவதொன்றுகும்.

## 1. வஞ்சிக்கப்படாதவன் வஞ்சிக்கப்பட்டது

சாக்கரத்தீசர் ஒரு கிரேக்கப் பேரறிவாளர். அவர் எம்மகனுக் கும் அணுவளவு தீமையுஞ் செய்ததில்லை; அவர் எவர்க்கும் நல்லூழியமே செய்துவந்தார். அவர், பிறர் நலமே தவிர தந்ந லம் நாடுவதில்லை. எவ்வகை இடுக்கணிலும் அவர் எது சரியோ, எது செய்யத்தக்கதோ அதனையே செய்வார். அவர் தம் வாழ்நாட் களிலெல்லாம் பிறர் நலத்துக்கும், பிறர் இன்பத்துக்குமே பாடு பட்டுவந்தார். இவருக்கும் இழிவும் பழியும் வந்தது இரங்கத் தக்கதே.

அக்காலத்தில் கிரேக்க நாட்டில் மாயாவாதக்கூட்டமொன்றி ருந்தது. அவர்கள் சொல்வன்மையினால் பொய்யை மெய்யாகக் காட்டிப் பேசுவர். அவர்கள் வலையிற் சிக்கியவர்கள் பற்பல கிரேக் கர். அதனைப் பொறாராய்ச் சாக்கரத்தீசர் அக் கூட்டத்தாரின் உண்மை கலவாத வெறும் பொய்யை மக்கட்கு எடுத்துக்காட்டி அவர்தம் மனத்தை நல்வழியில் திருப்பப் படாத பாடுபட்டு வந்தார். இஃதேயன்றி அவர் அரசியலார் குற்றங்குறைகளையும் அச்சமின்றி யெடுத்துக்காட்டிப் பேசிவந்தார். கால வேறுபாட்டா லும் கிரேக்க மக்களின் அறிவீனத்தாலும் இவர் உண்மைக் கென்றே பாடுபட்டது எடுபடாமற்போயிற்று.

கிரேக்கர் பல தெய்வக் கொள்கையர். அரசியலாரும் அத் தகையோரே. சாக்கரத்தீசரோ தெய்வம் ஒன்றேயென் றுணர்ந் தவர். அவர் தம் கொள்கையை மக்கட்கு வற்புறுத்திச் சொல்லி வந்தார். ஆயினும் அவர் கிரேக்கர்களின் எத்தெய்வத்தையும்

பழித்தோ இழித்தோ பேசுவதில்லை. அப்படியிருந்தும், மாயா வாதக் கூட்டத்தார் இவ்வுண்மையை மறுத்து அழிவழக்குப் பேசிச் சாக்கரத்தீசர் பலதெய்வப் பழிப்பாளர், மக்கட்குக் கெடு புத்தி யூட்டுபவர், அரசியலார்க்கு இரண்டகஞ் செய்பவர் என்னுங் குற்றங்களை அவர் மேற் சாட்டி, அவரை நீதிமன்றத்துக்கு இழுத்துவிட்டனர். நீதியாளரும் உண்மைக்கு மாறுபட்ட கொள்கையுடையவராதலால் சாக்கரத்தீசரை நஞ்சூட்டிக் கொல்லத் தீர்மானித்துவிட்டனர். உலகப் பேரறிஞராகிய சாக்க ரத்தீசர் பழியும் இழிவும் பட்டுப் பரகதியடைந்தார்

## 2. ஏழைக்குறும்பி எலினி

எலினி என்னும் ஏழைக் குறும்புக்காரி ஒருத்தியிருந்தாள். அவள் மக்கள் உண்டென்பதை இல்லென்பாள், இல்லென்பதை யுண்டென்பாள். அவள் எவ்வகையிலுந் தனக்குத் தாழ்ந்த நிலைமையில் இருப்பவர்களையே மெய்ச்சி மேலாகப் பேசுவாள். தகுதியுள்ளவர்களை ஏதோ ஒரு பயனற்ற காரணங்காட்டித் தகாத வரே யென்பாள். உலகம் புகழும் நல்லோரையும் பொல்லோ ரென்பாள்.

ஒருவரை ஈவிரக்கமுள்ளவர் என்று நண்பர் சொன்னால் அவள், "அவர் வலது கை செய்யும் உதவியை இடது கை யறியுமே! அவர் மறைவாகச் செய்த உதவி ஏதாவதொன்று சொல்லுங்கள் பார்ப்போம்," என்பாள்.

ஒருவரைக் குறித்து எலினியின் நண்பர், "அவர் மிக நல்லவர்" என்றால், உடனே அவள், "அவர் வெளிக்கு நல்லவரே, அவர்தம் மனப்பான்மையை நீங்கள் அறிவீரோ! கண்ணுக்கழகாக இருக்கும் பழங்களெல்லாம் வாய்க்குச் சுவை தருமோ," என்பாள்.

"பந்தன் என்பவன் தன் அழகுக்கேடான கிழ மாமன்மீது அன்பாயிருக்கின்றான்," என்று தன் நண்பர் சொன்னால், அதற்கு அவள், "சொத்துக்கு ஆசைப்பட்டன்றோ மாமன்மீது பந்தன் பத்தி காட்டுகின்றான்," என்பாள்.

இவ்வாறு அழிவழக்குப் பேசுந்தன்மை எலினியிடம் இல்லா விட்டால் அவள் மற்றெவ்வகையிலும் உயர்ந்தவளே ஆவாள். ஆனால், பிறப்போடு பிறந்தது இறக்கும்வரை இருந்தேதீரும் அல்லவா?

## 3. பணக்காரன் பாழ்பட்டது

ஒரூரில் ஒரு பணக்காரன் இருந்தான். அவன் பிறரைப் பற்றிப் பழிப்பாகவும் இழிப்பாகவும் பேசுவதையே வழக்கமாகக் கொண்டுவிட்டான். அறிவிலிகளெல்லாம் அவனுக்குக் கூட்டாளி

கள். அவனுடன் எல்லோருஞ் சேர்ந்து ஊரிலுள்ள நல்லோரை யெல்லாம் பொல்லாப்பாய்ப் பேசிக் கெக்கொலிகொட்டிச் சிரிப்பதே வேலையாகக்கொண்டிருந்தனர். ஆகையால் அவ்வூரில் நல்லவர் ஒருவரும் அவன் வீட்டுக்கு வருவதே யில்லை.

இவ்வாறு சிலநாட்கள் செல்ல அச்செல்வன் தன் கூட்டத்தாரையே நேருக்கு நேராய்ப் பழித்தும் இழித்தும் பேசத்தொடங்கினன். பணச்செருக்கு பல்வகைத் தீமையுஞ் செய்யுமன்றோ? எவனுக்குந் தன்மதிப்பென்பது ஒன்றுண்டல்லவா? நேருக்கு நேரான வசைச் சொற்களை எவர்தாம் பொறுப்பர்! "சீ இவன் கெட்டான்" என்று உடன் கூட்டத்தார் ஒவ்வொருவராக அவனை விட்டகன்றுபோயினர். தன்னந்தனியே நின்றான் பணக்காரன்.

ஒருநாளிரவு அவன் வீட்டில் திருட்டுக் கும்பல் புகுந்து இருப்பவற்றையெல்லாம் எடுத்துக்கொண்டு போய்விட்டனர். அக்கம் பக்கத்தாரும் அவனுக்கு யாதோருதவியுஞ் செய்ய அணுகினாரில்லை. பணக்காரன் பணமெல்லாமிழந்து ஊரூர் சென்று பிச்சையெடுத்துப் பிழைத்துவந்தான். பழித்தலும் இழித்தலும் பணக்காரனையும் பாழாககினது பார்த்தீர்களா?

க. அயலான்மேல் பொய்ச்சான்று பகர நிற்காதே.

—மோசே கட்டளைகள்.

உ. அயலானுக்குப் பகையாகக் காரணமின்றிச் சான்று சொல்லப் போகாதே.

ங. மனத்தூய்மையை விரும்புகின்றவன் வாக்கின் நலத்தால் அரசனுக்கு நண்பனாகின்றான்.

ச. உண்மை வாக்கு எப்போதும் நிலைநிற்கும்; பொய்வாக்கோ ஒரு நொடிப்பொழுதே!

— பழமொழிகள்.

ரு. முறுகிய கூரறிவுடையோர் மக்களிடம் பிறர் காணாத குற்றங் குறைகளையெல்லாம் கண்டுரைப்பர்; பிறர்தம நற்குண நற்செய்கைகளைக் காண அவ்வறிவைப் பயன்படுத்துவது மேலானது. சூரியன் ஒளியை நுகர்தலைவிட்டு அதனுடைய கரும்புள்ளிகளின்மேல கருத்துச் செலுத்துவது மேலானதன்று.

—செட்ஜ்விக்

௬. பயனில்சொல் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி எனல்.

௭. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்
அறங்கூறும் ஆக்கந் தரும்.

௮. பிறன்பழி கூறுவான் தன்பழி யுள்ளுந்
திறந்தெரிந்து கூறப் படும்.

௯. துன்னியார் குற்றமுந் தூற்று மரபினர்
என்னைகொல் ஏதிலார் மாட்டு.

—திருவள்ளுவர்.

௧0. பழிப்பன பகரேல்.

—ஔவையார்.

பிறர்பிறர்

௧௧. சீரெல்லாம் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்கும் தாழ்ச்சி சொலல்.

—குமரகுருபரர்.

## கக. அடக்குமுறைக் கேடு

உலகின்கண் ஒவ்வொருவனும் தன்தன் விருப்பப் படி நடந்து கொள்வது பிறப்புரிமை யாகும். பிறர்க்கு மனவெறுப்பும் தீங்கும் உண்டாக்காத எதனையும் செய்வ தற்கு ஒவ்வொருவனுக்கும் உரிமையுண்டு. நாட்டமை திக்கு இடர்சாராவண்ணம் எவனுக்கும் தன் விருப்பப்படி ஒரு பொருளைப்பற்றித் தன் மனத்தில் எண்ணிப் பார்க்க வும், அதனால் ஏற்பட்ட தன் கருத்துக்களை வாய்ப்பேச்சி னால் பலரறிய வெளியிடவும் உரிமையுண்டு. எவனுக்குந் தீங் கிழைக்காத ஒருவனை இன்னொருவன் அடிமைப்படுத்துத லும், அவன் எண்ணங்களையும் செயல்களையும் அடக்கு முறை செய்தலும் அவனுடைய சொத்துக்களைப் பறிப் பதுபோலவே அவனுடைய உரிமைக்குக் கேடு விளைப்ப தாகும்.

மக்களை ஆட்சிசெய்யும் அரசரும், அவர்கள் மேல் தலைமையேற்குங் குலமக்களும், மற்றுமுள்ள செல்வர்க ளும் தம் வல்லமையையும் செல்வாக்கையும் பொறுமை யோடும் நேர்மையோடும் செலுத்தவேண்டும். அவர்கள் அதற்கு மாறுபடுவாராயின் பேரச்சப் பெருந் தீங்குகள் விளையும். ஏனெனில் மக்கள் நன்மைக்கும் நேர்மைக்குங் கட்டுப்படுவார்களே தவிர, வன்மைக்கும் வலுக்கட்டாயத் துக்கும் அடங்கமாட்டார்கள்; மேலும் அவர்கள் சின மூண்டு செய்யாதனவெல்லாஞ் செய்வார்கள்.

### 1. உழவர் உருப்பட்டது

ஐந்தாறு நூற்றாண்டுகளுக்குமுன் பிரான்சில் ஒரு தடவை பெருங்கலகமுங் கலக்கமு முண்டாயின. அஃதெவ்வாறெனில் அந்நாட்டில்மக்களெல்லோரும் உழவர்களுக்கு இல்லாத இடுக்கண் களெல்லாம் இழைத்து இகழ்ச்சியுங்கொடுத்துப் படாதபாடுபடுத்தி னர். அம்மேன்மக்கள், உழவர் தமக்கு அடிமைகளென்றும், அவர்க ளையும் அவர்களின் சொத்துக்களையும் தாங்கள் என்னவேண்டுமா னாலும் செய்யலாம் என்ற கொள்கையும் கொண்டிருந்தனர். அவ் வுழவர்களுக்கு அரசன்சார்பும் அற்றுப்போயிற்று. ஏனெனில் அரசனும் அவர்களால் சிறையில் வைக்கப்பட்டான்.

இதனால் நாடுமுழுவதிலுமே குழப்பமுண்டாய்விட்டது. அந்நாட்டுழவர்கள் எல்லோரும் மூர்க்கங்கொண்டு தங்கள் கையிலுள்ள அரிவாள், கோடரி, மண்வெட்டிமுதலிய கருவிகளின் உதவியினால் அங்கங்கே கும்பல் கும்பலாகக் கூடிக்கொண்டு, எல்லோரையும் வேரோடு களைந்துவிடவேண்டுமென்றே தீர்மானித்துவிட்டனர்.

அதனால் விளைந்த கொடுந்தீமைகள் பற்பல :—மாட மாளிகைகள் மண்ணோடு மண்ணாயின; அரண்மனைகள் முற்றுகை செய்யப்பட்டன; பெருமக்களின் பெண்டிரும் குழந்தைகளும் இழிவுபட்டு உயிரும் இழந்தனர்; இன்னும் அந்நாட்டில் அச்செவ்வியில்நடந்த அநீதிகளை யெல்லாம் எடுத்துச்சொல்வது மானக்கேடும் மனமொவ்வாததுமாகும்.

அந்நாட்டில் உழவர் உற்றதுன்பங்கள் அடிமைத்தன்மைக்கும் அப்பாற்பட்டன. அமருக்குப்பின் அமைதியேற்பட வேண்டுமல்லவா? சிலநாட்களில் உழவர்களின் ஊறுபாடுகள் நீங்கிப்பெருமக்களுடன் ஒருமைகொண்டு வாழ்ந்துவந்தனர்.

## 2. அடிமை அந்தகன்

பதினெட்டாவது நூற்றாண்டுக்குமுன் அடிமை வாணிபம் மக்களெல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டு நடந்தேறிவந்தது. அக்காலத்தில் அடிமைகளை ஏற்றுமதி இறக்குமதியுஞ் செய்துவந்தார்கள். அதற்குப் பிறகுதான், “மக்கள் விருப்பத்துக்கு மாறாக அவர்களை அடிமைகளாக்குவது தகுமா?” என்கிற கேள்வி பிரிட்டன் நாட்டிற் பிறந்தது. இச் செவ்வியில் கேம்பிரிட்ஜ கலாசாலையொன்றில் கிளார்க்சன்என்ற மாணவனொருவனிருந்தான். அவன் அப்பொருள்பற்றி ஆராய்ந்து நீண்டதொரு கட்டுரை யெழுதி வெளிப்படுத்தினான். அதன்சிறப்புநோக்கிப்பல்கலைக்கழகத்தாரும் அவனுக்குப் பெரும்பரிசு அளித்தனர். அடிமைத்தன்மை யொழிவதற்குக் கட்டுரைமாத்திரம்போதுமா? அதற்காக உழைப்பெடுத்துக் கொண்டாலன்றோ அஃது ஒழிந்து உலகமும் ஒழுங்குபடும்.

அக்காலத்தில் அடிமைவாணிபம் பிரிட்டனில் மிகுதியாகத் தலைகாட்டிக் கொண்டிருந்தது. முதன்முதல் தன்னாட்டு அடிமை வாணிபத்தை அறவொழிக்கக்கிளார்க்சன் கங்கணம்கட்டிக்கொண்டான். அவன் இலண்டன்நகர் சென்று ஆங்கு, அடிமை வாணிப ஒழிப்புக்கழகம் என்ற பெயருடன் ஓர் அவை ஏற்படுத்தி, அதன் மூலம் அவ்வறவினை செய்யத்தொடங்கினான். அக்கழகத்தார் அங்கங்கே மக்கட் கூட்டங்கள்கூட்டிப் பேசி, அதன் இழிவுகளை யெல்லாம் அவர்கட்குத் தெள்ளத்தெளிய எடுத்துக்காட்டி வந்தார்கள். அக்கழகம் அந்நற்பணியில் ஐந்தாறாண்டுகள் உழைத்து வந்தது.

கடைசியாக 1807 ஆம் ஆண்டில், பிரிட்டன்நாட்டுப் பாராளு மன்றத்தில் அடிமை வாணிப ஒழிப்புக்கென்று ஒரு சட்டம் நிறை வேற்றப்பட்டது. அதுமுதல் சில்லாண்டுகளிலேயே ஆங்கிலநாடு களில் அடிமை வாணிபம் என்பது ஒழிந்தேபோயிற்று. ஆங்கில நாட்டைப் பின்பற்றி அனைத்து நாடுகளிலும் அவ் வாணிபம் இப் போது இல்லாது போயிற்றென்னலாம். மக்களிடம் காணப்பட்டு வந்த இத்தீவினை இருந்தவிடந் தெரியாமலே ஒழிந்து போனதற்கு மூலகாரணம் ஒருபெருமகனே! கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழக மாண வனுகிய கிளார்க்சனை எந்நாளும் உலகம் ஏத்திப் போற்றும்.

க. வலியார்முன் தன்னை நினைக்க தான் தன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து.

உ. என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம்.

ந. கண்ணுக் கணிகலம் கண்ணேட்டம் அஃதின்
புண்ணென் றுணரப் படும். [நேல்

ச. அல்லற்பட் டாற்ருது அழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.

ரு. தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப்படும்.

சு. தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயா தடியுறைந் தற்று.

—திருவள்ளுவர்.

## உ௦. கடமை ஆற்றுதல்

வீட்டு வேலைக்கென்றோ, வயல் வேலைக்கென்றோ, தொழிற்சாலை வேலைக்கென்றோ, தன் உடல் நலத்துக் கென்றோ ஒருவன் இன்னொருவனை ஊதியத்துக்கென்று அமர்த்திக் கொண்டால், வேலைக்கு உடன்பட்டவன் அதனைச் செம்மைபெறச் செய்து முடிப்பானென்று அவன் நம்பி விடுகின்றான். அத்தொழிலாளி அவ்வேலையை அவ்வாறு செவ்வையாகச் செய்துமுடிக்காமல் ஊதியத்தைக் குறைவின்றிப் பெற்றுக்கொள்வானானால் அவ்வூதியம் அவன் உழைப்பெடுத்துப் பெற்றதாகாது. மேலும், அத் தொழிலாளி தன்னை அமர்த்திக்கொண்டவனை வஞ்சித்தவனாகின்றான். இஃதேயன்றி ஒருவன் எட்டுமணி நேர வேலைக்கு இவ்வளவு கூலியென்று ஒத்துக்கொண்டு வேலையின்மேல் ஒருமணி நேரம் சோம்பியிருந்து முழுக்கூலியும் பெற்றுக்கொள்வானானால், அவன் அவ்வரைக்கால்வாசிப் பணத்தைத் திருடிக்கொண்டவனாகின்றான். ஒருவன் நல்ல வேலைக்காரன் என்று பிறரால் மதிக்கப்பட வேண்டுமானால், அவன் தனக்குக் கொடுக்கப்பட்ட வேலையைச் செம்மைப் படச் செய்து முடித்துத் தீரவேண்டும்.

இன்னும் நாம் ஒரு கூட்டத்தாருக்கோ, பொதுவாக நாட்டாருக்கோ இறுக்கவேண்டிய கடமைகளும் உண்டு. அவைகளில் நாம் நம்முடைய பொறுப்புக்களை ஏற்றுக் கொண்டு அக்கடமைகளை யெல்லாம் உண்மைக்கு மாறுபடாமல் பொதுநன்மையையே நோக்கமாக எண்ணிச், செய்துமுடிக்கவேண்டும். அரசியல் நடாத்துவோர் அலுவல்களுக்கு ஆட்களை அமர்த்தும்போது அவ்வாட்களின் செய்திறனேயன்றி மற்றெதனையும் மனத்தின்கண் நோக்கமாக வைத்துக்கொள்ளக்கூடாது. நீதியாளர்கள் பொது நன்மையையே கோரி, பயம்பற்றில்லாமல் நடுநிலையையே பாராட்டவேண்டும். நம் நண்பர் எவரைப்பற்றியாவது நம்முடைய உட்கோளை யறியவேண்டினால், நாம் அவருடைய நோக்கத்துக்கு யாதொரு பழுதுமுண்டாகாதபடி

நமது மனச்சான்றுக்கு ஒத்த கருத்தையே அவருக்கும் எடுத்துச் சொல்லவேண்டும்.

## 1. ஜியார்ஜ் வாஷிங்டன்

ஜியார்ஜ் வாஷிங்டன் ஐக்கிய நாடுகளின் தலைமை ஏற்றிருந்த போது, அவனுக்கு அணுக்க நண்பன் ஒருவன் இருந்தான். அவன் வாஷிங்டனுக்கு நெருங்கிய நண்பனாக இருந்தபோதிலும், அவருடைய அரசியல் அலுவல்களில் தலையிட்டுக் கொள்வதில்லை. அவ்விருவர் நட்பும் வீட்டுடனேயே நின்றுவிடும். அவன் நல்ல தன்மையனாக இருந்தபோதிலும், அலுவற் பொறுப்புக்களைத் தாங்கி நடத்துவதில் அவ்வளவு திறமை வாய்ந்தவன் அல்லன்.

இப்படியிருக்கையில் அரசியல் துறையில் முதன்மைப்பட்ட ஓர் அலுவலுக்கு ஓராள் வேண்டியதாக இருந்தது. அவ்விடத்தைப் பெறத் தலைவருடைய வீட்டு நண்பர் அரசியலாருக்கு ஒரு விண்ணப்பம் அனுப்பிவைத்திருந்தார். அவ் வேலைக்கென்றே மற்றொரு விண்ணப்பமும் அலுவலகத்துக்கு வந்திருந்தது. அதற்குரியார் யாரென்றால், வாஷிங்டனுக்கு எதிர்க் கட்சியிற் சேர்ந்தவர். அவர் சிற்சில செவ்விகளில் தலைவருக்கு நேருக்கு நேராகச் சில ஊறுபாடுகளும் செய்துள்ளார். ஆகவே, அவ்வலுவல் தலைவருடைய வீட்டு நண்பருக்கே கிடைக்குமென்று யாவரும் எதிர்பார்த்தனர். ஆனால், அதற்குமாறாக அவ்வலுவல் மற்ற விண்ணப்பத்தாருக்கே அளிக்கப்பட்டது.

அரசியல் நண்பரொருவர் அதனைப்பற்றிக் கேட்டபோது, வாஷிங்டன் சொன்னதாவது:—'ஐயா நீர் சொல்வது சரியே; நண்பருக்கு உதவிசெய்ய வேண்டியதுதான். அவ்வலுவல் என்னுடைய வீட்டலுவலன்று, அரசியலலுவல். என் நண்பர் நற்குண நற்செய்கை உடையவரே, ஆனால் அவருக்கு அரசியல் துறையில் அவ்வளவு திறமை போதாது. மற்றவரோ எனக் கெதிரியாயினும் அவ்வேலைக்கு மிகவும் தகுதிவாய்ந்தவர்; மிக்க திறமைசாலி. ஆதலால் அவரை வேலைக்கு அமர்த்தியவர் தலைவர் வாஷிங்டன் என்பவரே. ஜியார்ஜ் வாஷிங்டன் அன்று," என்பதாம்.

## 2. நீதியாளர் காஸ்கோனி

இங்கிலாந்து நாட்டினை ஆண்டுவந்த நான்காம் ஹென்ரியின் முதல்மகன் (உவேல்ஸ் இளவரசர்) நல்ல படிப்பாளியன்றியும் நீதி முறைகளும் நன்கு அறிந்தவர். ஆனாலும் அவர் சிறிது வெகுளி கொண்டவராக இருந்தார். ஒரு தடவை அவருடைய நண்பனொரு

வன் குற்றவாளியாக்கப்பட்டு நீதியாளர் காஸ்கோனியால் தண்டிக் கப்பட்டான். அஃதறிந்த இளவரசர் சினமூண்டு, நீதி மன்றத் துக்கு விரைந்துவந்து சட்டென மேடையின்மீதேறி அந்நீதி யாளரைக் கையாலறைந்தார். உடனே காஸ்கோனி அவரைக் குற்றவாளியாக்கித் தண்டித்துவிட்டார். இளவரசர் அறிவாளி யாதலால், தம் தவறுக்குக் கழிவிரக்கங்கொண்டு சினமாறித் தண்டனைக்குட்பட்டார்.

இதனையறிந்த மோசர் சொன்னதைக் கேளுங்கள்: "நீதி செலுத்துவதில் உளத்திட்பங்கொண்ட ஒரு நீதியாளர் எனக் கிருப்பதை நினைக்க என் மனம் மகிழ்ச்சியடைகின்றது; நாட்டுச் சட்டத்துக்குட்பட்டு நடந்துகொண்ட இளவரசரைப்பற்றி என் மனம் மேன்மேல் மகிழ்கின்றது," என்றார்.

## 3. நேர்மைத் தேர்வுரிமையாளர்

1807ஆம் ஆண்டில் காத்துலாந்தில் பாராளுமன்றத் தேர்தல் நடந்தது. அந்நாட்டுக் கோட்டமொன்றில் அப்போது இரண்டு மக்கள் தேர்தலுக்கு நின்றனர். அவர்களில் ஒருவருக்காக ஒரு கூட்டத்தார் உதவிசெய்ய எண்ணங்கொண்டனர். அவருக்கு தேர்வுச சீட்டொன்று குறைவாக இருந்தது. அதற்காகத் தேர்வுரிமையாளனாகிய ஒரு கம்மியனை அக்கூட்டத்தார் அதனை யளிக்க வேண்டிக் கொண்டனர். அக்கம்மியன் தேர்தலுக்கு நின்ற மற்றவனுக்கே தன்னுரிமையை யளிக்க எண்ணங்கொண் டிருந்தான். அவன் மனநோக்கத்தை மாற்ற அக்கூட்டத்தார் நூற்றுக்கணக்கான பொற்காசு (பவுன்) கொடுப்பதாக வாக்களித் தனர். அவர்களைப் பார்த்து அக்கம்மியன், "ஐயன்மீர் அடியே னுடைய தேர்தலுரிமையை எனக்காக அன்று, என்னுடைய நாட்டு நன்மைக்காக அன்றோ பயன்படுத்த வேண்டும்? என் மனச்சான்றுக்கு மாறாக யான் ஒன்றுஞ் செய்ய முடியாது," என்று சொல்லி அவர்தம் வேண்டுகோளை உறுதியாக மறுத்து விட்டான். அக்கூட்டத்தார் கொடுக்கக்கருதிய தொகையோ அவனுடைய ஆயுள் முழுமையும், அதற்கு மேலும் அவன் குடும்பத் துக்குப் போதுமானதொன்று. ஆயினும் நேர்மை கருதி மறுத்து விட்டான்.

க. நீதியளிக்கும்போது ஓரங்காட்டாதே; தாழ்ந் தோனுக்கும் உயர்ந்தோனுக்கும் நடுநிலையாக இரு; மனித னுடைய முகம் பார்த்து அச்சங்கொள்ளாதே; நீதியளிப்பு ஆண்டவனுடையது.

—விவில்லியம்.

உ. தீமையாளனை நீதிமான் என்று சொல்லு கின்றவன் மக்களின் வசவைப் பெறுகின்றான்; மேலும் உலகம் அவனைக் காண நடுங்கும்.

—பழமொழிகள்.

ங. உண்மையுடையவனே அறிவாளி; அவனுக்கு எப்போதும் அச்சமென்பதில்லை; வீட்டிலும் வெளியிலும் அவனுக்கு எதுவும் கைகூடி வரும்.

—சர் வால்ட்டர் ராலே.

ச. அறஞ்செய விரும்பு.

—ஔவையார்.

ரு. சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு.

சு. அறத்தினூஉங்கு ஆக்கமு மில்லை, அதனை
மறத்தலி னூங்குஇல்லை கேடு.

எ. ஒல்லும் வகையால் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாம் செயல்.

—திருவள்ளுவர்.

அ. நடுநின்ற நல் நெஞ்சினோர் வடு அஞ்சி வாய்
மொழிந்து தமவும் பிறவும் ஒப்ப நாடுக.

—உருத்திரங்கண்ணனார்.

---

## ௨௧. கடன் தீர்த்தல்

வேலைபார்த்த ஒருவனுக்கு உடனே கூலி கொடாமல் வேலை வாங்கிக்கொள்பவனோ, அல்லது ஒரு பொருளை வாங்கிக்கொள்பவனோ கடனாளியாகின்றான்; வேலை செய்பவனோ அல்லது பொருளைக் கொடுப்பவனோ கடன் கொடுத்தவனாகின்றான்.

வாணிபத் துறையில் மக்கள் அவரவர் நலங்கோரி ஒருவர்க்கொருவர் கடனாளிகளாவது இன்றியமையாத தாக நேரிடுகின்றது. இல்லறத் துறையிலும் மக்கள் சில வேளைகளில் ஒருவர்க்கொருவர் கடன் கொடுப்பதோ, வாங்குவதோ இன்றியமையாததாகின்றது.

கடன் கொடுப்பவன் ஓர் இடையூறுமின்றிக் கடன் கொடுக்கக் கூடியபோதும், கடன் படுபவன் அக்கடனைக் குறித்த காலம் தவறாமல் திருப்பிக்கொடுக்க வல்லவனாக இருக்கும்போதும், கடன் கொடுப்பதும் வாங்குவதும் இருதிறத்தாருக்கும் நலனே.

ஆனால் வாங்கிய கடனை எக்காலத்தும் திருப்பிக் கொடுக்கச் சிறிதும் முடியாத நிலைமையில் இருப்பவன் ஒருவன், எவனிடத்தும் கடன் வாங்குவது மிகத் தவறே. இவ்வாறு செய்பவன் இன்னொருவன் பொருளைத் தனது தனி நன்மைக்கென்றே பயன்படுத்துபவனாகின்றான். இவன் பிறர் உழைப்பினால் தான் பிழைப்பவனாகின்றான். இஃது உண்மையாகவே கொள்ளையினும் மிக இழிவான கொள்ளையாகின்றது.

உண்மையாளன் தனக்கு இன்றியமையாதபோதுங் கூடக் கடனை இறுக்க முற்றும் வல்லமையுடையனாகின்ற போதுதான் கடன் வாங்குவான். அவன் வாங்கிய கடனை எப்போதும் மறவான். எதிர்பாராவண்ணம் கடன் இறுக்க ஏதாவதோர் இடையூறு நேரின், அதனால் இவன் வருந்தி ஒரு காசுங் குறையாமல் அக்கடன் இறுக்கும் வரையில் தன்னாலான முயற்சிகளெல்லாஞ் செய்யத் தவறான்.

## 1. ஒரு ஜெர்மனிச் சிற்றரசன்

நூற்றாண்டுகட்கு முன் ஜெர்மனி நாட்டில் ஜியார்ஜ் லூயி என்னும் ஒரு சிற்றரசனிருந்தான்; அவன் எக்காரணத்தினாலோ ஒரு பெருங் கடனாளியாய்விட்டான். அவன் பண்டாரத்திலும் பணமில்லை. குடிகள்மீது புதுவரிபோட்டு அக்கடனை எளிதில் தீர்த்துவிடலாமென்று உடனாளிகள் அவனுக்குச் சூழ்ச்சி கூறினர். மனச்சான்றில்லாத ஒரு மன்னன் இவ்வாறே செய்ய முற்பட்டிருப்பான். ஆனால் இச் சிற்றரசனோ அவ்வாறு செய்ய மனமொவ்வாதவனானான். ஏனெனில் அக்கடன் குடிகளால் ஏற்பட்டதன்றென்று உணர்ந்தான். அதனால் அதனைத் தீர்க்க அவர்கள்மீது புது வரிகளைச் சுமத்த இசையாதவனானான்.

அவன் நீள நினைந்து அரண்மனைக் காவற்காரர்கள், வண்டி, குதிரைகள், வேலைக்காரர்கள், மெய்க்காப்பாளர் முதலிய தளவாடங்களை அறவே யொழித்துத் தன்னந்தனியே ஜெனீவா நகர் சென்று, பொதுமக்கள் வாழ்க்கை நடத்திக்கொண்டுவந்து, அதனால் மிகுதியாகுந் தொகையை அவ்வப்போது கடனுக்குச் செலுத்திவருமாறு அரசிய லுடனாளிகளிடம் ஏற்பாடு செய்து வைத்தான். சில நாட்களிலேயே அக்கடன் முழுதுங் கழிந்து போயிற்று. பிறகு சிற்றரசன் தன்னகர் திரும்பி முன்போல அரச வாழ்க்கை வாழ்ந்துவந்தான்.

தம் சிற்றரசனுடைய இச் சிறந்த நடவடிக்கை கண்டு குடிமக்களெல்லாம் அவரிடம் அன்புபூண்டு உயர்வாழ்க்கையில் அமர்த்தித் தங்கள் மன்னனை உலகம் மெச்சச் செய்தனர்.

## 2. நெறிதவறுக் கடனாளி டேன்ஹாம்

வாணிகர் முதலியார் சிலகாலத்தில் பெருங் கடன்பட்டு முழுக் கடனையும் இறுக்கமுடியாதவர்களாகின்றார்கள். எனினும், உண்மையுள்ள கடனாளிகள் கடன்களின் அளவுக்குத் தக்கவாறு தங்கள் இருப்பை விகிதப்படி பங்கிட்டுக்கொடுத்து கடன்கொடுத்தவர்கள் மனநிறைவடையும்படி செய்கின்றார்கள். இஃதேயன்றி மனச் சான்றுடைய கடனாளிகள் அரசியற் சட்டப்படி மிகுதிக் கடன் கொடுக்கக் கட்டுப்பட்டவர்கள் அல்லராயினும் கடன் முழுதுங் கொடுபட்டாலன்றி மனநிறைவு அடையமாட்டார்கள். இத்தகையோர் பலவழிகளிலும் முயன்று, பொருள் சேர்த்து முன் கொடுபடாமல் விட்டுப்போன கடன் தொகைகளை முற்றுங் கொடுத்து மேன்மை பெறுகின்றனர்.

டென்காம் என்பவர் பிரிஸ்ட்டல் நகரத்துப் பெரு வணிகர். இவர் பற்பல செல்வர்களிடத்துக் கடன் வாங்கியிருந்தார். வாணிபத்துறையிற் பலவகை இடையூறுகள் ஏற்பட்டு அக்கடன் களைக் கொடுக்க முடியாதவரானார். ஆகவே, அவர் தம் கையி லிருந்த பொருளை, விகிதப்படி அவரவர்களுக்குக் கொடுத்து விட்டுக் கடன் விடுதலைபெற்று அமெரிக்கா சென்றார். ஆங்கு அவர் தமது விடாமுயற்சியின் பயனால் சில்லாண்டுகளுக்குள் ளேயே பெருஞ் செல்வரானார். பிறகு அவர் பிரிஸ்டல் நகர் திரும்பி முன் கடன் கொடுத்த செல்வர்களுக்கெல்லாம் ஒரு விருந்தளித்தார். விருந்தேயன்றி வேறெதனையும் எதிர்பாராத அச்செல்வர்கள் வியப்படையும்படி தமக்குச் சேரவேண்டிய மிகுதித் தொகைக்கு வட்டியுடன் ஒவ்வோர் உண்டியல், தட்டுமூடி களுக்குள் இருக்கக்கண்டு டென்ஹாமின் நெறிதவறா இயல்பினை மெய்ச்சி மகிழ்ந்து அவரிடம் விடைபெற்றுச் சென்றனர்.

## 3. வெல்லெஸ்லிப் பெருந்தகையார்

வெல்லெஸ்லிப் பெருந்தகையாரின் தந்தையார் பல்லாயிரக் கணக்கான பவுன் குடும்பக் கடனாக வைத்துவிட்டு விண்ணடைந் தார். அரசியல் சட்டத்திரிபு நுணுக்கத்தால் அக்கடனுக்கு வெல்லெஸ்லி பொறுப்பாளியாகவில்லை. ஆயினும் அவர் மனச் சான்றுக் குட்பட்டு அக்கடன் கொடுபடாதவரையிற் குடும்பச் சொத்தின் பயனைத் துய்க்க மனங்கொள்ளாதவரானார். அவர் மிக்க சிக்கன வாழ்க்கை நடத்திக் கடன் கொடுபடத் தக்க தொகை மிச்சப்படுத்திக் கடன் கொடுத்த முதலாளிகள் ஒவ்வொருவருக்கும் ஒருகாசும் விடாமல் கடன் தீர்த்துக்கொண்டு வந்தார்.

ஒருநாள் ஒருவன் வெல்லெஸ்லி தந்தையார் நூற்றைம்பது பவுனுக்கு எழுதிக்கொடுத்த ஒருபத்திரத்தைஇவரிடம்கொடுத்துத் தொகையைத் தரும்படி கேட்டான். இவர் அப்பத்திரத்தைத் தேர்வு செய்து, அஃது அவனுக்கு முழுதும் உரியதன்றென்றும், பவுன் ஐம்பது கடனுக்காகவே ஓர் ஏழைக் கிழவனால் இவனுக்குச் சாட்டப்பட்டதென்றும் கண்டுகொண்டார். ஆகவே, அவனுக்குச் சேரவேண்டிய தொகையை வட்டியுடன் கொடுத்துவிட்டுப் பத்திரத்தைத் தாம் வாங்கி வைத்துக்கொண்டார். பிறகு அவர் அக்கிழவனைக் கண்டுபிடித்து அவனுக்குப் பத்திரத்தின் முழுத் தொகையையும் வட்டியுடன் கொடுத்துவிட்டார்.

இவ்வாறு கடன் முழுதும் கொடுபட்டபிறகே வெல்லெஸ்லிப் பெருந்தகையார் தந்தை சொத்தைத் தமதாக்கிக்கொண்டார்.

க. எவனுக்கும் கடன்பட்டிராதே; அன்புள்ளவனு யிரு.

—பவுல் உபதேசியார்.

உ. அளவறிந்து வாழாதான் வாழ்க்கை குளவளாக் கோடின்றி நீர்நிறைந் தற்று.

—வள்ளுவர்.

ந. ஆன முதலில் அதிகஞ் செலவானால்
மானமழிந்து மதிகெட்டுப்—போனதிசை
யெல்லார்க்குங் கள்ளனாய் ஏழ்பிறப்புந் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனாம் நாடு.

—ஒளவையார்.

## ௨௨. தீயவழியில் நன்மை தேடாமை

ஒருவன் பொருளீட்டுதலையும், உயர்நிலை பெறுதலையும் இன்னும் வெவ்வேறு வழிகளில் நன்மையடைதலையும் நாட்டு நீதிச்சட்டத்துக்கு உட்படாதபடி புல்லிய வழிகளிற் பெறலாம். ஆனால் அவ்வழிகள் மக்கள் மனத்துக்குத் துன்பம் செய்வனவாகவும் அடாதனவாகவும் ஆகின்றன. பிறர் தன்னிடம் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டுமென்று நினைக்கின்றவனும், தன்மரியாதை யுடையவனும் பிறரிடம் தானும் அவ்விதமே நடந்துகொள்ளும் வழிகளை யறியாமல் இரான். அத்தகையான் தீயவழிகளிற் பொருளீட்ட மனங் கொள்ளாதவனாவான்.

### தாதன்

பிராஞ்சிய நாட்டில் ஒருத்தி, ஒருவனைக் கல்விகற்கச் செய்து ஒரு செல்வனிடம் அலுவலில் அமரச் செய்தாள். அங்கு அவன் உண்மையானவனாகவும், திறமைசாலியாகவும் நடந்துகொண்டான். அதன்பின, அச்செல்வன் அவனைத் தன் குடும்பவேலைகளையெல்லாம் பார்க்கும்படி வைத்துக்கொண்டான். அப்போது அச்செல்வனுடைய கன்னித் தங்கையானவள் அவன் நற்குண நற்செய்கைகளைக் கண்டு அவனிடம் அன்புகொண்டாள். நாளேற வேற அவள் அன்பு காதலாக மாறியது. அவள் தன்னை மணஞ்செய்து கொள்ளுமாறு தூண்டினாள்.

தாதன் தன்னலத்தையே கருதி மறைவில் அவளை மணந்திருப்பானாயின், அவன் ஒரு பெருஞ் செல்வனாகலாம். ஆனால், அதற்கு அவனுடைய மனச்சான்று ஒப்பவில்லை; ஏனெனில், அத்திருமணத்தினால் அக்குடும்பத்துக்கு இழிவு ஏற்பட்டுவிடுமே என அச்சங்கொண்டான். நீளநினைந்து அசசெய்தியைச் சிறிதும் மறைக்காமல் உள்ளது உள்ளபடியே தன் தலைவரிடம் தெரிவித்துவிட்டான்.

இவன் உண்மைநிலையையும், தன்னலம் நாடாத பெருங்குணத்தையும் கண்ட அப்பெருமகன் மிக மகிழ்ச்சிகொண்டான். பிறகு அப்பெருமகன் அவனைத் தன்னிலைமைக்குக் கொண்டுவர எண்ணி, அவனை ஒரு பெரிய அரசியல் அலுவலில் அமர்த்தி, அவன் மேன்மேல் உயர்நிலையடைய வேண்டியவைகளையெல்லாம் செய்து வந்தான்.

தாதன் தன் திறமையினலும், விடாமுயற்சியினலும், உண்மைத் தன்மையினலும் விரைவிலேயே அரசியலில் ஓர் உயர் நிலையை அடைந்துவிட்டான். அடையவே, அப்பெருமகன் யாவரும் பெருமகிழ்வடையத் தன் தங்கையாகிய அக் கன்னிகையை அவனுக்குக் கலியாணஞ் செய்துகொடுத்து மேலும் சிறப்பித்தான்.

க. உண்மையே உயர்நிலை தரும்.

ஒரு பெரியார்

உ. ஒழுக்கமும் வாய்மையும் நாணும்இம் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார்.

ரு. அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர்.

ச. சலத்தாற் பொருள்செய் தேமார்த்தல் பசுமண்
கலத்துள்நீர் பெய்துஇரீஇ அற்று.

வள்ளுவர்

ரு. நன்மை கடைப்பிடி.

ஒளவையார்

---

## உ௩. உண்மைப் பண்டமாற்றல்

பண்டமாற்றலினும், பொருள் கொடுக்கல் வாங்கல் களினும், மக்கள் ஒருவரையொருவர் வஞ்சிப்பதும், ஒருவருக்கொருவர் மிஞ்சிப்போதலும் கூடாது. கடைக்காரர்கள் எடை குண்டுகளை ஒரு குன்றிமணியளவு எடை குறையாமலும், அளவுகோல்களை ஒரு நூலளவு நீளம் குறையாமலும், மரக்கால் படிகளை ஓர் எள்ளளவுங் குறையாமலும் வைத்துக்கொண்டிருக்கவேண்டும். பொருள்களின் உண்மைத் தரத்தை மறைத்துச் சொல்லக்கூடாது. பொருள்களின் தரத்தின் படியே விலைசொல்ல வேண்டும்; மிகையாக வாங்கக்கூடாது. பொருள் வாங்குபவரும் கடைக்காரன் தவறுக அதிகப்படியான பொருள் கொடுத்துவிட்டாலும், அல்லது விலைமுடித்த பொருளுக்கு மேற்பட்ட தாமுடைய பொருளைக் கொடுத்துவிட்டாலும் வாங்குபவன் அத்தவற்றைக் கடைக்காரனுக்குத் தெரிவித்துவிடவேண்டும். இவ்வாறான தவறுகள் ஏற்படின் அவற்றை விற்பவன் வாங்குபவன் மீதும், வாங்குபவன் விற்பவன் மீதும் ஏற்றிக்கூறி மாறான மனநிலை அடைகின்றனர். இது மிகத் தவறே.

வஞ்சிக்கின்றவன் நல்வாழ்வு வாழ்வதில்லை. சட்டப்படி அவன் தண்டனை அடையாவிட்டாலும், அக்கம் பக்கத்தாரால் அவன் தண்டனை அடைகின்றான். எவ்வாறெனில் வஞ்சிக்கப்பட்டவர்கள் அவனிடம் பிறகு அணுகவேமாட்டார்கள். மேலும் தான் அவர்களால் புறக்கணிக்கப்பட்டும் இகழப்பட்டும்போய்க் கடைசியாக 'உண்மையே வாழ்க்கையில் உயர்நிலைதரும்,' என்பதை யுணர்ந்து கொள்கின்றான்.

### 1. உண்மையுள்ள பையன்

ஒரு நாட்டுப்புறப் பெரிய மனிதன் தன் மகனை அடுத்த நகரில் உள்ள ஓர் அறுவை வணிகரிடம் வேலைக்கு இருத்தினன். அச் சிறுவன் அங்குத் தன் வேலையை ஒழுங்குபடச் செய்துவந்தான்.

ஒருநாள் ஒருத்தி அக்கடைக்கு வந்து பட்டுத்துணி வாங்கினாள். பையன் அதனை மடிக்கும்போது அது சிறிது பழுதுபட்டிருப்பதைக் கண்டு, அதனை அவளுக்கு அறிவிக்க, அவள் அதனை வாங்காமலே போய்விட்டாள். இதனை உள்ளிருந்து கேட்டுக்கொண்டிருந்த முதலாளி சினங்கொண்டு வைதுவிட்டு, உடனே அவனை அழைத்துக்கொண்டு போகுமாறு அவன் தந்தைக்குத் தெரிவித்துவிட்டான்.

பையனின் தந்தை உடனே வந்து முதலாளியைக் காண, அவன் நிகழ்ந்ததை அவனுக்குரைத்து "இத்துறைக்கு இவன் உதவான்," என்றான். அதற்குப் பையனின் தந்தை, 'உண்மையை உரைப்பது குற்றமானால், பிள்ளை உம்மிடமிருப்பது தகாது; இனி அவனை இங்கு ஒருநாளும் தங்கவிடேன்,' என்று சொல்லிவிட்டு, மகனைக் கூட்டிக்கொண்டு தன்னுடைய ஊருக்குச் சென்றான்.

## 2. வேடிமருந்துப் பயிர்

நூறாண்டுகளுக்குமுன் வட அமெரிக்காவிலிருந்த சிவப்பிந்தியர்கள் ஐரோப்பியருடைய பழக்கவழக்கங்களையும் நாகரிகத்தையும் அறியாத சீர்திருத்தக் குறைவுடையவர்களாக இருந்தார்கள். அக் காலத்தில் ஐரோப்பிய வணிகனொருவன் துப்பாக்கிகளையும் வெடி மருந்தையும் உடன்கொண்டு வட அமெரிக்காவுக்குச் சென்று அவைகளை எவ்வாறு பயன்படுத்துவதென்று அவர்களுக்குக் கற்றுக் கொடுக்க, அவன் கொண்டுவந்த சரக்குகளையெல்லாம் அவர்கள் வாங்கிக்கொண்டு தங்களிடமிருந்த மெலலிய விலங்குத் தோல்களையும் மயிரையும் கொடுத்தார்கள். இஃது ஒரு வாணிபமாகப் பலகாலம் நடந்தன.

அதற்குச் சில ஆண்டுகளுக்குப் பின் பிரான்சிய வணிகன் ஒருவன் துப்பாக்கி மருந்துகளுடன் பண்டமாற்றுச் செய்ய அவ்விந்தியர்களிருக்குமிடம் வந்தான். அச்சரக்குகள் அப்போது அவர்களிடம் ஏராளமாகக் கிடக்கவே பிரான்சியனுக்குத் தன் பொருட்களை விற்பனை செய்ய வசதியில்லாமற் போயிற்று.

இதற்குமேல் அப் பிரான்சியன் அம்மக்களை ஏமாற்ற வெடிமருந்து ஒரு வித்து என்றும், அதனை மண்ணிற் போட்டுப் பயிர் செய்தால் சோளம்போன்ற பொருள் விளையுமென்று சொல்லியும் அவர்களை மயக்கிவிட்டான். அறியாமையுடைய அம்மக்கள் அவ் வெடிமருந்தை வாங்கி நிலங்களில் விதைத்தனர். அப் பிரான்சியன் சரக்குகளையெல்லாம் விற்றுவிட்டு விரைவில் வீடுபோய்ச் சேர்ந்தான்.

இந்தியர்கள் அந்நிலங்களுக்கு நீர்பாய்ச்சிக் கவலையுடன் கண்காணித்துவந்தனர். பலநாட்கள் சென்றும் அந்நிலங்களில் முளைகளே இளம்பவில்லை. அதற்குமேல் அம்மக்கள் தாங்கள் ஏமாற்றமடைந்து போய்விட்டதாக எண்ணி மிக வருத்தத்துக் குள்ளாயினர்.

இப்படியிருக்கப் பலதிங்கள் கழித்து முதல் ஏமாற்றிய பிரான்சியன் தன் பங்காளி ஒருவனைப் பலவித சரக்குகளுடன் வட அமெரிக்காவுக்கு அனுப்பிவைத்தான். இந்தியர்கள் அவ் வணிகன் பழைய பிரான்சியனுடன் சேர்ந்தவனென்று எவ்வாறோ கண்டுகொண்டார்கள். கண்டுகொண்டு அவனையும் அவன் சரக்கு களையும் ஒரு வீட்டில் இருக்கச்செய்து சரக்கு வாங்குகிறவர்களைப் போல நடித்து, அவனுடன் சிலநாட்கள் புழங்கிக்கொண்டிருந்த னர். ஒரு நாளில் அவ்விந்தியர்கள் பெருங் கும்பலாகக் கூடிக் கொண்டுவந்து, பேருக் கொன்றாக அச்சரக்குகளையெல்லாம் வாரிக்கொண்டு போய்விட்டார்கள்.

அவ்வணிகன் திறுதிறு என விழித்து, தன்னால் ஒன்றுஞ் செய்யமுடியாமல் வருத்தத்தோடு சென்று, அவ்விந்தியருடைய தலைவனிடம் முறையிட்டுக்கொண்டான். தலைவன் அவனை நோக்கி, 'ஐயா, தங்களுக்கு விற்பனைத்தொகை சேரவேண்டியது நீதியே; அத்தொகையை எங்கள் மக்கள் வெடிமருந்துப் பயிர் அறுவடையானவுடன் கொடுத்துவிடுவார்கள்; அதுவரை தாங்கள் காத்திருக்கவேண்டும்,'' என்று சொன்னான். மேலும் அவன் சொன்னதாவது: "உங்கள் நாட்டு மனிதர் ஒருவர் எங்கள் மக்களுக்கு விலைக்கு வெடிமருந்து கொடுத்து விதைத்துப் பயிர் செய்யும்படி சொல்லிப்போனார். அவ்வறுப்புக் காலத்துக்குபின் எங்கள் மக்கள் நாலாபக்கங்களிலுஞ் சென்று வேட்டையாடித் தோலுமயிரும் ஏராளமாகக் கொண்டுவருவார்கள். அதனைத் தங்களுடைய சரக்குகளுக்கு ஈடாகக் கொடுத்து விடுவார்கள்,'' என்பதாம். அதற்குமேல் அப் பிரான்சிய மனிதன் "வெடிமருந்து விளைவதற்கு உங்கள் நிலத்தின் மண் தக்கதன்று; அஃது உங்கள் நாட்டில் பயிராகவே ஆகாது,'' என்றான்.

பிரான்சியன் சொன்னதெல்லாம் இந்தியருக்கு ஏற்கவில்லை. காட்டுமிராண்டிகளால் அறிவூட்டப்பட்டு அதனால் மிக்க வெட்க மடைந்து, அவ்வணிகன் வெறுங்கையோடு வீடுபோய்ச் சேர்ந் தான். ஒரு பிரான்சிய மனிதன் ஏமாற்றத்தின் விளைவு அவனோடு நிற்கவில்லை. அதுமுதல் இந்தியர்கள் பிரான்சியரோடு பண்ட மாற்று அறவே விட்டுவிட அவ்வைரோப்பிய நாடு வட அமெரிக்கா வுடன் வாணிபஞ்செய்தலை அறவே இழந்துவிட்டது.

உதவியற்ற பொருளைச் சிறந்த ஒன்றுபோற் காட்டி மக்களை ஏமாற்றி விற்பனை செய்வதும், நல்ல பொருள்களோடு உதவியற்ற

பொருள்களைச்சேர்த்து மிகை அளவைக்காட்டி வஞ்சித்து விற்பதும், இவ்வாறு பலவிதமாக வாங்குபவர்கள் ஐயுறுமாறு பொருள்களில் மாருட்டஞ்செய்து வைப்பதும் வாணிபத்தை அறவே கெடுத்து வணிகர்க்குக் கேட்டையும் வீண் பகட்டையும் உண்டாக்கிவிடும்.

க. பலவகையான மாறுபாடுகள்கொண்ட எடை குண்டுகளையும் அளவு கருவிகளையும் உங்களிடத்தில் நீங்கள் வைத்துக்கொண்டிராதீர்கள்.

விவில்லியம்.

உ. தப்புத் தராசுக்கோல் ஆண்டவனுக்கு வெறுப்பு உண்டாக்கும், சரியானதொன்று அவனுக்கு விருப்பு உண்டாக்கும்.

ங. பிள்ளைகள் தன்மையை அவர்களின் செயல்களினுல் அறியலாம்.

ச. முதலில் ஆவலோடு அடையப்பட்ட உரிமைச் சொத்துக்கள், முடிவில் சீர்மை யுண்டாக்கு மென்பது ஐயுறவே.

நீதிமொழிகள்.

ரு. நடிப்பைக் கொண்டுள்ள ஒருவர் உண்மையைக் கொள்வாராஞல், அவருக்குத் துன்பங்கள் நேரிடா.

ஸ்டெர்னி.

சு. உலகிலுள்ள எல்லா அழகைக் காட்டிலும், நேர்மையான மனமும், தாராளமான அன்பும், மேலான அழகுடையன. எள்ளத்தனை உண்மையும் இயற்கைத் தகுதியும் பகட்டான நகைகள், பெருஞ் சொத்துக்கள், மேல்நிலைகள் ஆகிய இவைக ளெல்லாவற்றையும்விட மேலானவை. பின் சொன்னவைகளையெல்லா முடையவர்கள் பித்தலாட்டக்காரர்கள் ஆனுலும் ஆவார்கள்.

[ஷப்ட்ஸ்மெரி.

# உசு. வாக்களிப்புக் காத்தல்

ஒருவன் பிறருக்கு யாதொன்றினைப் பற்றியாவது வாக்களிப்புச் செய்தால், அதனை அவன் காப்பாற்றிக் கொள்வானென்று எதிர் பார்த்து அவர்கள் தங்கள் வேலைகளை அதற்குத் தகவே ஒழுங்குபடுத்தி வைக்கின்றனர். அவன் தான் சொன்ன சொற்படி நடந்துகொள்ளாவிட்டால், வாக்களிக்கப்பட்டவர்கள் ஏமாற்றமடைந்து போவதுந் தவிர, அவர்கள் செய்ய எண்ணிய வேலைகளெல்லாந் தாறுமாறுகப் போய்விடுகின்றன. இளமையிலாகட்டும் முதுமையிலாகட்டும் நாம் பிறர்க்கு ஒருவாக்குக் கொடுத்துவிட்டால், அது நமக்கு நற்பயன் தராததொன்றுயினும், அதனை நாம் எவ்விதமாவது கவலையுடன் காப்பாற்றிக் கொள்ளவேண்டும். நாம் கொடுக்கும் சிறிய வாக்குக்களையும் நிறைவேற்றுமல் நாம் பராமுகஞ் செய்துகொண்டு வருவோமானுல், பிறகு அது முதன்மையான வாக்குக்களையும் அவ்வாறே எளிதாக எண்ணிவரும்படி செய்துவிடும். அதனுல் நம்மை யறிந்தவர்களெல்லாரும் நம்மீது வெறுப்புற்று நம்மை ஏசவும் செய்வார்கள்.

## 1. மூரனும் ஸ்பானியனும்

பன்னூருண்டுகட்கு முன்பு ஸ்பெயின் நாட்டை ஆப்பிரிக்க மூர்குலத்தார் கைப்பற்றிக் கொண்டிருந்தனர். அந்நாட்களில் ஸ்பானியன் ஒருவன் மூர்குலத்தாரின் ஓர் இளமகனைச் சிறு சண்டையில் கொன்றுவிட்டான். அந்த ஸ்பானியன் ஓடிப்போய் ஒரு தோட்டத்தின் மதிற்சுவரேறிக் குதித்துத் தன்னை துரத்தி வந்தவர்களுக்குத் தெரியாமல் ஓரிடத்தில் ஒளிந்துகொண்டான். அத்தோட்டம் ஒரு மூரனுடையது; ஆனுலும், ஸ்பானியன் அவனைத் தனக்கு அடைக்கலங் கொடுக்கும்படி வேண்டிக் கொண்டான்.

எவன் ஒருவன் தம்முடன் உண்டிருந்தானுனுல் அவனைக் காப்பாற்றிவிடுவது மூரர்களுக்குள் ஒரு வழக்கமாக இருந்தது. ஸ்பானியனுக்குத் தன்மீது நம்பிக்கை உண்டாகும்படி மூரன் அவனிடம் ஒரு கோவைக்கனியைக் கொடுத்து உண்ணச்செய்து, தன் தோட்டத்திலிருந்த கோடைக்கால விடுதியில் அவனை இருக்கச் செய்து, இருட்டானவுடன் தான் அவனை அதற்கு மேலும் மறைவான இடத்துக்கு அனுப்பிவித்து விடுவதாகவும் சொன்னுன்.

இவ்வாறு அம்மூரன் ஸ்பானியனுக்குச் சொல்லிவிட்டு, வீட்டுக் குட்போய் உட்கார்ந்துகொண் டிருந்தான். அப்போது ஒரு ஸ்பானியனால் கொல்லப்பட்ட அவனுடைய பிள்ளையின் பிணத்தினைத் தூக்கிக்கொண்டு ஒரு பெருங்கும்பல் அழுகைக்குர லுடன் அவன் வீட்டண்டை வந்து நின்றது. உடனே அம்மூரன் சிறிதுபொழுதுக்கு முன் தான் அடைக்கலமீந்த ஸ்பானியனே தன் மகனைக் கொன்றவனென அறிந்தான். எனினும், வாக்குத் தவறி நடக்க அவன் எண்ணங் கொள்ளவில்லை. அவன் யாரிடமும் ஒன்றும் பேசாமலிருந்து இருட்டு வந்தவுடன் தோட்டத்தறைக்குச் சென்று, ஸ்பானியனைக் கூப்பிட்டு, அவனை விரைவிற் செல்லும் ஒரு குதிரையின்மேலேற்றி, "கிறித்தவனே! நீ கொன்றவன் என் பிள்ளை; அதற்காக நீ கொடுந்துன்பம் நுகரவேண்டும். ஆனால், நீ என்னிடம் உறவு கொண்டிருக்கின்றாய்; ஆகையால் நான் வாக்குக் காப்பற்றிக்கொள்ளவேண்டும். நீ இருட்டிருக்கும் வரையில் பறந்து செல்லவேண்டும்; விடியுமுன் நீ இந்த இக்கட்டினின்றும் விலகிவிடுவாய்! என் மைந்தனைக் கொன்ற கொலைக்குற்றம் உன் மீதிருந்தபோதிலும், அதனை யான் நேரில் அறியாமற் போனதற்கும், என் வாக்குப் பழுதுபடாமல் நிறைவேற்றினதற்கும் யான் ஆண்டவனுக்கு நன்றி செலுத்துகின்றேன்,'' என்று சொல்லி அவனை அனுப்பிவிட்டான்.

## 2. பிரான்சிய அரசன் ஜான்

பிரான்ஸ் அரசன் ஜான் என்பவன் ஒரு காலத்தில் இங்கிலாந்து அரசன் எட்வர்ட் என்பவனால் போரிற் சிறைபிடிக்கப்பட்டு இங்கிலாந்துக்குக் கொண்டுவரப்பட்டான். பின் சிறைச்சாலையில் சிறை வைக்கப்பட்டான். ஜான் இவ்வாறு நான்கு ஆண்டுகள் சிறையில் இருந்துவந்தான். தான் சொல்லும் சில ஏற்பாடுகளுக் குட்பட்டு, தன்னுடன் ஓர் உடன்படிக்கை செய்துகொள்ளும்படி ஜான் பிரான்சியரை ஒப்பச் செய்யவேண்டும் என்கிற கட்டுப் பாட்டின் பேரில் எட்வர்ட் அவனை விடுதலைசெய்து அனுப்பி விட்டான். அவ்வேற்பாடுகளில் இடுதண்டமாக எட்வர்டுக்கு நூறிலட்சம் கிரௌன்கள் பிரான்சியர் கொடுத்துவிட வேண்டுமென்பது ஒன்று. இதற்குப் பிரான்சியர் ஒத்துககொள்ளாதபடியால் உடன்படிக்கை நிறைவேறவில்லை.

தன் குடிகள் விடுதலைத்தொகையைக் கொடுக்க இணங்காமற் போகவே ஜான் தன்னாட்டிலேயே இருந்துவிட மனமொவ்வாதவனாய்த் தானே இங்கிலாந்து சென்று எட்வர்டிடமே தன்னை ஒப்படைத்துக்கொள்ளத் தீர்மானித்துவிட்டான். பிரான்சு அரசனின்

உடனாளிகள் அவன் எண்ணத்துக்கு மாறான சூழ்ச்சிகளெல்லாஞ் சொல்லிப் பார்த்தார்கள். ஆனால், ஜான் அவைகள் ஒன்றுக்கும் இணங்கிவிடாமல், "நாணயமும் அரசப்பற்றும் இவ்வுலகத்தை விட்டு ஒழிந்துபோய்விடுமானாலும், அவை அரசன் மனத்தின்கண் கோயில் கொண்டிருக்கவேண்டும்," என்று சொல்லிவிட்டான்.

ஜான் தான் உறுதிகொண்டபடியே இங்கிலாந்துக்குச் சென்று, தன் ஆயுள்வரையில் அங்குச் சிறைப்பட்டே கிடந்தான்.

## பதினைந்தாவது சங்கீதம்

### (கடவுள் முன்னிலையில்)

1. எண்ணத்திலும் செயலிலும் நன்மையையே தழுவி இருப்பவனும்; தன் மனத்துக்கு ஒவ்வாததொன்றைத் தன் நாவினாற் சொல்ல வெறுப்புக் கொள்பவனும்; தன் அயலானின் பெருமையைச் சிறுமைப்படுத்த முயலாதவனும்; அயலான்மேல் சொல்லப்படும் பழிச்சொல்லுக்குக் காதுகொடுத்துக்கேட்டுத் தாற்றாதவனும்; தீமையை அசட்டை செய்து தள்ளுபவனும்; உடையாலும் உருவத்தாலும் இழிந்தவர்களைப்போலக் காணப்படும் உண்மைத் துறவிகளுக்குத் தக்கவாறு பணிவிடை செய்பவனும்; தானே செய்துகொண்ட ஆணையில் நிலையாய் நிற்பவனும்; தன் பணத்தை மிகைவட்டிக்குக் கொடுக்காதவனும்; குற்றப்படாதவர்களைக் கைக்கூலி வாங்கிக்கொண்டு கெடுக்காதவனும் ஆகிய இப்படிப்பட்டவர்கள் உன் முன்னிலையில் மகிழ்ச்சியோடு வாழ்ந்துகொண்டிருப்பார்கள்; அவர்கள் மகிழ்ச்சி உறுதிப்படுத்தப்பட்டிருக்கின்றது; உலகம் நிலை கலங்கினாலும் இவர்கள் உன்னடியிலேயே ஊறுபாடின்றி உறைவார்கள்

---

## உரு. குறும்பு செய்யாமை

ஆழ்ந்த கருத்தொன்றுமின்றிப் பிறர்க்கு விளையாட்டுக்கென்றே, வெறும் தொல்லை விளைக்க, ஒருவன் வேணுமென்றே செய்கின்ற சிறுகேடே குறும்பென்பது இக்குறும்புத் தனம் பெரும்பாலாகச் சிறியவர்களிடத்தும், சிறுபான்மை பெரியவர்களிடத்தும் உண்டு.

அக்குறும்பாவது: அடைப்புவரிச்சுக்களை யுடைத்தல்; அரைகுறையாக நிறந்தீட்டி யெழுதியிருக்கும் எழுத்துக்களைத் கீறிக் கெடுத்தல்; ஒப்பனைத் தோட்டத்தில் மரப் பட்டைகளைச் செதுக்குதல், அல்லது கொத்துதல்; ஆங்குள்ள இருக்கைகளின்மேல் கீறிவைத்தல், அல்லது பெயர்களை எழுதிவைத்தல்; ஆங்குள்ள கட்டடங்களின் தரையைக் கறைப்படுத்துதல்; பொருள்களைத் தாறுமாறாக இடம்விட்டு இடம் மாற்றி வைத்தல்; பூங்காவிற் சென்று பூக்களைப் பறித்து வீணாகச் சிதறிவிடுதல்; பழத்தோட்டத்திற் சென்று பழங்களைப் பறித்துத் தின்பதுந்தவிர, கணக்கற்றவைகளைப் பறித்தெறிந்துவிடுதல் ஆகிய இவைகளும் இவைபோன்றவைகளுமாம்.

விடுதிகளிற் சிலர் தட்டுமுட்டுகளுக்குச் சிறுகேடுகள் செய்வதுந்தவிர, சில பொருள்களை மறைவாக எடுத்துக் கொண்டும் போய்விடுகின்றனர். சிலர் மணவீடுகளிலும் இவ்வாறே செய்கின்றனர். இத்தகையன வெல்லாம் தீமை செய்வதுங் கொள்ளையடிப்பதுமாகும்.

இன்னும் ஒருவருக்கொருவர் பகடி செய்துகொள்ளுதலும், அச்சங் காட்டுதலும், சிற்றுயிர்களை மிரட்டுதலும் முதலியவை குறும்பேயாகும். இவை சிறு கேடுகளெனினுஞ் சிலவேளைகளில் இவற்றின் விளைவு பெருங் கேட்டைத் தருவதாகும்.

சிலர் பகைமையாலுங் குறும்புகள் செய்வதுண்டு. இரவில் மறைவாகப் பிறன் தோட்டத்திற் சென்று பயன்

தரு மரங்களேயும் செடிகளேயும் வெட்டிப்போடுதல், பிறன் வயலிற் சென்று பயிர்களை அழித்துப்போடுதல், பிறன் மாடுகன்றுகளுக்கு ஊறுபாடு செய்தல் முதலியவைகள் பெருங் குறும்புகளாகும். பகைமையினுல் இவ்வாறு கொடுங்குறும்புகள் செய்பவர்களை நன்மக்கள் எல்லோ ரும் வெறுத்துப் பகைத்துத் தள்ளிவிடுவார்களேயொழிய வேறென் 'செய்வார்கள் !

## 1. குளவியும் தேனீயும்

ஒரு பகல் ஒரு குளவி ஒரு தேனீயைப் பார்த்துச் சொல்லு கின்றது :—மக்கள் உன்னை விரும்புகின்றார்கள், என்னை வெறுக் கின்றார்கள் ; நான் உன்னைவிடப் பார்ப்பதற்கு அழகாயிருக் கின்றேன் ; நாம் இருவரும் பறக்கும் உயிர்கள் ; இருவரும் தேன் உண்ணுகின்றோம். சினமூட்டப்பட்டால் இருவரும் மக்களை கொட்டுகின்றோம் ; நான் மக்கள் வீட்டிலேயே இருந்துகொண்டி ருக்கின்றேன், நீயோ காட்டில் திரிந்துகொண்டிருக்கின்றாய் ; ஆனாலும் அவர்கள் உன்னை நாட்டுக்குக் கொண்டுவந்து, உனக் கெனத் தனி வீடுகட்டிக் கொடுத்து, உன்னை அதனில் வாழச் செய்து, தீனியும் ஊட்டுகின்றனர் ; இஃதென்ன வியப்பு ; இதற் கென்ன காரணம் ! எனக்குச் சொல்வாயா ?—இவ்வாறு குளவி தேனீயைக் கேட்டது.

அதற்குத் தேனீ சொல்லுகின்றது :—நீ மக்கட்குத் தீங்கான குறும்புகள் செய்கின்றாயேயொழிய நன்மை யொன்றுஞ் செய்வ தில்லை ; ஆகையால் மக்கள் உன்னைப் பார்ப்பதற்கே அஞ்சு கின்றனர் ; நானோ காட்டில் அலைந்து திரிந்து அவர்கட்கு இன்றி யமையாது வேண்டற்பாலாகிய தேனைச் சேகரித்துவைக் கின்றேன். அதனால் அவர்கள் என்மீது நட்புக் கொண்டிருக் கின்றனர். இனி நீ ஒன்று செய்; அழையா வீட்டுக்கு நுழையா விருந்தாக மக்கள் வீட்டுக்கு அடிக்கடி போகாதே; போனாலும் இனிமேல் நீ அவர்கட்குத் தீங்கான குறும்புகள் ஒன்றுஞ் செய்யாமலிரு ; போய்வா என்றது.

## 2. யானையும் தையற்காரனும்

இந்திய நாட்டில் ஒரு சிறு நகரில் தையற்காரன் ஒருவன் வீட்டுத் தெருவறையிற் பலகணிக்கு நேராக இருந்து, ஒரு நேர்த் தியான புதுத்துணியை உடையாகத் தைத்துக்கொண்டிருந்தான். அத்தெரு வழியே நீருந்த ஒரு குளம்நோக்கிச் சென்றுகொண் டிருந்த ஒரு யானை, அவனைத் துன்புறுத்தவேண்டுமென்கிற எண்ணஞ் சிறிதுமின்றித் தன் தும்பிக்கையால் பலகணியைத்

தொட்டுத் தடவிற்று. தையற்காரன் குறும்பெண்ணங்கொண்டு யானையின் தும்பிக்கை நுனியில் தன் ஊசியாற் குத்தினன். உடனே யானை தும்பிக்கையை வெளிவாங்கிக்கொண்டு, குலுக்கு நடையுடன் குளம் நோக்கி விரைந்து சென்றது. சென்று யானை நீரைக்கலக்கிச் சேருக்கிச் சேற்றைத் துதிக்கைநிறைய முகந்து கொண்டது. பின் தையற்காரனின் தையலறையின் பலகணி யண்டை வந்துநின்று, அச் சேற்றையெல்லாம் அவன்மேலும், அவனுடைய துணி உடைகளின்மேலும் கொட்டிவிட்டுப் போய் விட்டது. அவன் விதிர் விதிர்த்து மனங்கலங்கித் திடுக்கிட்டுப் போனன். கடையிலிருந்த துணிகளும் உடைகளும் சேற்றால் பாழ்பட்டுப்போயின. தையற்காரன் தான் செய்த குறும்புத் தனத்தினுல், அக்கம்பக்கத்தாருடைய நகைப்புக்காளாய், ஊதியக் கேடும் அடைந்தான்.

## 3. இன்ச்கேப் கட்டிய மணி

காத்துலாந்து நாட்டின் கடற்கரை யோரத்தில் இன்ச்கேப் என்னும் ஒரு முனையுண்டு. அங்கு புயற்காற்றும் கடற் கொந்தளிப்பும் அடிக்கடி உண்டாவது வழக்கம். ஆங்கு இருட்டில் கப்பல்கள் திக்குத்தெரியாமல் அம்முனைப் பாறைமீது மோதப்பட்டுப் பாழ்படுவதுண்டு. இதனைக் கண்ட மடாதிபதி அபரபிரதாக்கியன் என்பவர், மக்கள் படும் தொல்லையை யொழிக்க அம்முனை முகட்டில் ஒரு மணியைக் கட்டிவைத்தார். புயலினுல் அலைகள் அப் பாறையின்மேல் மோதும்போதெல்லாம் அம்மணி கணகண வென்றடிக்கும். அவ்வொழிகேட்டுக் கப்பல்கள் தொலைவில் சென்று இடுக்கணிற் படாமலேகிவிடும்.

இவ்வாறிருக்க இராலிப் என்னுங் கடற் கொள்ளைக்காரன் ஒருபோது தன்படகுடன் அவ்வழியாக வந்தான். அப்போது கடல் அமைதிபெற்றிருந்தது. அம்முனைப் பாறையிற் கட்டப் பட்டிருந்த மணியைக்கண்டு அவன் குறும்புக்கென்று அம்மணிக் கட்டை அறுக்க, அஃது உடனே ஆழ்நீரிற் கடலடியில் முழுகிப் போய்விட்டது. அதனுல் மகிழ்ச்சியடைந்து இராலிப் தன்வழி சென்றான்.

சிலநாட்களுக்குப்பிறகு இராலிப் தன்னுடைய சூறைப்பொருட் செல்வத்துடன் தன் படகேறிக் காற்றுநோக்கித் திரும்பி அம்முனை வழி வந்துகொண்டிருந்தான். திடீரென்று வானம் பேரிருள டைந்து, சூரியனிருக்குமிடந் தெரியவில்லை. சுற்றுமுற்றும் புயலுங் காற்றும் பேரிரைச்சல்கொண்ருந்தது. நீரென்றும் நிலமென்றும் வேறுபாடு காணப்படவில்லை. படகு இன்ச்கேப் முனைக்குநேரே தள்ளப்பட்டு வருகின்றது. மணி இருந்தாலன்றோ அடிக்கும்!

திட்டெனப் பாறைமேல் படகு மோதிப் பட்டெனப் பிளந்தது. இன்ச்கேப் முனையென்று கண்டுகொண்டான் கடல் திருடன்! 'ஐயோ, என் செய்தேன்!' என்று தலைமேற் கைகளை மோதி யடித்துக் கொண்டான். படகு அலைகளுக்குள் அகப்பட்டுக் கடலடிகண்டது. சிறுகுறும்பு அவன் உயிருக்கும் உடைமைக்கும் உலைவைத்தது.

க. ஒருவன் பள்ளம் வெட்டினான்; வெட்டின பள்ளத்தை ஆழத் தோண்டினான்; தான் தோண்டின குழியிலேயே விழுந்துபட்டான். தான் செய் குறும்பு தன் தலைமேலேயே படும்; தான் செய் கொடுமை தன் உச்சிமேல் விழும்.

சங்கீதம்

உ. குறும்பு செய்வது முட்டாளுக்கு விளையாட்டு; அதன் விளைவறிந்த அறிவாளியோ அது செய்யான்.

ந. சுருசுருப்போடு நலத்தைத் தேடுகின்றவன் மக்களின் நேயத்தைப் பெறுவான்; குறும்பு தேடுகிறவனோ அது தன்னிடமே வரக் காண்பான்.

நீதிமொழிகள்.

ச. கெடுவான் கேடு நினைப்பான்.

பழமொழி.

ரு. கெடுவல்யான் என்பது அறிக தன்நெஞ்சம்
நடுவொரீஇ அல்ல செயின்.

வள்ளுவர்.

## உகூ. வாய்மையுடைமை

வாய்மை யென்னும் மொழி வாயின் தன்மை யெனச் சொற்பொருள் தரும். வாயின் தன்மை என்ன? உண்மையே பேசுவது. ஆகவே வாய்மை யென்பது உண்மை எனப் பொருள்பட்டு நிற்கின்றது.

மக்கள் எப்பொழுதும் எச் செய்தியிலும் உண்மையைக் கைக் கொண்டு, எவருக்கும் தீங்கிழைக்காத வண்ணம் பேசுவதும் காரியங்களைச் செய்வதும் முதன்மையினும் முதன்மையாகும்.

வழிப்போக்கன் ஒருவன் சாலைவழியே அடுத்த நகருக்குச் செல்கின்றான். அவன் எதிரேவந்த ஒரு சிறுவனை நோக்கி, "அடுத்த நகர் எவ்வளவு தொலைவு?" என்று கேட்கின்றான். அந்நகர்த் தொலைவு ஆறு மைலாயிருக்க, அச்சிறுவன், "அஃது இரண்டு மைல்" என்று பொய் சொல்லுகின்றான். மிக்க தொலைவிலிருந்து வரும் அவ் வழிப்போக்கன் தொலைவு சிறிதேயென்று மனவெழுச்சி கொண்டு வழிநடக்கின்றான். சிறுவன் உண்மையைச் சொல்லியிருந்தால், வழிப்போக்கன் அவ்விடத்திலேயே சிலநேரம் தங்கியிருந்து, இளைப்பாறி உணவுண்டு, பிறகு உடல் நலத்துடன் குறித்த நகர் சென்று சேர்ந்திருப்பான். சிறுவன் சொல்லைநம்பி, ஒரே மூச்சாக நடந்து செல்வானால், அவன் ஊக்கங்குறைந்து மனம் நொந்து, இளைப்புங் களைப்புமடைந்து, மிகைநடையால் கைகால்கள் நொந்து வருந்துவான். அல்லது அதுவே நோயாய்ப் பல நாட்கள் படுக்கையிலேயே கிடப்பான். இதற்கெல்லாங் காரணம் அச்சிறுவனுடைய குறும்புத்தனமாகிய பொய்ம் மொழியே!

ஒரு பள்ளிக்கூடத்து மாணாக்கனாகிய இராமன் என்பவன் பந்தொன்று வைத்திருக்கின்றான். அவனுடன் விளையாடிக்கொண்டிருந்த முருடனும் வாயாடியுமாகிய உடன் மாணவன் கண்ணன் என்பான் அப்பந்தினைக்

கவர்ந்துகொள்ள எண்ணி, அது தன்னுடையதென்று வாதாடி, இராமனை வலியச் சண்டைக்கிழுக்கின்ருன். கண்ணன் தன்னிடம் அச்சங்கொண்டிருக்கும் நகுலன் என்பவனை நடுவனுக அழைத்துக் கொள்கின்ருன். இந்நகுலன் உண்மையை யறிந்திருந்தும், கண்ணனுடைய திட்டுக்குங் குட்டுக்கும் அஞ்சி, அப்பந்து கண்ணனுடையதே யென்று சான்று பகரின், அவன் பந்துக்குரியவனுகிய இராமனுக்குப் பெருந்தீங்கு செய்கின்றவனுகின்ருன். இத்தறுவாயில் இராமன் தன் பந்தைப் பிடித்தபிடி விடாமற் பற்றிக்கொண்டிருக்கின்ருன். கண்ணனே அதனை வலுகட்டாயமாக இராமனிடமிருந்து பிடுங்கிக்கொள்ளப் பார்க்கின்ருன். இதனுல் அவ்விருவருக்கும் சொற்போர் கைப்போர் விளையும். இச்செவ்வியில் ஆசிரியர் வந்து, அவ்வழக்கை முதலில் தொடங்கினவன் யார் என்று நகுலனைக் கேட்கின்ருர். அப்போதும் நகுலன் இராமனே அதனைத் தொடங்கினுனென்று மறுபடியும் பொய்யே சொல்லுகின்ருன். இவ்வாறு ஒன்றுக்கு இரண்டு பொய் சொல்லி இராமனுக்குக் கொடுந் தீங்கிழைத்தவனுகின்ருன் நகுலன்.

உலக நடவடிக்கைகளில் பொய் பேசுவதனுல் மேற் சொன்னதற்கு மேல் இன்னும் பெரிய பெரிய கேடுகள் நேரிட்டு விடுகின்றன. ஒருவன் இன்னெருவன்மேல் பொய்ச்சான்று கூறி, அவன் உயிரையே போக்கடிக்கின்ருன். வஞ்சனையால் பிறர்க்குக் கேடிழைக்க எண்ணிச் சில தீவினையாளர் மெய்போலப் பொய் பேசி, அவர் தம் நற்பெயரினையும் சொத்துக்களையும், இன்னும் அவர் அக்கறைகொண்ட செய்திகளையும் பாழ்படுத்துகின்றனர். ஆகையினுலே இவ்வுலகில் நல்லவன் என்று பேர் படைக்க விரும்புகின்றவன் இளமையிலிருந்தே உண்மை ஒன்றையே பேசப் பழகிக்கொண்டு வரவேண்டுமென்பது வெள்ளிடைமலை.

ஒரு சிறுவன் ஒரு குற்றமோ எதிர்பாராத தவருே செய்துவிடுகின்ருன், பெற்ருேர் அதனைப்பற்றிக் கேட்டால்

அவர்தம் தண்டனைக்கு அஞ்சித் தான் அதனைச் செய்ய வில்லையென்று மறுத்து உறுதிப்படுத்தி விடுகின்றான். பெற்ற மனம் பித்தாகையால் அவர்கள் அதனை நம்பிவிடு கின்றார்கள். பொய் சொல்லியே தண்டனைக்குத் தப்பித்துக் கொண்டு வந்துவிடுவது அவனுக்கு ஒரு வழக்கமாய் விடுகிறது. இதன் விளைவு கடைபோக எவ்வாறாகி விடுகிற தென்றால்,—இவன் 'பொய்யன் பொய்யன்' என்று எல்லோராலும் வெறுத்துத் தள்ளப்பட்டுப் போய்விடுவது மல்லாமல், இவன் சொல்வதெல்லாம் பொய்யே யென்று எண்ணி எவரும் அவன் பேச்சில் நம்பிக்கை வைப்பதே யில்லை.

ஏதோ ஒன்றைப் பெறுவதற்குப் பொய்சொல்வது குற்றத் தண்டனையினின்றும் தப்பித்துக்கொள்ளப் பொய் சொல்வதைக் காட்டிலும் மிகுகேடானது. ஒரு பிள்ளை யின் தாய், அவனுக்கு ஞாயிறுதோறும் இரண்டணாக் கொடுப்பது வழக்கம் அப்பிள்ளை ஒரு ஞாயிறன்று தாயினிடம் அப்பணத்தைப் பெற்றுக்கொண்டு, மறைவில் தந்தையினிடஞ் சென்று, "அப்பா! அம்மாளிடம் துட் டில்லையாம், இன்று அவர் பணம் கொடுக்கவில்லை," என்று சொன்னால், மானக்கேடான பொய்யாகும்; மேலும் அவ் வாறு சொல்லிப் பெற்றுக்கொண்ட பணம் திருடின பணமே யாகும்.

தான் தப்பித்துக்கொள்ளவோ, பகையினாலோ ஒரு வன் இன்னொருவனைப் பற்றிப் பொய்பேசுவது இன்னும் பொல்லாத மானக்கேடான செய்கையாகும்.

மக்கள் அசட்டையினாலோ, பதற்றத்தினாலோ, கற் பனையாகவோ பொய் சொல்லிவிடுவதுண்டு. "மக்களிற் சிலர் பிறரை வஞ்சிக்கவேண்டுமென்பதன்று; ஆனால் உண் மையிற் பற்றுக்கொள்ளாமல் பொய் பேசுகின்றனர்," என் கின்றார் பேரறிஞர். ஜான்சன் எவ்வகையிலும் பிழை படுத லின்றி இருக்கவேண்டும் என்பதிற் போதுமான கவலை மக்கட்கில்லை. ஒன்று திட்டமாய் உண்மையா அன்றா என்பதை எண்ணிப்பாராமலே, வாயில் வரும் எதனையும்

பிறர்மன முவக்கச் சொல்லிவிடுகின்றனர். பெரும்பான்மையாகத் தட்டார், கன்னார் முதலிய கைவினையாளர்கள் தங்களிடம் ஒருவர் ஒருவேலை செய்துதர நாள் குறித்துக் கொடுத்தால், அவர்கள் அக்குறித்த நாளுக்குள் அவ்வேலை முடியுமோ, அல்லது அதனை முடிக்க முடியுமோ, என்பதனை யெண்ணிப்பாராமலே, அதனை அந்நாளில் முடித்துக் கொடுத்துவிடுவதாகக் கொடுத்தவர்க்கு முகவிச்சைபேசி யனுப்பிவிடுவது வழக்கமாக இருக்கின்றது.

சிலர் பிறர்க்கு வியப்புண்டாக்கவேண்டுமென்பதொன்றையே மனததிற்கொண்டு ஒரு சிறு செய்தியை மிகைப்படுத்திப் பாரித்துக் கூறுகின்றனர். ஒருரில் ஒரு மக்கட் கூட்டத்தைக் கண்டு ஊர் பிடிக்காத கூட்டம் என்பது, மழை சிறிது மிகையாகப் பெய்ததால் வெள்ளம் ஓடுகின்றது என்பது, ஒரு காட்டில் இரண்டொரு புலியைக்கண்டு காடெல்லாம் புலி யென்பது, ஒரு பெரிய பணக்காரன் வீட்டைப்பற்றி அவன் வீட்டில் அம்பாரம் அம்பாரமாகப் பொன்னிருக்கிற தென்பது, சிறிது அழகான பெண்ணைப் பற்றி அவள் இரம்பை, மேனகை யென்பது, சிறிது மேன்மையாகக் கற்றவனைப்பற்றி அவன் படிக்காத நூல்களில்லை யென்பது, பின்வருஞ் சில செய்திகளை முன்னறிவினால் முன்னெடுத்துச் சொல்லும் ஒரு பெரியோனைக் கடவுளே யென்பது—இவைகளும் இவைபோன்றனவும் பொய்யே யாகும். உண்மையின் மேன்மையை யுணர்ந்தவன் எவனும் இவ்வாறெல்லாம் வாய்மொழியைப் பெருக்கிப் பேச மாட்டான்.

சிலர் உள்ளொன்றும் புறம் ஒன்றுமாகப் பேசுகின்றனர். அதனைக் கூர்மையுடன் உன்னிப்பார்க்கப் பச்சைப் பொய்யே யென்று கருதவேண்டி யிருக்கின்றது. சிலர் அத்தகைய பேச்சுக்களிற் சொற்குற்றமில்லை யாதலால், அது நீதிக்கு மாறானதென்றும், தீவினையிற் சேருமென்றும் நினைப்பதே யில்லை. இது மயக்க அறிவினால் உண்டாகும் கொள்கையே. பிறரை ஏமாற்ற இரு பொருள் படப் பேசுவது பொய்பிற் சேர்ந்ததே. இத்தகைய பேச்சுக்கள்

வஞ்சனையும் தீவினையுமாகும் என்பதில் ஐயப்பாடே யில்லை.

உலகச்செயற் பொறுப்புக்களில் உண்மையென்பது மிகவும் முதன்மையானது. நம்மைப் பற்றியதும் பிறரைப் பற்றியதுமான எவ்வகைச் செயல்களிலும் உண்மையைக் கடைப்பிடித் தொழுகவேண்டும். சான்றுகளான் மெய்ப் பிக்கப்படாத எக்கொள்கையையும் சரியானதென்று நாம் மனத்திற் கொள்ளக்கூடாது. உண்மையென்று கண்ட வைகள் உலகை உயர்த்தும், பொய்யென்று கண்டவைகள் உலகைத் தாழ்த்திவிடும்.

## 1. ஏக்கப்புக்காட்டிய இடைப்பையன்

காட்டுப்புறமாக இருந்த ஓரூரில் சில ஆட்கள் ஒரு வயலில் வேலைசெய்துகொண்டிருந்தனர். சிறிது தொலைவில் மறைவி லிருந்த ஒரு புல்வெளியில் ஓர் இடைப்பையன் ஆட்டுமந்தை மேய்த்துக் கொண்டிருந்தான். இருந்தாற்போலிருந்து அவன், 'புலி புலி' யென்று கூச்சலிட்டான். அண்டை வயலில் இருந்த ஆட்கள் ஓடிவந்து பார்க்கப் புலியுமில்லை, ஒன்றுமில்லை. உடனே அவர்கள் சிறிது சினங்கொண்டு அப்பையனை நோக்கி, "ஏன் கூச்சலிட்டாய்?" என்று கேட்க, அவன், "வெறும் விளையாட்டுக் காக," என்று சிரித்தான். பிறகு அவ்வாட்கள் அவனைத் திட்டி, "இனிமேல் அப்படிச் செய்யாதே, மூட்டாளே!" என்று சொல்லி வேலைக்குப் போய்விட்டார்கள்.

இரண்டொரு நாட்கள் பொறுத்து மறுபடி அப்பையன் அவ் வாறே கூச்சலிட, அவ்வாட்கள், "அறியாப் பிள்ளையாயிற்றே" யென்று ஓடிவந்து பார்க்க, புலியொன்றுங் காணமல், இடைப் பையனை நோக்கி, "பட்டிப்பயலே! இனியும் நீ இப்படிச் செய்வா யானல், நீ படப்போகிற பாட்டைப்பார்," என்று சினந்து பேசி விட்டுப் போய்விட்டார்கள்.

நாலைந்து நாட்களுக்குள்ளாக மக்களையே கொன்று தின்னும் புலியொன்று மந்தையை நோக்கிவர, பையன் "ஐயோ புலி, ஐயோ புலி!" என்று இரண்டுதடவை கத்தினன். அவர்கள் இவன் பொய் சொல்கிறவ னென்று எண்ணி அன்று வரவில்லை. அஃது அவனைக் கொன்று தின்றுவிட்டுப் போய்விட்டது. ஆதலால், பொய் சொன்னதனல் அவன் புலி வாயிலிருந்து காபாற்றப்படா மல் இறந்தான். எனவே விளையாட்டாகவேனும் பொய் சொல்லு தல் கூடாது.

## 2. கருண துரியர்

ஒரூரில் கருணன், துரியன் என்னும் இரண்டு உடன்பிறந்த ஆண் பிள்ளைகள் இருந்தனர். அவர்கள் இருவரும் ஒருநாள் அடுப்பின் பக்கத்தில் படுத்துகிடந்த பயிரி என்னும் நாயுடன் விளையாடிக்கொண்டிருந்தனர். அப்போது அவ்விரு பிள்ளைகளின் கால் பட்டு அடுப்பின்மேலிருந்த பாற்பானை கீழே விழுந்துடைய, பால் அட்டிலெல்லாங் கொட்டிப்போயிற்று. உடனே கருணன் துரியனை நோக்கி, "வா, இதனைத் தாயாரிடஞ் சொல்லிவிடுவோம்," என்று கூப்பிட்டான். துரியன் தயங்கி நிற்க, அவனைச் சட்டைசெய்யாமலே கருணன் புறக்கடைத் தோட்டத்திற்கு ஓடினன். அடுக்களையறையிலேயே தயங்கியிருந்த துரியன், தாயாரிடம் என்ன சொல்லித் தப்பித்துக்கொள்ளலாம் என்றெண்ணியபடியே நின்றுகொண்டிருந்தான். அதற்குள்ளாகத் தாயாரும் அவ்வறைக்கு வந்துவிட்டாள். பாற்பானை உடைந்துபோய்ப் பால் சிதறிச் செறிந்திருந்ததைக்கண்டு, ஆங்கிருந்த துரியனை நோக்கி அவள், "துரியா! இது யார் வேலை?" என்றாள். துரியன் நடுக்கங்கொண்டு, வாய் குழறி, "அம்மா! பயிரி பாற்பானையைத் தள்ளியுடைத்துவிட்டோடிப் போயிற்று," என்றான். உடனே அவள் பயிரியைக் கூப்பிட்டுப் பிரம்பெடுத்து அதன் தலைமேல் அடிப்பதற்கு நோக்க, அது போகாமல் எதிர்த்து உறுமிற்று! இத்தறுவாயிற் கருணனும் தாயாருக்குத் தெரியாமல் தோட்டத்திலிருந்து அவ்வறைக்கு வந்தான். வந்ததும், அவளிடம் முன்னடந்த செய்தியை நடந்தபடியே சொன்னான் அப்போது தந்தையாரும் அவ்வறையில் நுழைந்தார். நுழைந்தவர் நடந்தவைகளை யெல்லாம் நன்கு தெரிந்து கொண்டனர்.

தெரிந்துகொண்டபின் தந்தையார், பிரம்புகொண்டு துரியனை அடிமேலடி யடிக்க, அவன் அழுதுகொண்டே, "அப்பா! இனி யான் பொய் சொல்லவுமாட்டேன்; இந்த அடியும் படமாட்டேன்! என்னை மன்னித்து விட்டுவிடுங்கள்," என்று தேம்பித்தேம்பி, வாய்குழறித் தெத்தித்தெத்திப் பேசினான்.

தந்தையார் கருணனைக் கூப்பிட்டு, "நீ உண்மை பேசினாய், இனிப் பயிரிக்குக் கருணன் என்று பெயரிடுகின்றேன்; அஃது உன்னுடையதாகவே யிருக்கட்டும்," என்று சொல்லிவிட்டு, மனைவியினிடம், "'பயிரி என்னும் நாய் எப்படிக் கருணனாயிற்று', என்று ஊரார் கேட்டால் அவர்கட்கு இவ்வரலாற்றை யெடுத்துக் கூறு; அவர்கள் பொய்பேசும் பிள்ளைக்கும் மெய்பேசும் பிள்ளைக்குமுள்ள வேறுபாட்டினைக் நன்கறியட்டும்," என்று சொல்லிவைத்தார்.

## 3. விழலியாற் கெடவணிகன்

ஒரு நகரில் பெரிய வணிகன் ஒருவனிருந்தான். அவன் தீவினைப் பயனாற் பொருட்கேடடைந்து, பெருங் கடனாளியாய்விட்டான். அவன் எஞ்சிய பொருளைக் கடன்காரர்களுக்கு வீதப்படி பங்கிட்டுக் கொடுக்க, அவர்களில் ஐயுற்ற இருவர் தவிர, ஏனையோர் அவனுக்கு விடுதலைச் சீட்டளித்துவிட்டனர்.

இஃது இவ்வாறிருக்க, இக்கடனாளியின் பெண் ஒருத்தி ஒரு நாள் ஓர் அஞ்சல் வண்டியிற் பயணஞ் செய்துகொண்டிருந்தாள். அவ் வண்டியில் அவள் தன் தந்தையின் விடுதலைச் சீட்டளிக்காத இரு கடன்காரரும் உடனிருந்தனர். அஃதறியாத அப்பெண் தன் தந்தை ஒரு பெருஞ்செல்வர் என்றும், அவர்தம் வாழ்க்கை ஓரரச வாழ்க்கை போன்றதென்றும், அவர்தம் அரண்மனையில் காவலாட்களும் வேலைக்காரர்களும் பற்பலர் என்றும், இன்னும் அவர்தம் உணவு உடைகளைப்பற்றியும் பெருமிதமாகப் பேசிக்கொண்டு வந்தாள்: இப்பெண்ணின் வாய்ப்பேச்சினாலேயே அவள் இன்னாளென்றறிந்துகொண்ட அவ்விரு கடன்காரர்களும் அவ்வணிகனுக்கு விடுதலைச் சீட்டளிக்க அறவே மறுத்துவிட்டதுந் தவிர அவனைப்பற்றி நகரெல்லாம் பழித்தும் இழித்தும் பேசிக்கொண்டு வந்தனர். ஆகவே அவ்வணிகன் தன் பெண்ணின் வீண்பெருமைப் பேச்சினால் அந்நகரில் மேன்மையிழந்து, தாழ்மை யுழந்து ஆயுள் வரையில் அல்லல் வாழ்க்கையே அடைந்திருக்க வேண்டியதாயிற்று.

உண்மையிலிருந்து சிறிது மாறுபடுவதும் இடுக்கண் விளைவிக்குமென்டதை நாம் இதனாலறிகின்றோமல்லவா?

## 4. உண்மை எலினி

ஸ்காத்துலாந்து நாட்டில் எலினி யென்னும் ஒரு பெண் இருந்தாள். நீதி நூற்களையும் அன்புநூற்களையும் படித்துக்கொண்டிருப்பதையே தன் மனத்துக்கினிய தொழிலாகக்கொண்டவள். அவள் பெற்றோர் விண்ணேகினர். சிறிய தங்கை யொருத்தி இருந்தாள்; எலினி வயலில் உழைத்துத் தன் தங்கையைக் காப்பாற்றி வளர்த்து வந்தாள். அத்தங்கை பெரியவளானபோது, கொலைத்தண்டனை யடையத்தக்க குற்றமொன்றச் செய்துவிட்டாள். ஆனால் தான் செய்த குற்றத்தை யாரிடமாவது மறைவாகக் குற்றவாளி சொல்லி விட்டிருந்தால் அது மன்னிக்கப்படுமென்பது அந்நாட்டு நீதி. எலினி தன் தங்கை தன்னிடம் 'தான் செய்த குற்றத்தை ஒத்துக் கொண்டதாகச் சொன்னாள்,' என்று சான்று கூறினால் அவள் தங்கை அத்தண்டனை யடையமாட்டாள். ஆனால் அவள் அவ்வாறு

செய்வதற்கு மனமொவ்வாதவளானாள். அவளுக்குத் தங்கைமேல் அன்பு பெரிதே! ஆனாலும் தெய்வத்துக்கு அஞ்சுபவளும், நீதி நூற்கள் பயின்றவளும் ஆகிய அவளுக்கு இஃது எலுமோ! அவள் நீதி மன்றத்திலும் தன் தங்கை அக்குற்றத்தைப்பற்றித் தன்னிடம் ஒன்றுஞ் சொல்லவில்லையென்றே சான்று பகர்ந்தனள். ஆகையால் கொலைத் தண்டனை உறுதிசெய்யப்பட்டுவிட்டது.

என் செய்வாள் எலினி! தன்னருமைத் தங்கை கொலைபடுவதைக் காண மனங்கொள்வாளா? மனவெழுச்சிகொண்டு தன்னாலாவதைச் செய்ய எண்ணினாள் எலினி. அவள் உடனே கால்நடையாகவே முப்பது காவதம் சென்று, இலண்டன் நகரடைந்து, அரசியை நேரிற்கண்டு, தன் தங்கையின் செய்தியை நடந்தபடியே சொல்லி, மன்னிப்புக்கு மன்றாடினாள். அவள்தன் மன்றாட்டு அரசப் பெருமாட்டியால் ஒப்புக்கொள்ளப்படவே, அவளுடைய தங்கை புத்துயிர் பெற்றாள்.

எலினியின் உண்மைத் தன்மையையும், அன்புழைப்பையும் பற்றி அந்நாட்டுக் கவியரசராகிய ஸ்காத் (Sir Walter Scott) என்பவர் தமது சிறந்த நூலொன்றிற் புகழ்ந்தெழுதியுள்ளார்.

க. பொய்யே பேசும் உதடுகள் ஆண்டவனுக்கு அருவருப்பு; மெய் பேசுபவையோ அவருக்குக் களிப்பு.

உ. பொய்ச்சான்று தண்டனை கொடுக்காமற் போகாது; பொய்பேசுகின்றவன் அழிந்து போவான்.

ங. முட்டாளாயிருப்பவன் ஒருகால் சீர்படுவான்; பசப்புப் பேச்சுக்காரனோ சீர்படுவதருமை.

ச. பிள்ளைகள் பொய்க்கு அஞ்சி மெய் பேசுவார்களானால், அவர்கள் அறிவாளிகளென்று அவர்தம் சொற்களில் நம்பிக்கை வைக்கலாம்.

நீதி மொழிகள்.

ரு. வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல்.

சு. தன்னெஞ் சறிவது பொய்யற்க; பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்.

வள்ளுவர்.

———

# உஎ. பெருந்தகைமை

மக்களிற் புல்லிய மனத்தர் எனப்படுவார் சிலர் உண்டு. அவர்கள் எடுத்தவற்றிற்கெல்லாம் சிறு பொருட்களாயினும் குற்றங் காண்பர்; தெரியாமற் செய்த சிறு தீங்கையும் பெரிதாக எண்ணிச் சினங்கொள்வர்; வாணிபத்திலோ, கைத்தொழிலிலோ, அலுவலிலோ உடனுள்ளார்மேற் பொறாமைப்படுவர்; எவனுக்கும் ஏதாவதொன்று கிடைப்பின் அவன்மேற் பொறாமை கொள்வர்; தங்களுக்கு ஒருவன் ஒரு சிறு தீங்கு செய்தாலும், அது நாட்பட்டுப்போயும், ஏனையோர் அதனை மறந்து போய் விட்டாலும், தாங்கள் வன்மம் வைத்துக்கொண்டு செவ்வி கண்டபோது பழிவாங்க எதிர்பார்த்து இருப்பர்.

பெருமனதுடையோர் எடுத்ததற்கெல்லாம் பதறிக் குற்றங்கண்டு சினங்கொள்ளமாட்டார்கள்; தாங்கள் தாழ் நிலையிலிருந்தாலும், பிறருடைய செழிப்புநிலை கண்டு மனம் உவப்பர். அவர்கள் பிறருடன் ஈடுபட்ட நிலையிலிருக்க விரும்பினாலும், அவ்விருப்பம் தாராளத் தன்மையோடுகூடிய போட்டியேயாகும். பெருமனத்தர் பிறர் தம் நோக்கங்களுக்கு விட்டுக்கொடுப்பர்; அவை தங்கட்கு ஊறுபாடு கொடுப்பவைகளாக இருந்தாலும், அவற்றை மன்னித்துக்கொள்வதற்குத் தயங்கமாட்டார்கள்; இத் தகையோர் தங்கள் எண்ணத்தை நிறைவேற்றிக்கொள்ள வேண்டி வஞ்சனை, தந்திரம் முதலிய இழிசெயல்களுக்கு இணங்கமாட்டார்கள். தாழ்நிலையிலிருந்தும் உண்மையுடையவர்களை இகழ்ந்து வெறுப்பவரல்லர். பிறரை இழி நிலையோரென்றும் தீவினையாளர் என்றும் கற்பனையாக எண்ணிக்கொண்டு வீண் மனவருத்தப்பட இடங்கொடுக்க மாட்டார்கள். இப்படிப்பட்டதே பெருந்தகைமை என்பது. இஃது இவ்வுலகில் அருமையினும் அருமையான குணமென்று மக்களால் உச்சிமேற் கொள்ளப்படுகின்றது.

## 1. மாசிடன் அரசர் பிலிப்

ஆதென்ஸ் வல்வாயர்கள் பிலிப் அரசரைப்பற்றி அவதூருகப் பேசுகின்றனர் என்னும் செய்தி பலரறிய நாடெங்கும் பரவி வந்தது. அரசர் பெருந்தகையராதலால் தம்மை நிந்தைசெய்தோர் பால் வன்மனங் கொண்டாரில்லை. ஆனால் அவர் ஒன்று சொன்னார்: "என்னுடைய வாழ்க்கை நடவடிக்கையினாலும், இதர செய்கைகளினாலும், அவர்கள் பொய்யர்கள் என்று மெய்ப்பிக்க யான் கவலை கொண்டிருக்கவேண்டும்," என்பதாம்.

தன்னைப் பழித்துப்பேசிய ஒரு குடியை நாட்டைவிட்டகற்றி விடவேண்டுமென உடனுளர் பிலிப் அரசருக்கு அறிவுறுத்த, அவர், "அவன் அவ்வாறு செய்ய இடங்கொடுத்தேமா என்பதை யாம் முதலில் பார்க்கவேண்டும்," என்று சொன்னாராம். அவர் ஆராயச்சிக் கேள்வியினால், அவன் ஒருகால் தமக்குஒருதவி செய்ததாகவும், அதற்கு அவன் யாதொரு கைம்மாறும் பெருமற் போனதாகவுந் தெரிந்து, உடனே குற்றம் தம்முடையதேயென அதனை ஒத்துக் கொண்டு அவனுக்கு நன்கொடையாக ஒரு தொகை கொடுக்க உத்தரவிட்டார்.

## 2. அரசர் உவில்லியமும் குலமகன் கோடால்பினும்

இங்கிலாந்தில் ஒருகால் நாட்டுப் பெருங்கலகம் நடந்தது. அப்போது இரண்டாவது ஜேம்ஸ் அரச நிலையினின்றுந் தள்ளப்பட்டான். அப்பால் மூன்றும் உவில்லியம் என்னும் அரசன் அரியணை யேறியிருந்தான். அக்காலத்தில் நாடுதுறந்த அரசனுடன் கடிதப் போக்குவரத்து செய்வது பேரரச இரண்டகம் என்றுவிதிக்கப்பட்டிருந்தது. இங்கிலாந்துப் பெருமக்களிற்சிலர் அவ்விதியை மீறி நடக்கலாயினர். அவர்களில் ஒருவர் கோடால்பின் என்னுங் குலமகனார். உவில்லியம் அரசர் அவரைப் பெருந்தன்மையாகவே திருத்த எண்ணினார். அரசர் அவரை வரவழைத்துத் தமதரண்மனையில் ஓர் உள்ளறையில் வைத்துக்கொண்டு, "நீர் ஜேம்ஸ் அரசருக்கு மறைவாக எழுதிய கடிதங்கள் கண்டுபிடித்தெடுக்கப்பட்டு இதோ என்னிடம் இருக்கின்றன; எவ்வளவு குற்றமுடையதாயினும் உமக்கு அவர்மேலிருக்கும் மிக்க பற்றினை யான் மெய்ச்சுகின்றேன்; இனியும் உம்மை நண்பராகவே யான் கருதுகின்றேன்," என்று சொல்லி, அவர் மனம் இடர்ப்படாமலிருக்க அக்கடிதங்களை அவர் முன்னிலையிலேயே நெருப்பிற் போட்டுவிட்டார். அரசர் காட்டிய பெருந்தன்மையினால் மனமடங்கிப்போய், அக்குலமகனார் அன்றுமுதல் அரசருக்குப் பிரியா நண்பராயினர்.

## 3. காதலர் இருவர்

பாரிஸ் நகரின்கண் வில்லாசர்ப்பி என்னும் ஒரு குலமகட் சிறுமியும், பெஸ்ட்டா என்னும் ஓர் அறுவை மருத்துவரும் ஒருவருக்கொருவர் அவ்வவர் அழகினைப்பற்றிப் பாராட்டிக் கொண்டிருந்தனர். ஆனால் அவரவர் நிலைமை வேறுபாடே அவர்தம் திருமணத்திற்குத் தடையாய் நின்றது. இவ்வாறு பலநாட்கள் செல்ல மருத்துவர் அச் சிறுமியை அடிக்கடி காணுவதை நிறுத்தி விட்டார்; மணம் என்பதே அவர்தம் மனத்தை விட்டகன்றது. இப்படியிருக்க வில்லாசர்ப்பிக்குச் செந்நீர் கழிக்கவேண்டியதான ஒரு கொடிய நோய் கண்டது; அதற்காகப் பெஸ்ட்டாவே அக் குலமகளிடம் போக நேர்ந்துவிட்டது. மருத்துவர் அவளைக் கண்டபோது மனக்கலக்கமும் உடல் நடுக்கமும் அடைந்து விட்டபடியால், நெஞ்சுப்பைக்குச் செல்லும் நரம்பைத் திறந்துவிடுவதை விட்டுவிட்டு அதிலிருந்துவரும் நரம்பை அறுத்துத் திறந்து விட்டார். இவ்வாறு செய்வது உயிருக்குக் கேடுவிளைவிக்கும் குற்றமாகும்.

இரண்டு மூன்று நாட்களில் அவ்வம்மையாருடைய தோளையும் எடுத்துவிட நேர்ந்தது. ஆனாலும் கடுகடுப்பும் வெடுவெடுப்பும் கொள்ளாமல் அமைதியாகவே அக்குலமகளார் அவரை உடனிருந்து உதவிசெய்து கொண்டிருக்க வேண்டிக்கொண்டனர். அம்மருத்துவர் இரண்டொரு நாட்களில் அவ்வம்மையார் ஒருநாட் பொழுதே உயிரோடிருக்கக்கூடுமென்று கண்டுகொண்டார். இச்செய்தியை வில்லாசர்ப்பி அவர்தம் முகக்குறியால் அறியலாயினர். மருத்துவர் தம் காதலியின் பேரிரக்க நிலையறிந்து மன வேதனையினால் துடி துடித்துக் கொண்டிருக்க இறக்குந் தறுவாயிலிருந்த அக் குலமகள் மன அமைதியோடு சாக்காட்டு முறியொன்றை யெழுதி முடித்துவிட்டாள். உடனே அண்டையிலிருந்தோரையெல்லாம் அகற்றிவிட்டுப் பெஸ்ட்டாவைத் தனியே கூப்பிட்டு வைத்துக் கொண்டு, ' "யானோ இவ்வுலகத்தைத் துறக்குந் தறுவாயிலிருக்கின்றேன்; உம்முடைய மருத்துவத் தவற்றைப்பற்றி யான் எள்ளளவும் மனம் வருந்தவில்லை; அஃது விரைவில் என்னை விண்ணுலகடையச் செய்ததைப் பற்றி மகிழ்கின்றேன்; அத்தவறைப் பிறர் அவ்வாறு கொள்ள மாட்டார்கள்; உம்முடைய தவறு உம்முடைய தொழிலுக்கு ஊறுபாடு செய்யக்கூடும்; அதனால் நீர் நலிவடையாதிருக்கவேண்டி என்னுடைய சாக்காட்டு முறியில் ஓர் ஏற்பாடு செய்துள்ளேன்; போய் வருகிறேன்," என்றாள்.

குலமகள் வில்லாசர்ப்பியை மரிக்கச்செய்த மருத்துவர் அவர் தம் உரிமைப்பொருளிற் பெரும்பங்கு பெற்றார். இஃதன்றோ பெருந்தகைமை!

## 4. ஓவியச் சிறுவர் மூவர்

இத்தாலி நாட்டில் ஓவியக்கலைக்கென்று ஒரு கல்லூரி இருந்தது. அதனில் உழைப்பும் நுண்ணறிவுங் கொண்ட வர்மன் என்னும் ஒரு சிறுவன் அக்கலையிற் பயின்றுவந்தான். ஒருநாள் அவன் தீட்டிய சில சித்திரங்களைப் பார்த்து ஆசிரியர்கள் எல்லோரும், "இவன் எப்போதும் இப்படியே இக்கலையைப் பயின்று வருவனாயின் இக்கலையின் உச்சிமேல் நிற்பன்," என்று மெய்ச்சிக் கொண்டனர்.

அக்கலூரியில் பயின்றுவந்த சர்மன் என்னும் மற்றொரு மாணுக்கனுக்கும் அச்சித்திரக்கலையில் வர்மனுக்கு அடுத்தபடி நல்ல பெயருண்டு. ஆசிரியர்கள் வர்மன் ஓவியங்களைப்பற்றி மிக மேன்மையாகப் பேசினதைக் கண்டு இவன் மனமடிவும் வன்மமுங் கொண்டு பொல்லாத உட்பகை யடைந்துவிட்டான்; வர்மன் பெற்ற பெருமையெல்லாம் தன்னால் வந்ததுவே என எண்ணிவிட்டான். மேலும் அவன் தன்னுடன் பயிலும் மாணுக்கரிடத்திலெல்லாம், "வர்மனுக்கு ஓவியத்தில் என்ன பயிற்சியுண்டு; அவனுக்கென்ன தெரியும்? சிறந்ததெனப் புகழப்பட்ட ஓவியங்களெல்லாம் அவனுடைய ஆசிரியர்கள் திருத்திக்கொடுத்தனவே; அவனுக்கு அப்பெயர் கிடைத்தது அவனுடைய நல்வினைப்பயனே; அதற்கு அவன் தகுதியுடையவனன்று," என்று மறைவிற் சொல்லி வந்தான்.

அக்கலாசாலையிலேயே குப்தன் என்னும் இன்னொரு மாணுக்கனிருந்தான். அவன் கற்றுக்குட்டியாயினும் வர்மனின் வேலைத்திறத்தை நன்கறிந்து அவனைமெய்ச்சிக்கொண்டுவந்தான். வர்மன் ஆசிரியர்களாற் புகழப்படுதைப்பற்றிப் பெருங்களிப்படைந்து, தானும் அவனைப்போல் ஆகவேண்டுமென்று பேராவல் கொண்டான். ஆகவே வர்மனைத் தனக்கு மேல் வரிச் சட்டமாக வைத்துக்கொண்டான். குப்தன். வர்மன் பேச்சென்றால் குப்தனுக்குப் பேரின்பம். சர்மன் வர்மனை இழித்துப் பேசுவது அவனுக்குப் பிடிக்காது.

குப்தன் வர்மனை மெய்ச்சிக்கொண்டதோடு நிற்கவில்லை. அவன் இரவும் பகலும் தீட்டித்தீட்டி உழைத்து ஆசிரியர் மனநிறைவடைய அழகிய ஓவியவேலைகள் செய்துவந்தான். நாளேற நாளேற வர்மனைப் போல் ஆகாவிட்டாலும் ஏறக்குறையப் பிறர் மெய்ச்சும் ஓவியங்கள் தீட்டவல்லவனாகலாம் என்னுந் துணிவு அவனுக்கு உண்டாய்விட்டது.

அக்கலாசாலையில் ஆண்டுக்கொருமுறை சித்திரப்படக்காட்சியொன்று வைப்பது வழக்கம். அப்போது எல்லாவற்றிற்கும் சிறந்ததோர் ஓவியத்திற்குப் பரிசளிப்பதுண்டு. அக்காட்சிக்காக வர்மன்

மேன்மையிற் சிறந்ததோர் ஓவியந் தீட்டிக் காட்சிக்கூடத்தில்மற்றவைகளுடன் காட்சிக்கென்று குறித்தநாளுக்கு முன் மலையில் ஓரிடத்தில் நாலவிட்டிருந்தான். ஏற்பாட்டுக்குப் பின் சர்மன் அக்கூடத்துக்கு மறைவாக வந்து வர்மன் படத்தின்மேல் ஏதோ ஒரு தைலத்தைக் கண்டபடி தெளித்துவிட்டுப் போய்விட, அவ்வோவியம் முற்றும் அழகிழந்து கிடந்தது.

குப்தனும், தன்னுற் கூடியவரை உழைத்துத் தீட்டிய சிறந்ததோர் ஓவியத்தை அக்காட்சிசாலையில் ஓரிடத்தில் தொங்கவிட்டு வைத்திருந்தான். மறுநாள் காட்சிசாலை திறக்கப்பட்டது. மக்கள் சுற்றிச்சுற்றிப் பார்த்து நல்லது அல்லதைப்பற்றிப் பேசிக்கொண்டு வந்தனர். நடுவர்களும் சுற்றிப் பார்த்துக்கொண்டு வர்மன் படத்தைப் பார்க்க ஆவல்கொண்டு அதனைக் கண்டு, “இஃதோ வர்மன் கைச் செயல்! இவ்வளவு கேடுகெட்டதாகவா இருக்கும்,” என்று மருண்டு நிற்க, அதற்குள்ளாக வர்மனே வந்து, தன் சித்திரப் படத்தைப் பார்த்து, “யான் மோசம் போனேனே! கேடுகெட்டவனானேனே!” என்று கண்ணீருங் கம்பலையுமாய்த் தன்னை மறந்துநின்றான். சர்மனோ ஒரு மூலையில் உள்ளுக்குள்ளே பொய்வெற்றிக் களிப்புக்கொண்டு தலைசாய்த்து நின்றான். குப்தன் ஓடிவந்து நடுவர்களைப் பார்த்து, “என்ன சித்திரம்? இஃது அவனுடையதுதான். அதனை வர்மன் தீட்டிக்கொண்டிருக்கும்போது யான் பார்த்தேனே! எவ்வளவு அழகாயிருந்தது! எவனோ வேணுமென்றே ஏதோ தைலத்தை ஊற்றிக் கெடுத்து விட்டிருக்கின்றான்!” என்று கூறிக் கண்ணீர் ததும்ப நடுவர்களைப் பார்த்துக்கொண்டு வருந்து முகத்துடன் நின்றான். காட்சிகாண வந்தோரும், “என்ன வாய்ப்பற்றவன் வர்மன்! என்ன தீவினையாளனவன்!” என்று பேசினர். நடுவர் வர்மன் ஓவியத்துக்கு எவ்வாறு பரிசளிக்க முடியும்! மற்றச் சித்திரங்களையும் நடுவர் பார்த்து, “குப்தனது ஓவியமே எல்லாவற்றிலும் சிறந்திருக்கின்றது; அதற்கே பரிசளிக்க வேண்டும்,” என்றனர். அப்போது குப்தன் அவர்களைப் பணிந்து, “தைலப் புள்ளிகளை மனத்தைவிட்டகற்றி மூலப்படத்தைத் தனிப்பட நோக்கிப்பாருங்கள்; அப்போது உங்களுக்கு அதன் சிறப்பு விளங்கும்; அடியேன் ஓவியமோ அதற்குமுன் நிற்காதே!” என்று பேசினன்.

குப்தனின் பெருந்தன்மையும் உண்மையுங்கொண்ட வாக்கு, நடுவர்களை மனமிரங்கச் செய்தது. அவர்கள் கூடிப்பேசிச் செய்த தீர்மானமாவது:—“இவ்வாண்டு இரண்டு பரிசுகள் கொடுக்கவேண்டும்; ஒன்று வர்மனின் மேன்மைக் கைத்திறமைச் சிறப்புக்கும், மற்றொன்று குப்தனின் உண்மை நன்னெறிச் சிறப்புக்கும்”— என்பதாம்.

## 5. ஆவெஞ ஆட்சியாளர்

1746 - ஆம் ஆண்டில் பிரிட்டன் நாட்டுக்கும் ஸ்பெயின் நாட்டுக்கும் கடற்போர் நடந்துகொண்டிருந்தது. அக்காலத்தில் ஒரு போது எலிசபெத் என்னும் இலண்டன் கப்பல் ஒன்று விலை உயர்ந்த வாணிபப் பண்டங்களுடன் ஸ்பெயின் நாட்டுக்கருகே கடலிற் பயணஞ் செய்துகொண்டிருந்தது. அஃது ஓட்டைகண்டு இடுக்கணிலையில் இருந்தது. ஸ்பெயின் நாட்டாரால் தாங்கள் "பிடிப்பட்டுப்போனாலும் போகின்றோம், உயிரைக் காப்பாற்றிக் கொண்டாற்போதும்," என்று துணிந்து, அக்கப்பலிலுள்ளவர்கள் அக்கப்பலை நடத்திக் கொண்டுபோய் ஸ்பெயின் நாட்டு ஆவெஞ துறையிற் சேர்த்தனர்.

அக்கப்பல் தலைவர் ஆவெஞ ஆட்சியாளரிடஞ் சென்று, "ஐயா! எங்கள் கப்பலுக்கு ஊறுபாடு ஏற்பட்டு உங்கள் கரைக்குக் கப்பலுடன் வந்து அடைக்கலமாகச் சேர்ந்துவிட்டோம். நாங்கள் எங்கள் கப்பலைப் பழுதுபார்த்துக்கொண்டு எங்கள் வழியேபோய் விடுகின்றோம். அதுவரையில் எங்களைச் சிறைப்படுத்தாமல் நொதுமலர் போல் நடத்தவேண்டுமாய்க் கேட்டுக்கொள்கின்றேன்," என்றார்.

அவ்வேண்டுகோளுக்கிரங்கி ஆவெஞ ஆட்சியாளர், அக்கப்பல் தலைவரின் மனப்படியே கப்பலைப் பழுதுபார்த்துக்கொண்டு எவ்வித ஊறுபாடுமின்றித் தமது நாடுபோய்ச் சேரலாமென்று உத்தரவளித்ததுந் தவிர, அவர்கள் அங்குத் தங்கியிருக்கும் வரையில் அவர்கட்கு வேண்டிய உதவிகளையுஞ் செய்துவந்தார்.

இவ்வாறு அவ்வெலிசபெத் என்னும் கப்பல் புத்துயிர்பெற்று ஆவெஞத் துறையினின்றும் எல்லா நலத்துடனும் தேம்ஸ் நதித் துறைபோய்ச் சேர்ந்தது. பகையாளரிடமும் பெருந்தகைமை காட்டிய ஆவெஞ ஆட்சியாளரின் செய்கை புகழத் தக்கதொன்றன்றோ?

க. பகையாளியை அடியோடழிக்க வல்லமையிருந்தும், பெருந்தகைமையால் அவ்வாறு செய்யாதவன் வெற்றியாளனுக இருப்பதற்கென்றே பிறந்தவனுவான்.

இலவேந்தர்.

உ. போாண்மை என்ப தறுகண் ஒன்றுஉற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு.

வள்ளுவர்.

———

## உஅ. ஆண்மையுடைமை

இடுக்கணில் உளத்திட்பங்கொண்டு அதனை எதிர்த்து நிற்பதே ஆண்மையுடைமை யாகும். ஆரியர் இதனை வீரம் என்பர். இடுக்கணை எதிர்த்து நிற்பது நற்பயனைத் தருவதாயின் தகுதியுடையதே. துன்பத்தினின்றோ, சாக்காட்டினின்றோ ஒருயிரை நீக்கிவிடுவது, கொள்ளை யடிப்போரை எதிர்த்து நம் உயிரையும் உடைமையையும் காப்பாற்றிக் கொள்வது, பகைவர் தாக்குதலினின்றும் நமது நாட்டைக் காப்பது முதலியன ஆண்மையுடைமை யாகும். பிறர்க்குக் கேடிழைப்பதில் ஊக்கங்காட்டுவது அறச்செயலாகாது. அஃது ஆண்மையுமன்று. ஒருகொள்ளைக்காரனும் உளத் திண்மை காட்டுகின்றான்; ஒருநாட்டார் வேறொரு நாட்டாரைத் துன்புறுத்த மனவலிமைகொண்டு எதிர்க்கின்றனர்; இவை முதலானவைகளில் மனவுறுதி காட்டுதல் ஆண்மைத்தன்மை யாகாது. பகைவர் சேனையை மனவன்மையோடெதிர்த்து வெற்றிபெறுகிற சேனைத்தலைவர்களை ஆண்மையுடையவ ரென்கின்றனர். அவர்தம் வெற்றி எதிராளிகளுக்குத் தீங்கிழைப்பதை நோக்கியதாயின், அஃது ஆண்மைத்தன்மை யுடையதென்பதற்குத் தகுதியற்றதே யாகும்

### 1. ஓர் ஆண்மைச் சிறுமி

ஒரு நூற்றாண்டுக்கு முன்பு இங்கிலாந்தின் வடகீழ்க்கரையோரத்தில் ஒரு கப்பல் புயற்காற்றினால் அடிபட்டு உடைந்து போய்ப் பாறைகளின் நடுவில் நின்றுவிட்டது. அதற்குள்ளாகக் கப்பலிலிருந்த பெரும்பான்மையான மக்களைப் புயலலைகள் அடித்துக் கொண்டுபோய்க் கடலாழத்திற் சேர்த்துவிட்டது. கப்பல் இருந்த பாறைகளின்மீதும் புயல்கள் அடித்துக்கொண்டே இருந்தபடியால் அக்கப்பலில் எஞ்சியிருந்த சிலரும் இடுக்கணுக்குட் பட்டிருந்தனர்.

அக்கரை யோரத்திலிருந்த கலங்கரை விளக்கத்துக்கு காவலாளியாக இருந்தவர் அக்கப்பலின் இரக்கநிலைகண்டு வருந்தி, அதனுள்ளிருந்த மக்களைக் காபாற்றிவிட மனவிரைவுகொண்டனர். ஆயினும் அவரிடமிருந்த சிறு படகு அலைமோதுதலைத் தாங்கக்கூடுமாவென்று ஐயுற்றுத் தயக்கங்கொண்டார். அந்நிலையில் அவர்தம் மகள் இருபதாண்டுப் பெண் அவரை நோக்கி,

"அப்பா! அஞ்சாதீர்; யான் உடன்வந்து ஒருபக்கத் துடுப்பைத் தள்ளிக்கொண்டு வருகிறேன், புறப்படும்," என்றாள். இதனைக் கேட்ட தந்தையார் மனவெழுச்சி கொண்டு தம் மகளுடன் படகேறிக் கப்பலையணுகி விட்டனர். ஆங்கு எஞ்சியிருந்த ஒன்பதின்மரைத் தங்கள் படகில் ஏற்றிக்கொண்டு நலமே இருவரும் இருப்பிடம் சேர்ந்து, விடுவிக்கப்பட்ட மக்கட்கு வேண்டிய உதவிசெய்து அவர்களை நலப்படுத்தினர்.

இச்சிறுமியின் தாராள மனப்போக்கு பல மக்களின் கருத்தில் ஊன்றிவிட்டது. அவளைப் புகழாத மக்களில்லை. அப்பெண்மணியின் ஆண்மைச் செய்கையின் காட்சியை ஓவியவல்லோர் சித்திரித்தெழுதப் பல புகைப்படங்கள் எடுக்கப்பட்டன.

பல மக்கள் பணமுஞ் சேர்த்து ஒரு பெருந்தொகையாகப் பரிசளித்தனர். குலமக்கள் பலர் அவளுக்குப் புகழ்ப் பாராட்டுகளும் எழுதியனுப்பினர். அவள் ஒருகால், "மக்கள் என்னை இவ்வாறு புகழ்ந்திராவிட்டால் யான் ஓர் அற்புதச்செயலை இயற்றினேனென்று எண்ணியிருக்கமாட்டேன்!" என்றாளாம். என்னே அவள்தன் ஆண்மையும் அடக்கமும்!

## 2. கோல்லன்மகன் தாமன்

மான்செஸ்ட்டர் நகர் இருக்கையாளராகிய டாக்டர் எயிகன் என்பவர் தாம் நேரிற்கண்ட வரலாறு ஒன்றினைத் தமது நாட்குறிப்பிலெழுதியிருக்கின்றார். அது:—

"இந்நகரில் ஒரு கொல்லன் இருந்தான். அவன் நல்ல வேலைக்காரன். ஆனால் அவன் பெருங் குடியன்; தன் வருமானத்தையெல்லாம் குடியிலேயே செலவழித்துவிடுவான். குடும்பம் எப்படிப் போனாலும் அவனுக்குக் கவலையில்லை. இவனுக்குத் தாமன் என்கிற ஒரு பிள்ளையுண்டு. அவன் தந்தையின் கூடவே எப்போதும் இருப்பான். பத்துப் பன்னிரண்டு அகவையிலேயே அவன் தன் தந்தையுடன் வேலையிலிறங்கிவிட்டான். தனக்கென்று கொடுக்குங் கூலியை ஒரு காசும் தந்தை கைக்கெட்டவிடாமல் எடுத்துக் கொண்டு வந்து தாயாரிடம் கொடுத்துவிடுவான். இவன் அவ்வாறு செய்திராவிட்டால் அக்குடும்பம் இருந்த இடந் தெரியாமலே போயிருக்கும். மேலும் அவன் தந்தையாருக்கும் கூடியவரையிற் பணிவுகாட்டியே நடந்துவந்தான். இத்தகைய மகன்மேல் பெற்ற தாய்க்கு மெத்த அன்பிருப்பது இயற்கைதானே!

ஒருநாள் தாமன் சுண்ணாம்புக் கூடையைத் தன் தலைமேல் தாங்கிக்கொண்டு ஏணிமேலேறிப் போய்க்கொண்டிருந்தான். கீழே செங்கற் குவியலின்மேல் தவறி விழுந்துவிட்டான். முழங்கா

லொடிந்து குருதி வெள்ளத்தில் மெய்ம்மறந்து மூர்ச்சையாய்க் கிடந்தான். அண்டையிலுள்ளார் ஓடிவந்து அவனைத் தூக்கி ஒரு புறங் கிடத்தி முகத்தில் தண்ணீர் தெளித்தனர். அவன் மூர்ச்சை தெளிந்து மென்குரலோடு, "என் தாய் என்ன கதியடைவாளோ?" என்றான்.

பிறகு தாமன் வீட்டுக்குக் கொண்டுபோகப்பட்டான். அறுவை வைத்தியர் அவன் காலுக்குப் பரிகாரஞ்செய்து என்பு கூடும்படி மருந்துவைத்துக் கட்டுக்கட்டினர். நான் அப்போது அவ்விடத்தி லேயே இருந்தேன். வைத்தியர் அறுவை செய்தபோது அவன் பொறுத்துக்கொண்டு அமைதியாக இருந்தான். தாயார் அவ னைப்பார்த்துக் கண்ணீர்விட அவன் அவரை நோக்கி, "அம்மா! வருந்தாதே! யான் விரைவிலேயே நலமடைந்து எழுந்துவிடு வேன்," என்றான்.

தாமன் எழுத்தறியாத ஏழை; ஆனாலும், அவனை என்னு டைய ஆண்மையாளர் பதிவுப் பட்டியலில் பதிவுசெய்து வைத் திருக்கின்றேன்,'' என்பது.

—

## ௨௯. தாய்நாட்டுப் பற்று

பிறந்துவளர்ந்த நாட்டின்மீது பற்றுடைமை மக்கட்கு இயற்கைப் பண்பாக அமைந்துளது. தம் நாடு, பிறர்க்கு உதவியற்றதும், நாகரிகமற்ற மக்களையுடையது மாகக் காணப்படினும், அந்நாட்டு மக்களும் நாட்டுப்பற்று உடையவர்களாக இருப்பது உலக இயற்கை. நாட்டுப்பற்று ஒரு நாட்டு மக்களைத் தந்நாட்டு நலத்தில் அக்கறை யெடுத்துக்கொள்ளும்படி செய்கிறது; பகைவர் தாக்குதலினின்றும் காத்துக்கொள்ளச் செய்கிறது; நாட்டுப் பொதுநன்மையை உயர்த்தச்செய்கிறது; நாட்டாருக்கெல்லாம் அன்பு காட்டச் செய்கிறது; நாட்டு அரசியலை விரும்பச் செய்கிறது; நாட்டில் நிறுவப்பட்ட அறச்சாலைகளின் நலத்தைக் கோரச் செய்கிறது. நாட்டின் நல்வாழ்க்கையிற் கருத்து வைக்கச் செய்கின்றது; நாட்டில் அமைதியும் மகிழ்ச்சியும் நிறைந்திருக்கச் செய்கின்றது; தம் நாடு வேற்றரசு நாடாக இருந்தால் இத்தகைய நற்பண்புகளெல்லாம் அந்நாட்டு மக்கட்கு மனத்திற் றோன்றுது; மேலும் அது நாட்டுத் தப்புத் தவறுகளைத் திருத்தச் செய்கின்றது. தம் நாட்டைப் போன்று பிறநாடுகளும் நன்னிலையி லிருக்கவேண்டுமென்று எண்ணச் செய்கின்றது; தக்க காரணமின்றி வேற்றுநாட்டின்மேற் படையெடுப்பதைத் தவிர்க்கச்செய்கின்றது; பிற நாட்டு நலங் கெடின் தந்நாட்டு நலமும் ஊறுபடும் என்பதை யறியச்செய்கின்றது.—இவ்வாறு மக்களின் நாட்டுப் பற்று உலக நலத்தையே விரும்பச் செய்கின்றது.

### 1. உண்மையான நாட்டுப்பற்று

தெமிஸ்ட்டாகனிஸ் என்பவன் அத்தீனியா நாட்டுச் சேனைத் தலைவன்; அவன் ஒரு பெரும் வீரனுகவு மிருந்தான். ஆனாலும் அவன் நேர்மையுடையவன் அல்லன். அவன் மட்டற்ற நாட்டுப் பற்றால் தன்னாட்டின்மீது பகைமைகொண்ட லாசிடொமென் மாகாணத்தை அடியோடு அழித்துவிட வேண்டுமென்னும் தகுதி யற்ற எண்ணங்கொண்டிருந்தான். ஒரு காலத்தில் லாசிடொமென் மாகாணத்துக் கப்பற்படைகள் உள்பட ஏனைய கிரேக் மாகாணக் கப்பற்படைகளெல்லாமும் அதீனியா நாட்டுக்கடுத்த ஒரு துறையில் தங்கியிருந்தன. அவைகளையெல்லாம் மறைவாக எரித்துவிட

வேண்டுமென்று எண்டான் தெமிஸ்டாக்ளிஸ் எண்ணினன். ஆனல் இவ்வெண்ணத்தை அவன் குடிமக்களின் உடன்பாடில்லாமல் நிறைவேற்ற அவனல் முடியாது.

அக்காலத்தில் அதீனியாவில் அரிஸ்டிடீஸ் என்னுங் குலமகனெருவனிருந்தான். அவன் அக் குடிமக்கட்கு மிகவும் வேண்டியவன். அவனிடம் அவர்கட்கு மிக்க நம்பிக்கையுண்டு. தெமிஸ்ட்டாக்ளிஸ் அவனை யழைத்து அவனிடம் தன் எண்ணத்தை வெளியிட்டுக் குடிமக்களின் உடன்பாடு பெறுதற்குக் கேட்டுக்கொண்டான். அவன் அவ்வாறே அவர்களிடம் தெமிஸ்ட்டாக்ளிஸ் எண்ணத்தைத் தெரிவித்து, ''அச்செய்தி அதீனவை உயரச்செய்வதாயிருந்தாலும் நேர்மையுடையதன்று,'' என்றான். அதனைக் கேட்டவுடனே குடிமக்களெல்லோரும் ஒரே மனதாய், ''சேனைத்தலைவர் தமது கருத்தை அடியோடொழித்துவிடவேண்டும்,'' என்று சொல்லி விட்டார்கள்.

நாட்டுக்கு எவ்வளவுதான் நலந்தருவதா யிருந்தாலும், உண்மையும் நேர்மையும் அற்ற செயல்களில் முயல்வது சீரிய நாட்டுப் பற்றாகாது.

## 2. ஓர் உண்மைவரலாறு

இங்கிலாந்தில் மூன்றும் எட்வர்ட் அரசாண்ட காலத்தில் அந்நாட்டுக்கும் பிரான்சுக்கும் பகை விஞ்சியிருந்தது. அப்போது எட்வர்ட் பிரான்சியக் கலே நகரை முற்றுகையிட்டான். அம்முற்றுகை ஓராண்டுக்குமேல் நீடித்திருந்தும் முடிவொன்றுங் காணப்படவில்லை. ஏனெனில் பிரான்சியர் நாட்டுப் பற்றுக்கொண்டு, கோட்டையைத் தறுகணுண்மையோடு காத்துவந்தனர். எட்வர்டும் முற்றுகையை விட்டானில்லை. கலே கோட்டையில் வரவர உணவுப் பொருள்கள் குறைந்துபோய்ப் போர்வீரர் பட்டினிகிடக்க நேரிட்டுவிட்டது. பசிவந்திடப் பத்தும் பறந்து போய்விடுமல்லவா?

அதுகாலை என்செய்வர் பிரான்சியர்! எட்வர்ட் அரசருக்கு இணங்கிவிடவேண்டியதுதவிர வேறெரு வழியுங் கண்டாரில்லை. அப்போது பிரான்சியக் குலமகனெருவன் எட்வர்டிடம் வந்து வணக்கத்துடன் தன் நாட்டு இரக்க நிலையைத் தெரிவித்து, முற்றுகையைக் கலைத்துவிடக் கேட்டுக்கொண்டான். அதற்கு எட்வர்ட் பிரான்சியர் கோட்டையை விடாமல் தனக்குக் கொடுத்து வந்த துன்பங்களை யெண்ணி மீளாச் சினங்கொண்டு சொல்கின்றன்:— உங்களில் மேட்டிக்குடிகள் அறுவர் தலைமுடி கால்முடியின்றி ஒவ்வொருவரும் தம் கழுத்தில் தூக்குக் கயிறுகளைத் தொங்கவிட்டுக் கொண்டு, எம்மிடம் வந்து எம் கால்களிற் பணிந்து வணங்கி,

நகர்க்கோட்டைச் சாவிகளை எம்மிடம் ஒப்புவித்துவிடவேண்டும்; மற்றப்படி அவர்களுக்கு யாம் கொடுக்கும் தண்டனை எவ்வளவு கடுமையானதாக இருந்தபோதிலும்—தலையை வாங்குவதாக இருந்தாலுங்கூட—அவர்கள் அதற்கு உட்பட்டு எம்மிடம் வரவேண்டும். இவ்வாறு நடைபெறுவதானால் கலே நகரின் கோட்டைச் சேனையும் ஏனைய குடிமக்களும் நம் தயையைப் பெறுவர்'' என்றான்.

இவ்விரக்கச் செய்தி பிரான்சு நாடெல்லாம் பரவலாயிற்று. உயிரென்றால் எவர்க்கும் இனிப்புத்தானே! தான் பெற்ற பிள்ளைக்காகவும் ஒருவன் உயிர்விடுதல் என்பது உலகத்தில் அருமையன்றோ? அப்போது அந்நாட்டில் யூஸ்டஸ் என்னும் தன்னலங் கருதாத் தன்மையன் ஒருவன் முதன்முதல் அவ்வாறே எட்வர்டிடம் போக முன்வந்தான். அவன் புகழ் அந்த நாட்டில் எப்போதும் நிலைநிற்குமல்லவா? அவனைப் பின்பற்றி வேறோர் ஐந்து நாட்டுப் பற்றுள்ள மக்களும் அவனைப்போல் உயிரிழக்கவும் முன்வந்துவிட்டார்கள்! என்னே பிரான்சியர்களின் நாட்டுப்பற்று! எட்வர்ட் நூறு மக்களை அவ்வாறு வரும்படி கேட்டிருந்தாலும் அந்நாடு தயங்காதுபோலும் இவ்வறுவரும் எட்வர்டின்மானக்கேடான திட்டங்களுக்குட்பட்டு அவன்முன் சென்று நின்றனர். எட்வர்ட் அவர்களைக் கண்டவுடன் வெகுளிமேலிட்டு, ''முற்றுகையை நீளச் செய்து எமக்குப் பற்பல தொந்தரைகளைக்கொடுத்தீர்களல்லவா?'' என்று சினமொழிகூறி, பிரான்சு மேட்டிக்குடிகள் அறுவர்களின் தலைகளை வாங்கிவிடக் கட்டளை பிறப்பித்தான்.

இச்செய்தி அத்தறுவாயில் இங்கிலாந்திலிருந்த அரசப்பெருந் தேவியார்க்கு எட்டிற்று. அவ்வம்மணி மனமிரங்கி வந்து கலேயில் தம் கணவனாரைக்கண்டு வணங்கி,— ''என்னருமைக் காதலரே! பிரான்சு மேட்டிக்குடிகள் அறுவரின் உயிர்ப்பிச்சை கேட்க அடியேன் கடல்கடந்து ஓடிவந்திருக்கின்றேன்; கருணைகூர்ந் தருளும்'' என்றாள்.

எட்வர்ட் தன் மனைவியாரை ஏற இறங்கப் பார்த்து, ''பெண்ணரசே! இத்தறுவாயில் நீ இங்கிலாந்திலேயே இருந்திருக்கப்படாதா! என் மனப்போக்குக்கு மாறுபட்ட ஒன்றைக் கொண்டு வந்துவிட்டாயே!'' என்று எண்ணினபடியே இருந்து, ''உயர் மனங் கொண்ட உயிர்த்துணையே! இஃதோ இம் மேட்டிக்குடிகளை உன்னிடம் ஒப்படைத்துவிட்டேன்! உன் மனம்போற் செய்து கொள்வாயாக!'' என்று வாக்குக்கொடுத்துவிட்டான்.

அறுவர்தம் நாட்டுப்பற்றும், அம்மையாரின் இரக்கச்செயலும் பொன்னெழுத்துக்களாற் பொறித்துவைக்கத் தக்கனவன்றோ!

## ௯௦. உயர்மனக் கொள்கை

மக்கள் இவ்வுலகில் நல்லுணவு, நல் உடை, நல் லிருக்கை முதலியவைகள் பெற்று இன்ப வாழ்க்கை செய்ய வேண்டுமானல், அவர்கள் உடலால் உழைத்துப் பாடுபட வேண்டும். தமது உடல் இன்பநலத்தோடிருக்க விரும்பு வோர் அளவாக உணவும் நீரும் கொள்ளவேண்டும். மக்கள் தம்மை நல்லவர்களென்று எண்ண விரும்புவோர் மரியாதையும், அடக்கமும், அன்பும் உள்ளோராகவும் பிறர்க்கு ஒரு தீங்கும் செய்யாதவராகவும் இருக்க வேண்டும்; ஆகவே, இக் குணங்களெல்லாம் மக்களுக்கு இன்றியமையாதன ஆகும்.

மனிதன் இவ்வுலகிற் காண்பன நுகர்வன தவிர, தாம் வேறென்றிலும் தொடர்புடையவனு யிருக்கின்றேம் என்பதை அறிந்திருக்கின்றான். அவன் தானும், இவ்வுல கும், ஏனைய உலகங்களும் எப்படி உண்டாயிருக்கின்றன என்று உள்ளுக்குள்ளே கேட்டுக்கொள்கின்றான். நினைவும் உணர்ச்சியுங் கொண்டிருக்கின்ற தன் மனம் தனது நிலை யற்ற உடலைப்போன்று அழிந்துபோகக்கூடிய ஒரு பொருளா, இல்லையா? என்பதை ஆராய்ச்சி செய்கின்றான். இதற்கு விடை பேரறிஞர்களாகிய ஆன்றோர்கள் அருளி யிருக்கின்றார்கள். அஃதாவது:—

உலகங்களும் அதனில் உள்ளவைகளும் எல்லாம் வல்ல ஒரு பரம்பொருளால் படைக்கப்பட்டிருக்கின்றன; ஆன்மாவோ உடலழிந்தபின் வேறொருநிலையிற் பொருந்தி யிருக்கும். இவ்வாறு மனிதன் வேறொரு புத்தொளியில் இருப்பதாகத் தன்னைக் காண்பான்; மனிதன் இவ்வுலகில் மகிழ்ச்சியாக இருக்க நாடுவதுமல்லாமல், இதனைவிட ஒரு சிறந்த மேன்மையான நிலைக்குச் சென்று கொண்டிருக்கின் றான். அதனில் அவனுடைய இன்பமோ துன்பமோ தற் கால நிலையைவிட அளவுபடாததாக இருக்கும்.

பேரறிவாளரான ஆன்றோர் வாக்குகளை ஓர்ந்தறித லும், அவைகளுக்குத் தக்கபடி நின்று நடக்கைக்குக்

கொண்டு வருதலும், அவ்வாறு பிறரை நடத்திவைத்தலும் சிறந்த அன்புள்ள கடமையாகும். இவ்வருள் வாக்குக்களைப் பற்றி மக்கள் பல்வேறு வகைப்பட்ட கொள்கைகளைக் கொண்டு சண்டையிட்டுச் சச்சரவுபடுகின்றார்கள். இவ் வேறுபாடுகளினின்றும் மக்கள் தங்களைக் காத்துக் கொள்ளல் வேண்டும் என்றும் தம் கொள்கைகளைப் போன்று பிறர் கொள்கை இல்லையென்று அவர்கள்மேற் சீற்றங்கொள்ளல் முதலியன கூடாதென்றும் ஆணையிட் டிருக்கின்றனர்.

இவையேயன்றி மக்கள் மேலும், கீழும், நாலா பக்கங் களிலுமுள்ள பொருள்களைப் பற்றிச் சிந்தித்தறிய வேண் டும். இவ்வுலகைப் போன்று பல்வேறு உயிர்களையுடைய எண்ணிக்கைக்குட்படாத உலகங்களை அடக்கிக்கொண்டி ருக்கின்ற வானவெளிப்பரப்பைப் படைத்தது எது? இவ்வுலகங்களை யெல்லாம் தத்தம் இடத்தில் நிலைக்கவைத் துக் காத்துவருவது எது? இவ்வுயிர்களுக்கென்று வானில் ஞாயிற்றையும் திங்களையும் ஒளிரச்செய்து, அவைகட்கு வேண்டிய உணவுப்பொருள்களையெல்லாம் ஆக்கிவைப் பது எது? இவ்வுயிர்கள் திட்டப்படுத்திய வழிகளில் இருந்து வாழச்செய்வது எது? இவைகளையெல்லாஞ் சிந் திக்கச் சிந்திக்க உலகங்களையெல்லாம் படைத்துக்காத்து அழிக்கும் தகைமையுள்ள எல்லாம்வல்ல ஒரு முழுமுதற் பொருள் உண்டென்று மக்களாகிய நாம் உணர்கின்றோ மல்லவா?

எல்லா முதன்மையும் கொண்ட இச்சிறந்த நிலைக்கு நன்னெறிச் சட்ட திட்டங்களை அவ்வான்றோர் அமைத்துக் காட்டியிருக்கின்றனர். அவையாவன :—

க. எல்லாம் வல்ல முதலும் முடிவுமில்லாத முழு முதற் பொருள் ஒன்றே.

உ. தந்தை தாய்ப் பேண்.

ங. பிறன் இல் புகாதே.

ச. கள்ளத்தை உள்ளத்திற் கொள்ளாதே.

௫. பொய்ச்சான்று கூறுதே.
௬. இலமென்று வெஃகுதல் செய்யாதே.
௭. உன்னைப்போலவே பிறரிடமும் நட்புக்கொள்.
௮. எளிய மனத்தர் ஒளி உலகு அடைவர்.
௯. அழுதாற் பெறுவர் ஆண்டவன் அருள்.
௧0. அமைதியாளர் உலகம் ஆள்வர்.
௧௧. நன்னெறிப் பசிதாக முடையவர்கள் பசியாறு வார்கள்.
௧௨. தயை காட்டுபவர்கள் தயை பெறுவார்கள்.
௧௩. மனத்தூய்மை யுடையவர்கள் பரம்பொருளைக் காண்பார்கள்.
௧௪. நன்னெறியின் பொருட்டு உயிர் விடுபவர்களுடையதே ஒளி உலகம்.
௧௫. பிறர் மெய்ச்சப் பிச்சை வழங்காதே.
௧௬. நெறித் தவற்றை மனத்தின்கண் நினைத்தலே அதனைச் செய்த குற்றமாகும்.
௧௭. ஒருவன் குற்றமேயுடையவனுகவும்குணமேயுடையவனுகவும் இருத்தல் ஒவ்வாத தொன்று.
௧௮. உடன் பிறந்தாரிடம் ஒற்றுமை கொள்; பகைவரிடமும் அன்புகொண்டிரு.
௧௯. கரவுக் குணத்தை அறவே ஒழி.
௨0. தன்னெஞ் சறிவது பொய்யற்க.
௨௧. வாய்ச்சொல்லா லன்றிச் செய்கையினுலேயே ஒருவன் குணத்தை யறி.
௨௨. உடன் மக்கள் குற்றங்களை ஒன்றிரண்டு தடவை யன்று, என்றும் மன்னிப்பாயாக.
௨௩. நன்றி யறிவுள்ளவனுக இரு; நம்பிக்கையைக் கைவிடாதே.



